

# பியர்ஸ் டால்கம்

—அழகோடு பழகும் உறவு!




கொண்டாடுங்கள் பியர்ஸ் நறுமணத்தை—புத்தம் புதுமணம் அது, புதுமை கொண்டாடும் நறுமணம்! நெஞ்சுக்கு இன்ப நினைவே போல் கொஞ்சிப் பிரியாத வாசம்...உங்கள் நேசம் எவர்க்கும் உல்லாசம்! எந்நேரமும் புதுமை குன்றாத எழிலுக்கான டால்கம்: பியர்ஸ்! உங்கள் வனப்புக்குப் பாதுகாப்பான தூய, மென்குண கிளிசரின் சோப்பாகிய பியர்ஸ் சோப்பின் உற்பத்தியாளர்களால் தயாரிக்கப்படும் டால்கம்.

**பியர்ஸ்**—அழகுள்ள மாதர் வழிவழியாக
ஆண்டுவரும் அழகு சாதனச் செல்வம்!

2 சைஸ்களிலே வருகிறது:
பெரிய சைஸ், எகானமி சைஸ்.

PTP. 3 R-X52 TM லண்டனிலுள்ள ஏ. அண்ட் பியர்ஸ் சார்பாக இந்துஸ்தான் லீவர் லிமிடெடினால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

பிலவ கார்த்திகை 4 கல்கி நவம்பர் 19, 1961

# பொருளடக்கம்



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




மிகப் பழங்கால முதலாகவே அமெரிக்கப் பூர்வீகக் குடிகள் புகையிலையைப் பரம்பொருளிடமிருந்து பெற்ற வரப்பிரசாதமாகப் போற்றித் தொழுததுண்டு. விசேஷச் சடங்குகளின்போது புகையிலையை யாகத் தீயிலிடுவதும், மழையற்ற வரட்சியின் போது பொடித்த புகையிலையைக் காற்றில் தூவிவிடுவதும், மீன்கள் கிடைக்காத போது கடலில் புகையிலைத் தூள்களை இறைப்பதும் அவர்களிடமிருந்த சம்பிரதாயம்.



## புகையிலையின் வரலாறு... 2




GT.702 TM



மலர் 21

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிட்டடி பாப்பா —பாரதியார்

இதழ் 16

# குற்றச்சாட்டுக்குப் பதில்

சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கை வெளியானபின் காங்கிரஸின் பிரசாரத்தில் விஷமமும், விஷமும் ஏறியபடி இருக்கின்றன; விஷயம் குறைந்துகொண்டே வருகிறது.

"சுதந்திரக் கட்சி, காலத்துக்குச் சற்றும் ஒவ்வாத பழைய கோட்பாடுகளைக் கட்டிக் கொண்டு அழுகிறது. பொருளாதாரத்தில் எவ்வளவோ அபிவிருத்திகள் காண வேண்டியதிருக்க இந்நாட்டின் வியாபாரத்திலும், விவசாயத்திலும் சர்க்கார் தலையீடே யில்லாமலிருப்பது நடக்கிற காரியமா? திட்டங்கள் போடாமல் இந்த நாடு முன்னேற்றம் காணுவது சாத்தியமா? இவற்றை நிறைவேற்றுவதற்கு வேண்டிய நிதி வசதிகள் நம்மிடம் இல்லாதபோது பிற நாடுகளிடமிருந்து கடன் பெறுவது தவறா?" என்றெல்லாம் தரும நியாயம் கேட்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள். தாங்கள் கூறுவது அவ்வளவும் சரிதான் என்று அப்பாவி மக்கள் நம்பும்படி பேசுகிறார்கள்.

ஆனால் இதில் உண்மையை எவ்வளவு தூரம் திரித்திருக்கிறார்கள் என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கைகளை உள்ளபடி அறிந்தவர்களுக்குத் தெரியும். எந்த ஒரு விஷயம் குறித்தும் இரண்டு எல்லைகளில் மட்டுமே நின்று தீவிர வாதம் செய்யும் காரியத்தைத்தான் காங்கிரஸ் செய்கிறது என்று அவர்கள் உணர்வார்கள்.

சுதந்திரக் கட்சியானது சர்க்கார் தலையீடு குறைய வேண்டும், மக்கள் சுதந்திரம் பெருக வேண்டும் என்று கூறுகிறதென்றால், அதற்குச் சர்க்கார் தனது அதிகாரம் முழுவதையுமே இழக்க வேண்டும் என்று பொருள் இல்லை. 'ஒன்று இன்று உள்ளது போல் சர்வாதிபத்தியம், இல்லாவிட்டால் அராஜகம்தான்' என்பதுபோல் காங்கிரஸ்காரர்கள் உண்மையை மறைத்து வாதாடுகிறார்கள். மக்கள் எல்லாக் காரியங்களிலும் பரிபூரண சுயாதீனம் பெறுவதென்பது ஏட்டளவில் நிற்கும் கற்பனையே. சமூகம் கட்டுக்கோப்பாகவும், ஓர் ஒழுங்குக்கு உட்பட்டும் செயலாற்றுவதற்குச் சர்க்கார் ஆதிபத்தியம் ஓரளவுக்கு அவசியம்தான். ஆனால் ஓரளவுக்கு மட்டுமே இது அவசியம் என்று சுதந்திரக் கட்சி கருதுகிறது. காங்கிரஸோ சர்க்கார் மக்களின் எல்லாச் செயல்களிலும் இஷ்டப்படி பிரவேசித்து அடக்குமுறை செய்ய வேண்டும் என்று எண்ணுகிறது. நாடு ஐக்கியப்பட்டு இயங்குவதற்குத் தனி நபர்கள் தங்கள் சுதந்திரத்தை எவ்வளவு குறைவாக இழந்தால் போதுமானது என்று ஆராய்ந்து அந்த அடிப்படையில் அரசாங்கத்தை அமைக்க வேண்டும் என்பதே சுதந்திரக் கட்சியின் சித்தாந்தம். வியாபாரிகள் ஒன்று சேர்ந்து பொருள் வாங்கும் பொதுமக்களைச் சுரண்டாமலும், தொழிலதிபர்கள் தொழிலாளிகளைக் கொடுங்கோன்மை செய்யாமலும் பார்த்துக்கொள்வது சர்க்காரின் கடமை என்பதை அது எப்போதும் வலியுறுத்தி வந்திருக்கிறது. காங்கிரஸ் கூறுவதுபோல் நமது வளரும் பொருளாதாரத்தைத் தனி நபர்களின் தயவிலேயே விட்டுவிடப்போவதில்லை.

இதே போலத்தான் கடன் விஷயமும். நிதி வளப்பம் இல்லாத நம் நாடு செழிப்பான நிலையிலுள்ள நாடுகளிலிருந்து உதவி பெறுவது தவறல்ல. ஆனால் அவசியமற்ற பெரும் திட்டங்களைப் போட்டு, அவற்றுக்காக அடைக்க முடியாத பெரும் தொகைகளைக் கடன் பெற்று, நம் அந்தஸ்தை அடகு வைப்பதைத்தான் சுதந்திரக் கட்சி ஆட்சேபிக்கிறது. காங்கிரஸ் கட்சி பெரிய பெரிய திட்டங்களாகப் போடுவதற்குக் கார

ணம் அந்நிய நாடுகள் நம் முன்னேற்றத்தைக் கண்டு மலைக்க வேண்டும் என்பதுதான். ஆனால் இந்தத் திட்டங்கள் நிறைவேற அதே அந்நிய நாடுகளைத்தான் இன்றைய சர்க்கார் அண்டியிருக்கிறது. இந்த அறிவீனமான கொள்கையைப் பகுத்தறிவுள்ள எவரும் எதிர்க்கத் தானே செய்வார்கள்?

'காங்கிரஸ், ஆட்சி பீடத்திலிருந்து இறங்கி விட்டால் இன்று நடைபெறும் அபிவிருத்தி வேலைகள் யாவும் நின்று விடும்' என்று பூச்சாண்டி காட்டுகிறது ஆளும் கட்சி. இதுவும் கலப்படமற்ற ஏமாற்றுப் பேச்சு. மக்களிடமிருந்து வரி வசூலிக்கும் எந்த அரசாங்கமும் நாட்டின் முன்னேற்றப் பணியைச் செய்யாமல் இராது. வரிப் பளுவைச் சுதந்திரக் கட்சி வெகுவாகக் குறைக்கும். இன்று காணும் வீண் விரயங்களையும் அதே போலக் குறைக்குமாதலால், குறைந்த அரசாங்க வருமானத்தைக் கொண்டே பொதுமக்களுக்கு இன்றுவிட அதிக நலன்களை அது அளிக்கும். காங்கிரஸ் அநியாயமாகக் கூறுவது போல் இன்று தொடங்கியுள்ள அநேக காரியங்களை அந்தரத்தில் விட்டுவிடாது. அவற்றை நிறைவேற்றி வைக்கும். பிரிட்டிஷ் சர்க்கார் மறைந்து விட்டதால் அவர்கள் நமக்கு அளித்த ரயில்வேயோ, சாலைகளோ, தபால் தந்தி இலாகாவோ மாயமாக மறைந்து விட்டனவா என்ன? அவை மேன்மேலும் விருத்தி யடைந்து தானே வருகின்றன? அதே போலக் காங்கிரஸ் கட்சி சிம்மாசனத்திலிருந்து இறங்கி விடுவதால் இன்று காணும் பொதுநலக் காரியங்களுக்கு ஒரு குந்தகமும் விளையாது என்பது நிச்சயம்.

சுருங்கச் சொன்னால் நலிவுற்ற தேசத்துக்கு அளிக்கும் மருந்துபோலவே திட்டங்களும், அந்நியக் கடன்களும், பொருளாதாரக் கட்டுப்பாடுகளும் என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை; இந்த மருந்தேதான் உணவு என்று மூடப் பிடிவாதம் பிடிப்பது காங்கிரஸின் கொள்கை. அதோடு நில்லாமல் மருந்தை மருந்தாக உபயோகிக்க வேண்டும் என்று சொல்பவர்கள் நோயாளியையே கொன்று விடுவார்கள் என்று அது குற்றம் சாட்டுவதுதான் விந்தை!

# மகாத்மாவின் உயில்

அண்ணல் காந்தி தாம் மறைவதற்கு மூன்று நாட்களுக்கு முன்பு 'ஹரிஜன்' பத்திரிகைக்காக எழுதிய ஒரு கட்டுரையை இப்போது படித்துப் பார்த்தால் மரணம் என்பது அவருக்குக் கிடைத்த ஒரு வரப்பிரசாதமோ என்று எண்ணத் தோன்றும்.

காங்கிரஸ் கட்சியிடமிருந்து அவர் என்னென்ன எதிர்பார்த்தாரோ, அக்கட்சி எப்படியெல்லாம் இயங்க வேண்டுமென விரும்பினாரோ அதற்கு முற்றிலும் மாறான முறையில் அந்த ஸ்தாபனம் செயல்பட்டு வருகிறது.

'இனி அந்தக் கட்சி ஆட்சிப் பொறுப்பிலேயே கண்ணாக இருக்கக் கூடாது. ஆக்கரீதியில் பொதுஜன சேவை மட்டிலுமே புரிய வேண்டும்' என்ற கருத்தை காந்திஜி அக்கட்டுரையில் கூறியிருக்கிறார். தேர்தலில் அது வகிக்க வேண்டிய ஸ்தானத்தைப் பற்றி அவர் கூறியிருப்பதற்கும், பிரத்தியட்ச நிலைமைக்குமுள்ள மாறுபாடு மலைக்கும் மடுவுக்கு முள்ளதாக இருக்கிறது. வாக்காளர் பட்டியல்கள் தவறின்றித் தயாராகின்றனவா என்று பார்வையிட்டு அவற்றைச் சரி செய்வதொன்றே காங்கிரஸ் கட்சியானது தேர்தலில் ஆற்ற வேண்டிய பொறுப்பு என்று அதில் காந்தி அடிகள் எழுதி யிருக்கிறார். ஜனநாயகத்தை நிறுவுவதில் மக்களுக்குள்ள உரிமை அவர்களது ஓட்டுச் சீட்டின் வழியேதான் பிரயோகமாகிறது. எனவே அந்த உரிமையின் பெருமையை அவர்களுக்குக் காங்கிரஸ் உணர்த்த வேண்டும் என்கிறார் காந்திஜி. பயத்தினாலோ பணத்தினாலோ இந்தப் புனித உரிமை மாசுபடாமல் காத்துத் தர வேண்டிய கடமையைக் காங்கிரஸ் செய்ய வேண்டும் என்று அவர் எதிர்பார்த்திருக்க இன்று நாம் காண்பதென்ன? சென்ற தேர்தலின் போது வாக்காளர் பட்டியலில் காணப்பட்ட எத்தனையோ விசித்திரங்களுக்குக் காரணம் காங்கிரஸ் கட்சிதான் என்பது பகிரங்கமான உண்மையில்லையா? அதோடு காங்கிரசை ஆதரிக்கும் ஜனத்தொகை பெரும்பான்மையாக இருக்கும் முறையில் தேர்தல் தொகுதிகளையே மாற்றியமைத்த விநோதத்தையும் அப்போது கண்டோமல்லவா? வரவிருக்கும் தேர்தலில் காங்கிரஸ் கட்சியானது பணத்தையும் அதிகாரத்தையும் கொண்டு மக்கள் உரிமையைக் களங்கப்படுத்தப் போவது பற்றியோ சொல்லவே வேண்டாம்.

'காங்கிரஸ் கட்சி ஆண்டவனின் பணியாளேயன்றி வேறெவ்விதத்திலும்




செயல்படவில்லை என்று உலகறியச் செய்ய வேண்டும்' என்று காந்திஜி எழுதியிருக்கிறார். 'அதிகாரத்துக்காகப் பூசல் இட்டபடி யிருந்தால் ஒரு நாள் அது இருந்த இடம் தெரியாமல் போய் விடும்' என்றும் அவர் கூறியிருக்கிறார். இன்று அதிகாரம்தான் காங்கிரஸின் ஆண்டவன். எனவே காந்தியடிகளின் பெயரைச் சொல்லி இன்றைய காங்கிரஸ் ஆதரவு கேட்பதில் சற்றும் நியாயம் இல்லை. மகாத்மாவுடன் சம்பந்தப்பட்டிருந்த பழைய காங்கிரஸ் அல்ல இன்றுள்ள சோஷலிஸக் காங்கிரஸ் என்பதை காந்திய வாதிகள் எல்லாரும் தெளிந்து தங்கள் வாக்குரிமையை உபயோகிக்க வேண்டும்.

## மனிதர் ஒருவர்: குரல்கள் இரண்டு

நேரு அவர்களின் அமெரிக்க விஜயத்தை யொட்டி காங்கிரஸ் சர்க்காரின் போக்கில் நல்ல மாறுதல்கள் தோன்றியுள்ளன. அசுர சக்தி படைத்த அணுகுண்டை வெடித்த ருஷியாவை வெளிப்படையாகக் கண்டிப்பதா, கூடாதா என்று தயங்கிக் கொண்டிருந்த பிரதமர் அமெரிக்கா சென்றபின் இந்தத் தயக்கத்தை விட்டுக் கண்டனம் தெரிவித்திருக்கிறார். நிறுத்தி வைத்திருந்த சோதனை வெடிப்பைத் தொடங்கியது ருஷியாதான் என்பதை அவர் ஒப்புக் கொண்டிருக்கிறார்.

ருஷியாவின் நிழலிலுள்ள கிழக்கு ஜெர்மனியைக் கடந்து, மேலை நாடுகள் மேற்கு பெர்லினுக்குச் செல்லத் தடைகள் இருக்கலாகாது என்பதையும் நேருஜி ஒப்புக் கொண்டிருக்கிறார். ஜெர்மனிப் பிரச்னையில் இந்தியா இதுவரையில் பின்பற்றி வந்த 'மதில்மேல் பூனை'க் கொள்கையை ஓரளவுக்கு விட்டுக் கொடுத்து, நியாயம் உள்ள சாராருடன் சேர ஓரடி முன் வருவதை வரவேற்க வேண்டியதுதானே?

எனினும் நேரு அவர்கள் இந்தியாவில் இருந்த வரையில் இந்த அபிப்பிராயங்களைத் தெரிவிக்காமல் அமெரிக்கா சென்றவுடன் புத்தறிவு பெற்றுப் பேசியிருப்பதுதான் நம்மைச் சற்று யோசிக்க வைக்கிறது. பெல்கிரேட் மகாநாடு ஆனபின் மாஸ்கோவுக்குச் சென்றபோது பிரதமரின் குரல் ஒரு மாதிரி ஒலித்தது. இந்தியா வந்தபின் அது சற்றே மாறியது. இப்போது அமெரிக்காவிலோ அது முற்றிலும் மாறிவிட்டிருக்கிறது. இந்த அந்நிய நாட்டு விஜ

டங்கள் நமது மாபெரும் யாசகத் திட்டங்களுடன் பின்னிப் பிணைந்தவை என்பதை மனத்தில் கொண்டு பார்த்தால் தான் இந்த வித்தியாசத் தொனிகளுக்குக் காரணம் புரியும்.

நடுநிலைமை நாடுகளை எப்படியாவது தங்கள் பக்கம் கவரக் கூடிய வாய்ப்பை வல்லரசுகளும் நழுவவிடுவதில்லை. இதற்கேற்ப இந்த அமெரிக்க விஜயத்தினால் கென்னடி அவர்களின் பேரபிமானத்தைப் பெற்று விட்டார் நேருஜி. 'மக்கள் சுதந்திரம் என்பது சர்க்கார் கையிலிருந்து வருவதல்ல; ஆண்டவனிடமிருந்தே மக்கள் பெற்றவை' என்று பேசிய அதே அமெரிக்க ஜனாதிபதி நமது சோஷலிஸப் பிரதமரை 'தனி நபர் சுதந்திரத்தின் தனிப்பெரும் பாதுகாவலர்' என்று பாராட்டி விட்டார்!

நேருஜியையோ, காங்கிரஸ் கட்சியையோ எந்தக் கோணத்திலிருந்து பாராட்டினாலும், தனி நபர் சுதந்திரம் குறித்து மட்டும் புகழ்ந்து பேசச் சற்றும் இடம் கிடையாது என்பதைக் கென்னடி அவர்கள் அறிந்தாரில்லை போலும்!

# கம்யூனிஸப் பாதையில் மேலுமோர் அடி

'தனி நபர் சுதந்திரத்தின் தனிப் பெரும் காவலர்' என்று அமெரிக்க ஜனாதிபதியினால் போற்றப்பட்ட நேரு அவர்கள் தனி நபர்களின் செயல் சுதந்திரம் மட்டுமின்றிச் சிந்தனைச் சுதந்திரத்துக்கும் உலை வைக்கும் ஓர் அரிய யோசனையை வெளியிட்டிருக்கிறார். பிரதமர் யோசனை தெரிவித்து விட்டார் என்றால் அது விரைவிலேயே செயலாவதற்குத் தடை ஏது?

தேசிய ஐக்கியப் பாட்டை நிலைநாட்டுவதற்காக மேற்கொள்ளவேண்டிய காரியங்களில் ஒன்று பாட புத்தகங்களைச் சர்க்காரே வெளியிடுவது என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார் நேரு அவர்கள். இதனால் மாணவப் பருவத்திலேயே மக்கள் யாவரும் ஒற்றுமை உணர்ச்சி பெறுவார்களாம். குறிப்பிட்ட மதத்தையோ, இனத்தையோ தாக்கக் கூடிய எதுவும் கல்வி அமைப்பில் இடம் பெறாதாம். இந்த விளக்கத்தை யாருமே ஏற்பதற்கில்லை. ஏனெனில் இன்று பாட புத்தகங்கள் யாவும் அரசாங்கத்தால் பரிசீலிக்கப்பட்டு அங்கீகாரமான பின்புதான் போதனைக்கு வருகின்றன. அவ்வாறிருக்கையில் இந்தத் துறையில் ஏதோ ஊழல்கள் இருப்பதாகச்சொல்லி அதனைச் சர்க்கார் வசமாக்குவதற்கு எந்த நியாயமுமில்லை. சர்க்கார் வெளியிட்ட ஓரிரு பாட புத்தகங்களில் மலிந்திருந்த பிழைகள் நீதி மன்றம் ஏறி அம்பலமாகியிருப்பதைக் கண்டவர்கள் நேருஜியின் யோசனையை எண்ணி நகைக்கிறார்கள்.

உண்மையில் நகைப்புக்கு இடமான சிறு விஷயமல்ல இது. சர்க்கார் பாட புத்தகம் தயாரிக்கிறதென்றால் அதன் மூலம் சர்க்காருடைய கருத்துக்களை இளம் உள்ளங்களில் புகுத்தும் ஆபத்து ஏற்படும். பாடபுத்தகத் தயாரிப்பு என்பது ஆளும் கட்சியின் பிரசார ஸ்தாபனமாகிவிடும் அபாயம் இதில் மறைந்திருக்கிறது. அதிலும், எதைச் சொன்னாலும் ஏற்கும் இள மனத்தில் பசுமரத்தாணி போல் தனது கொள்கைகளைச் சர்க்கார் பதிவாக்கி விட்டால் அவர்கள் வயது வந்த பின்னும் சுயமாகச் சிந்திக்கும் ஆற்றலை இழந்து விடுவார்கள்.

உயிரற்ற மக்கள் ஒருவரோடு ஒருவர் சச்சரவு இடமாட்டார்கள் அல்லவா? எனவே நமது எதிர்காலப் பிரஜைகளும் நேருஜி கருதுவதுபோல் கருத்து வேற்றுமை யென்பதில்லாமல் ஐக்கியமாக இருக்கக் கூடும்!

கம்யூனிஸ நாடுகளில் நடைபெறும் இந்தக் கொடுமை இந்திய மண்ணில் முளை விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நம் எல்லோருடைய கடமையாகும்.

இன்று ஆட்சியிலுள்ள கட்சி தரும வழியில் செல்கிறதா, இல்லையா என்பதை மட்டும் கொண்டு முடிவுக்கு வர வேண்டிய விஷயமல்ல இது. ஏனெனில் இன்று ஒரு வெகு நல்ல ஆட்சியே நடைபெற்று, அது தன் கொள்கைகளைக் கல்வியில் கலக்காமல் இருக்கக் கூடும். ஆனால் நாளைக்கே இந்தக் கட்சி அதிகாரத்திலிருந்து இறங்கி வேறொரு கட்சி பதவி ஏற்கலாம். அந்தக் கட்சியானது தனது பிரசார இயந்திரமாகப் பாட புத்தகங்களைப் பயன்படுத்திக் கொள்ள முற்படலாம். எனவே இது போன்ற யோசனைகளை, இன்றுள்ள ஆட்சியை அடிப்படையாக வைத்து ஏற்றுக்கொள்ளுவதோ, தள்ளுவதோ சரியல்ல. அந்த யோசனையின் தன்மையையும், எதிர்காலத்தில் அது துஷ்பிரயோகமாகக் கூடிய வாய்ப்புக்களையும் கருத்தில் கொண்டு உஷாராக இருக்கவேண்டும்.

# சுதந்திர சாஸனம்

அரசியல் நிர்ணயச் சட்டம் மக்களுக்கு உறுதி கூறி வழங்கியுள்ள ஆதார உரிமைகள் பழுதுபட்டு மங்கியதைச் சீர்ப்படுத்திப் பாதுகாத்துத் தருவதே சுதந்திரக் கட்சியின் முக்கியமான நோக்கமாகும். காங்கிரஸ் கட்சி கொண்டு வந்த 'திருத்தங்களால்' அந்த உறுதிமொழி உயிரற்றுப் போன விஷயம் யாவரும் அறிந்ததே. அரசியல் நிர்ணயச் சட்டத்துக்கு மீண்டும் உயிரூட்டுவதே சுதந்திரக் கட்சியின் இலட்சியமாகும்.

அரசியல் நிர்ணயச் சட்டம் அரசாங்கத்துக்குக் குறைந்த அளவு அதிகாரமே அளித்தது; பூரண ஆதிக்க உரிமை அளிக்கவில்லை. ஆட்சி உரிமையை அடையும் எந்த அரசியல் கட்சியும் பார்லிமெண்டின் அநுமதியுடன் நிர்வாகம் நடத்தலாம்; ஆனால் மக்களுக்குத் தந்திருக்கும் உரிமைகளைப் பாழாக்கும் அதிகாரம் அரசாங்கத்துக்குக் கிடையாது. தொழில் நடத்துவதற்கும், நியாயமான முறையில் சொத்துக்கள் சேர்ப்பதற்கும், அவை பறிமுதலாகாமல் பாதுகாத்துக் கொள்ளவும் மக்கள் பெற்றுள்ள உரிமைகளில் அரசாங்கம் தலையிடக் கூடாது என்பதே அரசியல் சட்டம். ஆளும் கட்சியின் தயவினாலோ, அநுமதியினாலோ மக்கள் பெற்றவை அல்ல இந்த உரிமைகள். அரசியல் நிர்ணயச் சட்டத்தினின்று நேராகப் பெற்றிருக்கிறார்கள். எனவே எந்தச் சர்க்காரும் அவற்றைத் தீண்டுவதற்கில்லை. மக்கள் இந்த உறுதியை இழந்து விட்டால் ஆளும் கட்சியின் கொடுங்கோன்மைக்கு ஆளாகி விட வேண்டியதுதான். ஜனநாயகமென்பது கற்பனையில்தான் இருக்கும்.

இன்று காங்கிரஸ் கட்சியானது தன்னை யாரும் அசைக்க முடியாது, அசைக்கப் போவதில்லை என்று எண்ணுவதால் இந்த உரிமைகளின் அவசியத்தை உணர மறுக்கிறது. மக்களுடைய உரிமைகள் எவை, அரசாங்கத்தின் அதிகாரங்கள் எவை என்பதில் விவாதமோ ஐயமோ ஏற்பட்டால் அதைத் தீர்க்கும் பொறுப்பை அரசியல் சட்டம் நீதிமன்றங்களுக்கே அளித்திருக்கிறது. எனினும் நீதிமன்றங்களின் அதிகாரப் பொறுப்பையும் தனதாக்கிக் கொண்டிருக்கிறது காங்கிரஸ் சர்க்கார். இந்த நிலையிலிருந்து நாட்டை மீட்டு, மக்களுக்கு அவர்களுடைய உரிமைகளைத் திரும்பத் தருவதே சுதந்திர இயக்கத்தின் முக்கியமான நோக்கமாகும்.

மக்கள் தங்களது சுதந்திரமான போக்கிலேயே சுபிட்சத்தை அடைய வேண்டுமென்பதுதான் சுதந்திரக் கட்சியின் அடிப்படைக் கொள்கையாகும். மக்கள் தங்கள் திறமையில் தாங்களே அவநம்பிக்கை கொண்டு, எதற்கும் அரசாங்கத்தையே நம்பியிருக்கும் அடிமை மனப்பான்மையை வளர்த்து விட்டது காங்கிரஸ். காந்தியடிகளின் கருத்துக்களுக்கு முற்றிலும் மாறுபட்ட இந்தக் காரியக்கிரமத்தை மாற்றுவதே சுதந்திரக் கட்சியின் பணியாகும்.

எந்தக் கட்சி பதவியிலிருந்தாலும் சரி, அரசாங்கத்தின் அதிகாரத்துக்கும் நிர்வாகத்துக்கும் வரம்பு விதிக்க வேண்டும்; தனி மனிதர்களின் ஆக்கத் திறனுக்கும், ஆற்றலுக்கும் ஊக்கமளிக்க வேண்டும்; இவற்றைப் பெற்றுள்ள மக்கள் சுதந்திரமாகத் தொழில் புரிய முடியாதபடி அவர்களைப் பெர்மிட்டுகளுக்கும் லைசென்சுகளுக்கும் ஆட்படுத்தக் கூடாது என்பதே அதன் கருத்து. இப்படிச் செய்தால்தான் எந்தக் கட்சி ஆட்சி பீடத்துக்கு வந்தாலும் மக்கள் சுதந்திரமாகவும் சந்தோஷமாகவுமிருந்து தேசம் சுபிட்சம் அடையும்.

வரிச்சுமையைக் குறைத்து, விலைவாசிகளை மட்டுப்படுத்துவது சுதந்திரக்கட்சியின் மற்றொரு முக்கியமான குறிக்கோளாகும். காங்கிரஸ் கட்சி உடனடியாகப் பயன் தராத பிரம்மாண்டத் திட்டங்களை வகுத்து அவற்றை நிறைவேற்றுவதற்காகச் சிருஷ்டி செய்யும் பணவீக்கம் காரணமாகத்தான் விலைவாசிகள் ஏறியுள்ளன. புதுப் புது வரிகள் விதிப்பதும் இந்தத் திட்டங்களைச் செயலாக்கத்தான். சுதந்திரக் கட்சிக்கு ஆதரவு தந்தால் நடைமுறைக்கு ஒவ்வாத திட்டங்கள் இரா; வரிகளும், விலைகளும் குறையும்.

அரசியலிலும் சரி, பொருளாதாரத்திலும் சரி நாட்டின் போக்கை நிர்ணயிக்கும் அதிகாரம் ஒரு சிலர் கைகளில் குவிந்து வருவதைச் சுதந்திரக் கட்சி எதிர்க்கிறது. இன்று இந்த அதிகாரங்கள் கம்யூனிஸ நாடுகளைப் போல் நம் நாட்டிலும் ஆளும் கட்சியின் கையிலேயே உள்ளன. ஆனால் அந்தக் கம்யூனிஸ நாடுகளில்போல் பலாத்காரத்தை உபயோகித்து வேலை வாங்க நம் சர்க்காருக்குச் சாமர்த்தியம் இல்லை. எனவே கொடுங்கோன்மையோடு திறமையின்மையும் கலந்து கொண்டு வேலை செய்கிறது. தேசியப் பொருளாதாரத்தைச் சர்க்கார் சர்வாதிபத்தியத்திலிருந்து மீட்கச் சுதந்திரக் கட்சி உறுதி கொண்டுள்ளது. காங்கிரஸின் பொய்ச் சோஷலிஸத்தைத் தோல்வியுறச் செய்வதே சுதந்திர இயக்கத்தின் நோக்கம்.

உற்பத்தி, விநியோகம் இவை நேரான, சீரான முறையில் நடைபெறு

கின்றனவா என்று சர்க்கார் மேற்பார்வை செய்ய வேண்டும்; தானே வியாபார அமைப்பை நிர்ணயிப்பதோ, அல்லது நேரடியாக வர்த்தகத்தில் ஈடுபடுவதோ தவறு என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கையாகும். மக்கள் நடத்தும் வியாபாரம் அல்லது தொழிலில் ஊழல்கள் இருந்தால் அவற்றைச் சர்க்கார் திருத்த முடியும். சர்க்காரே அவற்றை எடுத்துக்கொண்டு விட்டால் அதில் ஏற்படும் ஊழல்களைக் கண்டிக்க யாருமில்லை. பார்லிமெண்டோ, மந்திரி சபையோ கண்காணிக்க முடியாத கார்ப்பரேஷன்களை நிறுவி, கேட்பாரில்லாமல் வீண் செலவு செய்யும் திட்டங்களைச் சுதந்திரக் கட்சி கண்டிக்கிறது. தனியார் துறையில் நடைபெறும் வியாபாரத்துக்கு முடிந்த அளவு சுதந்திரம் அளிக்க வேண்டுமெனவும் கருதுகிறது. வியாபாரிகளுக்குள் ஏற்படும் போட்டியினுல் விலைவாசிகள் நியாயமான மட்டத்தில் நிற்கும்; போட்டி யில்லாமற் போனுல் ஏகபோகிகள் இடுவதே சட்டமாகும்.

உற்பத்தி அதிகமானுல்தான் பொருளாதார வாழ்வு உயரும். உற்பத்தி பெருக வேண்டுமானுல் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு ஊக்கம் இருக்க வேண்டியது அவசியம். 'யாருக்காகவோ வேலை செய்யவில்லை; சர்க்காருக்காகத் தொழில் நடத்தவில்லை; நம் நன்மைக்காகவே உழைக்கிறேம்; நம்முடைய உழைப்பின் பலன் நமக்குக் கிட்டும்' என்ற உணர்ச்சி மக்களுக்கு உண்டாகும் வரையில் உற்பத்தி பெருகாது. உழவு, ஆலைத் தொழில் இரு துறைகளுக்குமே இவ்வுண்மை பொருந்தும் என்பதே சுதந்திரக் கட்சியின் கருத்து.

சமுதாயத்திலுள்ள சுய பலமற்ற வகையார்களைப் பாதுகாப்பது சுதந்திரக் கட்சியின் திட்டத்தில் அடங்கியுள்ளது.

இடர்கள் மலிந்துள்ள சூழ்நிலையில் ஆபத்துக்களைத் தைரியமாக எதிர்த்துப் பணி புரிந்து நாட்டுக்கு உணவு படைப்பவர்கள் விவசாயிகள். அவர்களுக்கு 'போனஸ்' அளித்துப் பாராட்ட வேண்டுமேயல்லாமல் வரி போடுவது முறையல்ல என்று கருதுகிறது சுதந்திரக் கட்சி. எனவே நிலவரிகளை நீக்கி விட வேண்டு மென்கிறது. சுதந்திரக் கட்சி பதவிக்கு வந்தால் உடைமைக் கணக்குகளைப் பாதுகாப்பதற்குத் தேவைப்படும் அளவுக்கே நிலவரி விதிக்கப்படும்.

மக்களை நல்வழிப்படுத்துவதில் மதங்களுக்குள்ள சக்தியை உணரும் சுதந்திரக் கட்சி, சமயங்களுக்கு உரிய இடம் தேடித் தர விரும்புகிறது.

எல்லாவற்றுக்கும் மேலாக, எந்த நல்ல அரசாங்கமும் தவறான வழியில் செல்லாமலிருக்க ஒரு வலுவான எதிர்க்கட்சி தேவை என்பது சுதந்திரக் கட்சியின் கொள்கை. அதிலும் ஊழல், ஏக-கட்சி ஆதிபத்தியம், பாரபட்சம் முதலியன செழித்து வளர வழி செய்யும் காங்கிரஸ் கட்சியை எதிர்க்க பலமான ஓர் எதிர்க்கட்சி மிகவும் அவசியம் என அது கருதுகிறது. ஜனநாயக இயந்திரத்தின் இந்த முக்கியமான அங்கத்தைத் தருவதற்காகவே அது செயலாற்றுகிறது.

கைவசமுள்ள அதிகாரத்தைப் பிரயோகித்து ஆணி வேர் சல்லி வேர் விட்டு வேரூன்றிக் கொண்டிருக்கும் காங்கிரஸை எதிர்க்கப் போதிய அவகாசமோ, திரவிய பலமோ சுதந்திரக் கட்சிக்கு இல்லை. எனினும் தனது இலட்சியத்திலுள்ள தர்ம பலம் ஒன்றையே நம்பி இந்தச் சுதந்திரப் போராட்டத்தில் அது குதித்திருக்கிறது. செல்வத்தையும் செல்வாக்கையும் கொண்டு காங்கிரஸ் மூட்டியுள்ள சொக்கப்பனையின் பிரகாசத்தைக் கண்டு மக்கள், பூச்சிகளைப் போல் அதில் மயங்கி விழுந்து மாயக் கூடாது; சுதந்திர தீபத்தின் துணை கொண்டு சுபிட்சப் பாதையில் அவர்கள் செல்ல வேண்டும் என்பதே சுதந்திரக் கட்சியின் பிரார்த்தனை.

கடந்த இரண்டாண்டில் தான் பெற்றுள்ள வளர்ச்சியைக் காணும்போது இந்தப் பிரார்த்தனை ஈடேற இடமுண்டு என்ற நம்பிக்கை சுதந்திரக்கட்சிக்கு ஏற்படுகிறது. ஜனநாயகத்தில் இரண்டு முனைகளில் நிற்கும் கோட்பாடுகளை ஆதரிப்பவர்கள் தனித்தனியே பிரிந்து நின்று போராட வகை செய்து விட்டோம் என்பதில் அது பெருமைப் படுகிறது. இந்தப் பெருமையுடன் இம்மாதம் 23-லிருந்து 26-ந் தேதி வரை ஆக்ரா மாநகரில் சுதந்திரக் கட்சியின் அகில இந்திய சம்மேளனம் கூடுகிறது. இதில் ராஜாஜி உள்படக் கட்சித் தலைவர்கள் பலரும் கலந்து கொள்கிறார்கள். இந்தச் சம்மேளனத்தை ஒட்டி வெளியாகும் 26-ந் தேதியிட்ட கல்கி இதழிலிருந்து ஐந்து வாரங்களுக்குத் தொடர்ச்சியாகச் சுதந்திரக் கட்சியின் தேர்தல் அறிக்கையும், அதன் விளக்கமும் பிரசுரமாகும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேம்.

ஒரு விஞ்ஞாபனம்: விடுதலை வாழ்வை நாடும் நம் வாசகர்கள் யாவரும் இந்தத் தேர்தல் விஞ்ஞாபனத்தை ஒரு மகா சாஸனமாகக் கருதி அதனை நாடெங்கிலும் பரப்ப வேண்டும். அதன் மூலம் ஜனநாயகத்தை பலம் பெறச் செய்து காப்பாற்ற வேண்டும்.

# என்ன சேதி?

## புள்ளியும் (அலங்)கோலமும்

இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களை வகுப்பதில் ஒரு பெரும் தடையாக இருப்பது சரியான புள்ளி விவரங்கள் கிடைக்காததே என்று ஸ்ரீ பி. எஸ். லோகநாதன் அவர்கள் சமீபத்தில் பேசியிருக்கிறார். பரந்து விரிந்த இந்த நாட்டில், மக்களில் பெரும்பாலோர் எழுத்தறிவு பெற்றிராததாலும், தகுந்த குறிப்புக்கள் வைத்திராததாலும் அநேக விஷயங்களில் சரிவரப் புள்ளி விவரங்கள் சேகரிக்க முடிவதில்லை. நடைமுறையை அறிய உதவும் இந்தப் புள்ளி விவரங்களின் அடிப்படையில்தான் எதிர்கால முன்னேற்றம் பற்றித் திட்டமிட முடியுமாதலால் நமது திட்டங்களின் அலங்கோலத்துக்கு இதையும் ஒரு காரணமாகக் கொள்ளலாம்.

ஸ்ரீ லோகநாதன் அவர்கள் வேறொரு தகவலும் வெளியிட்டார். அதாவது ஒரே விஷயத்தைப் பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட குழுவினர் புள்ளி விவரம் சேகரிக்கும்போது அவை ஒன்றுக்கு ஒன்று மிகவும் மாறுபட்டுக் காண்கின்றனவாம். மந்திரி இலாகாவிலுள்ள அதிகாரிகள் நேரடியாகப் புள்ளி விவரச் சேகரிப்பில் ஈடுபடுவதுண்டு. சில சமயங்களில் சர்க்காரே அரசாங்கச் சார்பற்ற நிபுணர்களைக் கொண்டு புள்ளி விவரம் சேகரிக்கிறது. சில தனி நபர்களும், பத்திரிகைகளும் அநேக இனங்களில் புள்ளி விவரம் எடுப்பதும் உண்டு. இவை ஒன்றோடு ஒன்று வித்தியாசப்படும்போது சர்க்கார் எந்தப் புள்ளி விவரத்தை ஒப்புக்கொண்டு, எந்த அடிப்படையில் திட்டம் வகுக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டியிருக்கிறதல்லவா? இந்த அம்சத்தில்தான் காங்கிரஸ் ஆட்சியின் போக்கு நாணயமாகக் காணப்படவில்லை. தான் விரும்பும் திட்டங்களைச் செயலாக்குவதற்கு எந்தப் புள்ளி விவரம் சாதகமாக இருக்குமோ, அதனையே அது ஏற்றுக் கொள்வது வழக்கமாகி விட்டது. எனவேதான் உணவு உற்பத்தி, தொழில் பெருக்கம் இவை பற்றி ஆட்சியாளர்கள் தரும் பல விவரங்கள் பிரத்தியட்ச நிலைக்குச் சற்றும் பொருந்தாமல் காணப்படுகின்றன. அதோடு சர்க்காரால் புள்ளி விவரம் எடுக்க நியமிக்கப்படுபவர்களும் அதன் உள்நோக்கத்தை மனத்தில் கொண்டே 'உண்மை'களை உருவாக்குகிறார்கள் என்ற ஐயமும் நாட்டில் வளர்ந்து வருகிறது. இதை யெல்லாம் காணும்போது, 'புளுகு என்பதில் மூன்று வகையுண்டு; அவை புளுகு, பச்சைப் புளுகு, புள்ளி விவரம் என்பவை' என்ற ஆங்கில வாக்குத்தான் நினைவுக்கு வருகிறது.

## வேண்டாம் ஒருமைப்பாடு!

இசை என்ற பெயரே ஐக்கியத்தைக் குறிப்பதாகும். ஒலிகளை மட்டுமின்றி, மக்களைத் தங்களுக்குள்ளும், ஆண்டவனோடும் இசைக்க அது ஓர் உபாயம் என்று கருதிய உபாசகர் பலர் வாழ்ந்த நாடு இது. இன்றும் நம் தமிழகத்தைச் சேர்ந்த சங்கீத விற்பன்னர்கள் சிலர் கர்நாடக சங்கீதத்தை மட்டுமின்றி இந்துஸ்தானி இசையையும் நன்கு பயின்று அதனால் வட நாட்டுக் கலையைத் தெற்கிலும், தென் நாட்டுக் கலையை வடக்கிலும் பரப்பி, எல்லோரும் ஒரு கலைக் குடும்பத்தினர் என்ற உணர்ச்சியை மக்களிடையே தோற்றுவித்து வருவதைக் காண்கிறோம்.

எனவே இசையின் மூலம் இந்நாட்டில் ஐக்கியத்தை நிலைபெறச் செய்வது பற்றி அகில இந்திய ரேடியோவின் எட்டாவது சம்மேளனத்தில் உப


Iris INK
ஐரிஸ் இங்க்
தங்கு தடையில்லாமல்
கவர்ச்சிகரமாக எழுத ...
5 மங்காத நிறங்களில்
ரிஸர்ச் கெமிகல் லாபரடரீஸ்
சென்னை & பங்களூர்.


ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் கூறியிருப்பதை வரவேற்கிறோம்.

எனினும் உபஜனாதிபதி அவர்கள் ஒரு படி மேலே சென்று விட்டார். 'சங்கீதத்தினால் ஒருமைப்பாடு' என்பதிலிருந்து 'சங்கீதத்திலேயே ஒருமைப்பாடு' என்பதற்குச் சென்று விட்டார். 'கர்நாடக சங்கீதம், இந்துஸ்தானி சங்கீதம் என்ற பிரிவுகள் மறைந்து இந்திய சங்கீதம் என்பது உருவாக வேண்டும்' என்று அவர் கூறியிருக்கிறார். நம்முடைய இசை முறைகள் இரண்டும் இவ்வாறு ஐக்கியமாகுமானால் அதோடு அந்தப் புராதனக் கலையே மாண்டு போக வேண்டியதுதான். இவ்விரு இசை வழிகளும் தனிப் பண்புகள் பொருந்தியவை. அவற்றை உள்ளபடியே போற்றி வளர்ப்பதுதான் உண்மையான கலைப்பணியாகும். இரு வேறு சுவைகளையோ, வண்ணங்களையோ கலப்பதால் அவற்றின் தனிச் சிறப்புக்கள் அழிந்து ஏற்படும் குழப்பமான விளைவைப் போலத்தான் இந்தச் சங்கீத பத்ததிகளைக் கலந்தாலும் நேரிடும்.

எனவே பாட்டை அதன் பாட்டுக்கு விட்டு, அதில் ஒருமைப்பாட்டைக் கலக்காமலிருப்பது தான் புத்திசாலித்தனமாகும்.

## அதிகாரக் குளறுபடி

பிரிட்டனிலிருந்து 'விக்ராந்த்' என்ற விமானந் தாங்கிக் கப்பலை இந்திய ராணுவத்துக்காகப் பெற்றிருப்பதைப் பெரிதுபடுத்திச் செய்திகளும், படங்களும் பிரசுரமாகியிருக்கின்றன. இந்த விமானந்தாங்கிக் கப்பல் அவசியந்தானா என்ற கேள்வியை ஒரு பக்கம் வைத்து விட்டு இந்த வரவேற்பு வைபவத்தைப் பற்றிக் கொஞ்சம் பார்க்கலாம்.

சர்க்கார்கள் மாறினாலும் நிலைத்து நிற்கும் ராணுவமானது கட்சிச் சார்பற்ற ஜனாதிபதிக்குத்தான் நேரடியாகக் கட்டுப்பட்டிருக்கிறது. எனவே ராணுவம் குறித்த சடங்குகளெல்லாம் ஜனாதிபதியின் பொறுப்புக்களின் கீழ் வருபவையாகும். இந்தப் பொறுப்பை இன்று பிரதமர் அவர்கள் ஆற்றுவதென்பது முறையான காரியமல்ல. இந்த முறைகேட்டை நம் மக்கள் கவனிக்கக் கூட இல்லை என்பது, 'கட்சியே சர்க்கார்; சர்க்காரே தேசம்' என்ற மாயத்தைக் காங்கிரஸ் சர்க்காரானது எவ்வளவு தூரம் பரப்பி விட்டது என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். நியாயமாகப் பார்த்தால், காங்கிரஸ் கட்சியுடன் பிரிக்க முடியாமல் தொடர்பு கொண்டுள்ள பிரதமர் அவர்கள் சுதந்திர – குடியரசு தினங்களில் செங்கோட்டையில் ராணுவ மரியாதைகள் பெறுவதும் கூட முறையாகாது. காங்கிரஸ் சர்க்கார் அன்றி வேறெந்தக் கட்சி ஆட்சி செலுத்தினாலும் இந்த மாறுபாடு தெற்றெனப் புலனாகும்.

## ராஜாஜியின் திக்விஜயம்

இம்மாதம் 15ந் தேதியன்று ராஜாஜி வட இந்திய சுற்றுப் பயணம் ஒன்றைத் தொடங்கியுள்ளார். ராஜஸ்தானம், பஞ்சாப், உத்தரப் பிரதேசம் முதலிய ராஜ்யங்களில் பற்பல இடங்களுக்கு விஜயம் செய்துவிட்டு டிசம்பர் மத்தியில் தமிழகத்துக்குத் திரும்புகிறார். இந்தத் தள்ளாத வயதில் இவ்வளவு விரிவானதொரு சுற்றுப் பிரயாணத் திட்டத்தை அவர் மேற்கொண்டிருப்பதைக் காணும்போது தர்மத்தை நிலை நாட்டுவதில் அவருக்குள்ள பேரார்வத்தை வியக்கிறோம். அந்தப் பேரார்வம் பலனளிக்காமல் போகாது என்ற நம்பிக்கையையும் பெறுகிறோம்.




# சென்ற நூற்றாண்டுகளில் கிரிக்கெட்

குண்டுமணி

## வளர்ந்த கதை

நகரங்களிலும், ஏன், கிராமங்களிலும் கூட மூலைமுடுக்குகளிலெல்லாம் சிறுவர்கள் இன்று கிரிக்கெட் பந்தும் மட்டையும் வைத்துக் கொண்டு விளையாடும் காட்சியைக் காண்கிறோம். நடுத்தெருவே அவர்கள் மைதானமாக மாறி விடும்போது பலர் வீட்டு ஜன்னல்களின் கண்ணாடிக் கதவுகள் பலியாவது உண்டு. தங்கள் தலையே பவுண்டரித் தாக்குதலுக்குள்ளாகி விடுமோ என்று பயந்து பலர் தாங்கள் செல்லும் பாதையையே மாற்றிக் கொள்வதும் உண்டு. சில சிறுவர்கள் கையில் கிடைக்கிற சாமானையெல்லாம் கிரிக்கெட் பந்தாக நினைத்து வீசி யெறிந்து தங்கள் ஆசையைத் தீர்த்துக் கொண்டிருப்பதையும் காணலாம்.

பம்பாயில் முதல் டெஸ்ட் பந்தயம் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் இடையில் நவம்பர் மாதம் 11-ந் தேதியிலிருந்து ஆரம்பமாகி விட்டது. தெருக்களிலும் மைதானங்களிலும் மட்டையும் பந்துமாகக் காட்சி யளித்தவர்களெல்லாம் இனி வீட்டில் அடைந்து கிடக்கத் தொடங்கி விடுவார்கள். ரேடியோப் பெட்டிக்குள் தலையைச் செருகிக் கொண்டு கிரிக்கெட் விமரிசனத்தைக் கேட்பதோடு தங்கள் விமரிசனங்களையும் அவர்கள் அள்ளித் தெளிக்கத் தொடங்கி விடுவார்கள்.

இப்படி இன்று பல்கிப் பெருகி வளர்ந்திருக்கும் கிரிக்கெட் ஆதிநாட்களில் எப்படி இருந்தது, எப்படி வளர்ந்தது என்பதை அறிந்து கொள்ள ஆவல் இருப்பது இயல்புதானே!

கிரிக்கெட் விளையாட்டு எப்பொழுது தோன்றியது என்பதை அறுதியிட்டுக் கூறுவதற்கில்லை. இங்கிலாந்தில் கிளாஸ்கோவின் சுற்றுப்புறங்களிலுள்ள மைதானங்களில் கிரிக்கெட் போன்ற ஓர் ஆட்டம் ஆடி வந்திருக்கிறார்கள் ஆண், பெண் இரு பாலாரும். பத்து வயதுக்குட்பட்டவர்கள் இவ் விளையாட்டில் கலந்து கொண்டிருப்பார்கள். அவர்களுடைய கிரிக்கெட் ஆட்டத்துக்கு உருண்டையான கார்க் கட்டை பந்தாகவும், அசல் மட்டையே மட்டையாகவும், தனித்த மரமொன்றே விக்கெட்டாகவும் இருந்திருக்கின்றன. பெண்களானால் பந்தைச் சுழற்றி வீச வேண்டியதில்லை; பந்தை வேகமாக உருட்டினாலே போதும்!

ஸ்காட்லாந்திலே 1722-ம் வருஷத்திலே பூனை — நாய் விளையாட்டு என்று ஒன்று இருந்தது. இதில் மூன்று பேர் கலந்து கொள்வார்கள். இருபத்தியாறு அடி இடைவெளியில் இரண்டு பொந்துகளை ஏழு அங்குல ஆழத்துக்குத் தோண்டி ஒவ்வொரு பொந்தின் அருகிலும் ஒரு விளையாட்டுக்காரர் கையில் தடியுடன் நிற்பார். அந்தத் தடிக்கு நாய் என்று பெயர். மரத்துண்டு ஒன்றை — இதன் பெயர் பூனை—ஒரு பொந்தின் பக்கத்திலிருந்து கொண்டு மற்றொரு பொந்தை நோக்கி மூன்றாவது ஆட்டக்காரர் ஒருவர் வீசி எறிவார். பூனை பொந்துக்குள் நுழையாமல் தடி பிடித்திருப்பவர் தடுத்து நிறுத்த வேண்டும். நுழைந்து விட்டால் மூன்றாவது ஆட்டக்காரர் தடி பிடித்து ஆட வந்து விடுவார். இதிலிருந்துதான் இன்றுள்ள கிரிக்கெட் ஆட்டம் வளர்ந்திருக்க வேண்டும் என்று சிலர் கருதுகிறார்கள்.

கிரிக்கெட் விளையாட்டை இங்கிலாந்தில் பிராபல்யப்படுத்திப் புகழேணிக்குக் கொண்டு வந்தது ஹாம்பிள்டன் கிளப்தான். கிரிக்கெட் ஆடும் வழி முறைகளை யெல்லாம் வகுத்துக் கொடுக்கும் பணியை லார்ட்ஸும், எம். ஸி. ஸி.யும் ஏற்றுக் கொண்டன. 1787-ம் வருஷத்திலிருந்து அவை அந்தப் பொறுப்பை நிறைவேற்றி வருகின்றன. பதினெட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் இந்த ஆட்டத்தை விதி, முறைகளுக்கு உட்பட்டு ஆடத் தொடங்கினார்கள்.

1909-ம் ஆண்டில் இங்கிலாந்தும் ஆஸ்திரேலியாவும் தென் ஆப்பிரிக்காவும் சேர்ந்து இம்பீரியல் கிரிக்கெட் மகாநாட்டை நிறுவின. பதினாறு ஆண்டுகளுக்குப் பின் மேற்கு இந்தியத் தீவுகளும், இந்தியாவும், நியூஸிலாந்தும், இம்மகாநாட்டில் சேர்ந்து டெஸ்ட் பந்தயங்களில் கலந்து கொள்ளும் உரிமையைப் பெற்றன.



# கேட்டீர்களா சேதி?



கேட்டீர்களா மிக மிக முக்கியமான சேதி? நாகபுரியிலிருக்கும் ஒரு தமிழன்பர் அடியேனுக்கு ஒரு புது உத்தியோகம் கொடுத்திருக்கிறார். அதாவது ''செய்தி சேகரன்'' என்னும் என் தமிழ்ப் பெயரை News Collector என்று ஆங்கிலத்தில் மிகவும் அழகாக மொழி பெயர்த்திருக்கிறார்! ஏதோ ஜில்லா கலெக்டர் உத்தியோகமே கொடுத்துக் கௌரவித்தது போல் எண்ணி மகிழ்ந்து அந்த நேயருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். (என்ன தற்பெருமை என்று நீங்கள் முணு முணுப்பது என் காதில் விழுகிறது. என் பெயர் எனக்கு அழகாயில்லாமல் பின்னே எப்படியிருக்கும்?)

ஃ ஃ ஃ

டெல்லியில் நடந்த உலக சினிமா விழாவில் பிரதம மந்திரி நேரு அவர்கள் பேசுகையில், ''உங்களைப்போல் நானும் ஒரு நடிகன்தான். அரசியல் துறையில் எப்பொழுதும் ஏதாவது புதிதாகச் செய்து கொண்டிருக்கிறேன். அந்த வகையில் நானும் ஒரு நடிகன்தானே!'' என்றாராம்.

முற்றிலும் சரி. இந்திய சர்க்கார் செய்திப் படங்களில் நேருஜிதானே பிரதம நடிகர்! ''நேரு இல்லா 'நியூஸ் ரீல்' பாழ்'' என்ற புதுமொழி உங்களுக்குத் தெரியுமோ?

ஃ ஃ ஃ

''சோவியத் யூனியனின் பெரிய அணுகுண்டுச் சோதனைகளிலிருந்து விழுந்த கதிரியக்கத் துகள்கள் மூலம் ரஷ்யாவின் வட பகுதியில் ஒரு கிராமமே நிர்மூலமாகியிருக்கக் கூடும் என்று அமெரிக்க நிபுணர்கள் கருதுகிறார்கள்.''

அமெரிக்க நிபுணர்கள் இவ்வாறு கருதிவிட்டால் போதுமா? அதை சோவியத் நிபுணர்கள் ஒப்புக் கொள்ள வேண்டாமோ?

ஃ ஃ ஃ

''கல்கத்தாவிலுள்ள ஏழைக் குடும்பங்களின் பொருளாதார உயர்வுக்கான திட்டத்தை மேற்கு வங்க சர்க்கார் ஆரம்பித்திருக்கிறார்கள். இந்த உதவியைப் பெற்று மக்கள் சிறு அளவில் வர்த்தகம், அல்லது தொழில் நடத்த வேண்டும். அதற்காக நடப்பு வருஷத்துக்கு ரூபாய் 2,56,000 ஒதுக்குவது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.''

'முதலில் நிதியை ஒதுக்குவார்கள். பிறகு திட்டத்தையே ஒதுக்கித் தள்ளி விடுவார்கள்' என்று கூறுகிறார் ஒரு முதிர்ந்த அனுபவசாலி.

ஃ ஃ ஃ

''மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் அதிகாரியின் மனைவி ஆடம்பரம் இல்லாமல் சாதாரணச் சேலை கட்டி, அடக்கமாக இருக்க வேண்டும். குமாஸ்தாக்களின் மனைவிமார்களுக்கு முன்மாதிரியாக நடந்து கொள்ள வேண்டும்'' என்று டில்லி சட்டசபை சபாநாயகர் கூறினாராம்.

இது என்ன அநியாயம்! ஒரு நபரின் ஜீவாதார உரிமையையே பாதிப்பதாக அல்லவா இருக்கிறது இவரது கூற்று! ஓர் ஆபீஸரின் மனைவி என்பதை எடுத்துக்காட்டுவதே விலையுயர்ந்த சேலை தானே? மேலும் குமாஸ்தாக்களின் மனைவிமார்கள் கட்டும் சாதாரணப் புடவைகளை ஆபீஸரின் மனைவி கட்டிக் கொள்ள ஆரம்பித்தால் அப்புறம் குமாஸ்தாக்களின் மனைவிமார்கள் என்னத்தைக் கட்டிக் கொள்வதாம்!

ஃ ஃ ஃ

''புதுமையான முறைகளில் படங்களைத் தயாரிக்க வேண்டும். புது நடிகர்களைப் போட்டுப் படம் எடுக்க வேண்டும் என்றெல்லாம் பேசப்படுகிறது. ஆனால் புது முகங்களைப் பொதுமக்கள் விரும்புவதாகத் தெரியவில்லை! புது முகங்களைப் புகுத்திப் படமெடுத்தவர்கள் கடைசியில் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொள்ள நேருகிறது!'' என்று ஒரு பழம்பெரும் தமிழ்ப்பட நடிகர் கூறியுள்ளார்.

இதை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? மக்கள் ஆதரவு இல்லாமலா இந்த நடிகர் முன்னணிக்கு வந்தார்! இவரும் ஆரம்பத்தில் புது முகம் படைத்த ஒரு புது நடிகராக இருந்தவர் தானே!

ஃ ஃ ஃ

''தமிழ்த் திரைப் படங்கள் வெளிநாட்டிலும் திரையிடப்படுமேயானால்,

செய்தி சேகரன்

நமது நடிகர்களின் திறமையெல்லாம் நன்கு வெளிப்படும்'' என்று ஒரு பிரமுகர் கூறினர்.

தமிழ்ப் படங்களின் மீதும் தமிழ் மக்களின் மீதும் அவருக்கு என்ன கோபம்! இப்படி ஒரேயடியாகப் பழி வாங்க நினைக்கிறரே! வெளிநாட்டிலும் நமக்கு நல்ல பெயர் வரக் கூடாது என்பது தான் அவரது அபிப்பிராயமா?

ஃ ஃ ஃ

நியூயார்க்கிலுள்ள மான்டி பியோர் மருத்துவ இல்லம் தலை வலி தீர்க்கும் தனிப் பெரும் மருத்துவ நிலையமாக விளங்குகிறது. உடல்நலக் குறைபாடு, மன நிலைக் கோளாறு ஆகியவற்றல் தலைவலி ஏற்படுகிறது; உணர்ச்சி மிகுதியினல் கழுத்திலும், தலையிலும் உள்ள தசை நார்கள் சுருங்குகின்றன என்றும் அதனல் தலைவலி வருகிறது என்றும் அந்த மருத்துவ நிலைய ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

அதெல்லாம் சரிதான். மேற்கூறிய ஆராய்ச்சிகளினலேயே கடுமையான தலைவலி உண்டாகாது என்பது என்ன நிச்சயம்?

ஃ ஃ ஃ

''மேஜையின் மேல் பூக்கிண்ணங்கள் வைப்பதெல்லாம் இனிமேல் காலங் கடந்த அலங்காரமாகி விடக் கூடும். நீங்கள் நம்பினலும் சரி, நம்பா விட்டாலும் சரி, இனி மேல் பூக் கிண்ணங்களுக்குப் பதிலாக, வர்ண முட்டைகள் வரப் போகின்றன. பேராசிரியர் ஹெர்ர் நடத்திய பரிசோதனைகளின் விளைவாகக் கிடைத்த நீல முட்டைகளும், பச்சை முட்டைகளும், வீட்டு வளர்ப்புப் பிராணிகள் பற்றிய ஆராய்ச்சிக் கழகத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. பேராசிரியர் ஹெர்ர் தென் அமெரிக்காவுக்ுப் போயிருந்த போது, அங்கே அரோகேனியன் என்னும் ஒரு வகைக் கோழிகள் நீல முட்டை யிடுவதைக் கண்டு பிடித்தார்; செவ்விந்திய ஜாதி ஒன்றின் பெயர் தாங்கிய இந்தக் கோழிகளில் சிலவற்றை அவர் ஜெர்மனி நாட்டுச் சாதாரண வீட்டுக் கோழிகளுடன் சேர விட்டுப் பார்த்தார். அவற்றுக்குப் பிறந்த குஞ்சுகள் பெரிதான போது பச்சை முட்டை யிட்டன.''

'காலம் கலி காலம் இல்லையோ! இனி மேல் கறுப்புக் கோழி கறுப்பு முட்டை யிடும்' என்று நம் பாட்டிமார்கள் சொன்னதை வெறும் அத்தைப் பாட்டி கதையென்று இன் மேல் யாரும் சொல்ல மாட்டார்களல்லவா?




உறுதிக்கும்
உழைப்பிற்கும்
உத்திரவாத
முள்ளவை
நடராஜா
பிராண்ட்
விளக்கு சிம்ணிகள்
AG I
ஆத்தூர் கிளாஸ்
இண்டஸ்ட்ரீஸ்
பிரைவேட் லிமிடெட்
ஆத்தூர் — சேலம் ஜில்லா.
AG-6

# கலை நிகழ்ச்சிகள்

**ப**ணத்தாசையினால் இனியை வளர்த்துக் கிழக் கோட்டானிடம் தந்துவிடத் தயாராக இருக்கும் தகப்பனையும் பெண்ணின் காதலன் ஏழையாக இருந்து வரதட்சிணை தர முடியாமல் தவிப்பதையும் தமிழ் நாட்டுக் கதைகள் பலவற்றிலும் பார்த்து வருகிறோம். இது போன்ற சூழ்நிலை மேலைநாடுகளுள் ஒன்றிலும் கூடச் சகஜமாக இருந்து வருகிறதென்றால் ஆச்சரியமாயில்லையா? ஜெர்மானியக் கலைஞர்கள் சிலர் சமீபத்தில் 'பவேரியாவில் ஒரு திருமணம்' என்ற தலைப்பில் நாட்டிய நாடகம் ஒன்றினைச் சென்னை அண்ணாமலை மன்றத்தில் நடத்திக் காட்டினார்கள்.

கலைஞர் தூதுகோஷ்டிகளைப் பரிமாறிக் கொள்வது வெவ்வேறு நாட்டினர் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொண்டு சிநேக பாவத்தை வளர்த்துக் கொள்வதற்காகத்தான் என்றால் பவேரியா மக்கள் மிகச் சுலபமாக நம் இதயத்தில் இடம் பெற்று விடுவார்கள். அந்நாட்டின் எளிய பழக்க வழக்கங்களையும் கிராமிய நடனங்களையும் இணைத்து அமைக்கப்பட்ட அந்நிகழ்ச்சி பல விதங்களிலும் நம் வாழ்க்கை முறையுடன் ஒத்துப் போவதாய் விளங்கியது. சம்பாஷணைகள் ஏதுமின்றி முக பாவங்களினாலேயே கதையை அழகாக உணர்த்தினார்கள்.

அடுத்து அமெரிக்காவிலிருந்தும் ஒரு கதம்ப நிகழ்ச்சிக் குழுவினர் வரப் போகிறார்கள். தலைசிறந்த அமெரிக்கக் கலைஞர்களின் நிகழ்ச்சிகளை அயல்நாட்டினர் கண்டு களிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் அமெரிக்க ஜனாதிபதி பிரத்தியேகமாக ஒதுக்கியுள்ள நிதி, இவர்கள் பல ஆசிய நாடுகளைச் சுற்றி வர உதவியிருக்கிறது. அமெரிக்காவில் வாழையடி வாழையாக வளர்ந்து வந்துள்ள இக் கலைநிகழ்ச்சிகளை அண்ணாமலை மன்றத்தில் இம் மாதம் 14-ந் தேதி முதல் 18-ந் தேதி வரையில் பார்க்கலாம். கலைஞர்களுக்குத் தலைமை தாங்கி அழைத்து வருபவர் ஜோயி ஆடம்ஸ். அமெரிக்கக் கதம்ப நிகழ்ச்சிகள் நமக்கு ஏமாற்றமளிக்காததுடன் அந் நாட்டினருடன் நிலையான நல்லுறவை உருவாக்கிக் கொள்ளவும் உதவும் என்று எதிர்பார்ப்போம்.

அட்டைப்பட விளக்கம்

# கார்த்திகை மைந்தன்

**'க**ல்யாணம், கார்த்திகை' என்று சேர்த்துச் சொல்வது நம் வழக்கம். இரண்டும் ஒன்று சேர்ந்தாற் போல், கார்த்திகேயனாகிய முருகப்பெருமான் திருமணத்தை நாடி, திருத்தணியைத் தேடி வந்த காட்சியை இலவிதழ் அட்டையில் ஓவியர் மணியம் சித்திரித்திருக்கிறார்.

கார்த்திகையென்றால் இந்தக் கிருத்திகா புத்திரன் நினைவு வாராமல் போகுமா? தீப ஒளியைக் காணுங்கால் சிவபெருமானின் திருநயனங்களினின்று பிறந்த இந்தச் சுடரின் நினைவுதானே வருகிறது? 'குகையில் வளரும் கனலே' என்றும் 'வைரவி பெற்ற பெருங்கனலே' என்றும் பாரதியார் போற்றியுள்ள வாக்கியங்களும் நமக்கு உடனேயே நினைவுக்கு வருகின்றனவல்லவா? அக்கினிக்கு அதி தேவதையாகத்தானே மறைகளும் இவனைப் போற்றுகின்றன?

கனலாகத் தோன்றினாலும் இவன் சரவணப் பொய்கை என்ற புனலில்தான் உருப்பெற்றவன். அதனால்தான் அஞ்ஞானத்தைப் போக்கும் அறிவுத் தீயாக இருந்தாலும் அடியாருக்கு அருள் சுரக்கும் தன்மை இவனிடம் கலந்து காண்கிறது. அறியாமை என்னும் வனத்தில் அலையும் ஜீவனைத் தேடி வந்து கூடும் இவனது கருணைப்பாங்கைத்தான் வள்ளித் திருமணக் கதை அறிவுறுத்துவதாகச் சொல்கிறார்கள்!

ஆனால் இங்கே ஜீவ களையுடன் ஒவியாக நின்று, அந்த மயிலேறும் பெருமானை,

> எந்த நேரமும் நின்மையல் ஏறுதடீ
> குறவள்ளி! சிறுகள்ளி!

என்று பாட வைக்கும் வள்ளியம்மை நம்மைப் பொறுத்த வரையில் வெறும் தத்துவ விளக்கம் மட்டுமல்ல. முருகப் பிரானைத் தமிழகத்தின் தனிப் பெரும் மருகப் பிள்ளையாக்கி வைத்தவளாயிற்றே அவள்!

எனவே இந்தத் திருக்கார்த்திகை இனத்தன்று,

> எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
> எத்தனை அடியேன் எத்தனை செய்தால்
> பெற்றவன் நீ குரு பொறுப்பது உன் கடன்
> பெற்றவள் குறமகள் பெற்றவளாமே

என்று இருவரையுமே இறைஞ்சுவோம்;

## இப்பொழுது எல்லாவகை

# டெக்

## டூத்பிரஷ்களும்

# கிருமிகளை எதிர்க்கும் சக்தி வாய்ந்தவை!

டெக் டூத்பிரஷ்கள் கிருமிகளை அணுகின மாத்திரத்தில் எதிர்ப்பதற்கு பிரத்தியேக முறையில் தயாரிக்கப்பட்டவை. அவை வாயில் நோய்கள் வராமல் பாதுகாப்பவை. டெக் ஆண்டி - ஜெர்ம் டூத்பிரஷ்கள் பல் துலக்கும்போதும், பிறகு உபயோகிப்பதற்காக வைக்கப்பட்டிருக்கும்போதும், கிருமிகளை அணுகின மாத்திரத்தில் எதிர்க்கின்றன. டெக் ஆண்டி-ஜெர்ம் டூத்பிரஷ்களின் கிருமிகளை எதிர்க்கும் இந்த சக்தியானது கடைசிவரை இருக்கும்.

டெக் ஆண்டி-ஜெர்ம் பிரஷ்களின் பலவேறு ரகங்களிலிருந்து உங்களுக்குத் தேவையானதைப் பொறுக்கி எடுங்கள் ... இணையற்ற டெக் டீலக்ஸ் ரகம் தொட்டு குழந்தைகளுக்கான 'டெக் சைல்டு' வரை எல்லா ரக டூத்பிரஷ்களும் உள்ளன. டெக் ஆண்டி-ஜெர்ம் டூத்பிரஷ்கள் மிருதுவான, எனினும் துப்புரவாகச் சுத்தம் செய்யக்கூடிய குச்சங்களைப் பெற்றிருக்கின்றன. அவைகளின் சிறப்பான அம்சங்களைப் பாருங்கள் ...வேலைப்பாடுடன் கூடிய கைப்பிடிகள். 'மிரகிள் க்ரிப்'பிடிகள், அழகிய டீலக்ஸ் கைப்பிடிகள்...விதவிதமான கலர்கள்...கவரில் மாட்டக் கூடிய அழகான பிளாஸ்டிக் உறை! இத்தனை ரம்மியமான வகைகளில் டெக் ஆண்டி-ஜெர்ம் டூத்பிரஷ்கள் இருக்கும்பொழுது நீங்கள் ஏன் மட்டரக பிரஷ்களை வாங்கவேண்டும்!

**டெக்** ஒன்றுதான் கிருமிகளை எதிர்க்கக் கூடியது!

IWT.TEK.2716

**ஜான்ஸன் அண்டு ஜான்ஸன் ஆப் இந்தியா லிமிடெட்**

# அன்புள்ள

"வணக்கம். வாருங்கள். நலம் தானே....?"

வாசற்படி மேல் ஏறி நின்ற சிவதாணு சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். வீட்டின் கதவு பூட்டிக் கிடந்தது. வராந்தாத் தூணில் தொங்கிய பிளாஸ்டிக் பலகையில் பொறித்திருந்த 'கே. எஸ். காசிநாதன், எம். ஏ.' என்னும் பெயரின் கீழே 'அவுட்' என்ற எழுத்துக்கள் பளிச்செனத் தெரிந்தன. அந்தப் பெயர்ப் பலகைக்கு மேலே பொருத்தப் பெற்றிருந்த சிறியதொரு மரப்பெட்டியில் அன்று வந்த சில தபால் கடிதங்கள் விழுந்து கிடப்பது அதன் கண்ணாடிச் செருகல் வழியே காணப்பட்டன.

'வீடு சாத்திக் கிடக்கிறதே! யார் நம்மை வரவேற்பது?' என்று எண்ணிய சிவதாணு, மீண்டும் சுற்றி வளைத்துத் தன் பார்வையைச் செலுத்தினான். அந்தப் பெரிய வீடும் அதைச் சார்ந்த விசாலமான தோட்டமும் பாழடைந்த மாதிரித்தோற்றமளித்தன. வியப்படைந்த நிலையில் மோவாயைத் தடவியவாறு தயங்கி நின்றவன் ஏதோ சந்தேகமடைந்தவனாய் ஓரடி முன் சென்று பூட்டை இழுத்துப் பார்த்தான்.

"வணக்கம். வாருங்கள். நலம் தானே?"

திடுக்கிட்ட சிவதாணு பூட்டிக் கிடந்த பூட்டைச் சட்டென்று விட்டு விட்டுப் பின்னால் நகர்ந்து பரபரப்புடன் அங்குமிங்குமாகத் திரும்பி நோக்கினான். மாலை முதிர்ந்து வரும் அந்த மங்கலான நேரத்தில் அங்கு யாருமே இருப்பதாகத் தெரியவில்லை.

'என்ன இது. வேடிக்கை! எங்கிருந்து இந்த வரவேற்புக் குரல் கேட்கிறது? அதுவும் ஒரு பெண்ணின் குரல் போல் இருக்கிறதே!' – சிவதாணுவின் மனத்தில் அச்சம் புகுந்துகொண்டது. அவன் அங்கு வந்திருப்பதன் காரணமும், அவ்வீட்டின் சுற்றுப்புறச் சூழலும் அந்த அச்சத்தை மேலும் வளர்த்தன. ஒரு மாதத்துக்கு முன்னால் திடீரென்று இறந்து போன ஓர் இளம் பெண்ணின் தந்தையைப் பார்த்துத் துக்கம் விசாரித்துவிட்டுப் போகவே அவன் இங்கு வந்திருக்கிறான். இந்நிலையில், பூட்டிக் கிடக்கும் இவ் வீட்டினுள்ளிருந்து ஒரு பெண்ணின் வரவேற்புக் குரல் எழுகிறதென்றால்?.....

குழம்பி நின்ற சிவதாணு தன்னிடமிருந்த தைரியத்தையெல்லாம் கூட்டிச் சேர்த்து நெஞ்சில் அழுத்திக் கொண்டு அந்தக் குரல் வந்த திசையை நோக்கி மெள்ள நடந்து போய்,



# அஞ்சுகம்..

## ஜெக சிற்பியன்

வராந்தாவின் வலப் பக்கம் சாத்தாமல் ஒருக்களித்திருந்த ஒரு சன்னலை ஓசைப் படாமல் திறந்து பயப்பிராந்தியுடன் உள்ளே எட்டிப் பார்த்தான்.

'கிர்ர் - கீக்கீ - கிர்ர் - கீக்கீ!''

குபுக்கெனச் சிரித்து விட்டான் சிவதாணு. சிரித்துக் கொண்டே அந்தச் சன்னலைப் பரக்கத் திறந்து விட்டுத் தன் பார்வையை மீண்டும் உள்ளே செலுத்தினான்.

அழகாக விளங்கிய அவ் வறையின் சன்னலோரம் நிறுத்தப் பெற்றிருந்த ஒரு 'கோட்—ஸ்டாண்டில்' பித்தளைப் பூண்களிட்டுப் பாங்குற உருவாக்கிய கூண்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அந்தக் கூண்டினுள் முழு வளர்ச்சி பெற்ற பச்சைக் கிளியொன்று ஆவலுடன் சிறகுகளை அடித்து அங்குமிங்குமாக அவசர நடை பயின்று வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது!

தனக்குள் மெல்ல நகைத்துக் கொண்டே கைக்கடிகாரத்தை உயர்த்திப் பார்த்தான் சிவதாணு. மணி ஆறரையாகி விட்டிருந்தது. 'சரி; அவர் வரும்வரை இப்படி உட்கார்ந்திருப்போம்' என்று எண்ணியவனாய், தான் எடுத்து வந்த ஒரு கான்வாஸ் பையை இழுத்துப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, வராந்தாவில் கிடந்த பிரம்பு நாற்காலியில் அமர்ந்தான். செங்கல்பட்டிலிருந்து சென்னைக்குப் பஸ்ஸில் வந்ததால் அவன் உடம்பு வெகுவாகக் களைப்புற்றிருந்தது. அத்துடன், வந்த உடனேயே காசிநாதனைப் பார்க்க முடியாது போனதால் மனம் சோர்வுற்றது. ஆயினும் அவரை நேருக்கு நேர் சந்திக்கக் கூடிய அந்த முதல் விநாடி நேரத்தின் துக்ககரமான அநுபவத்தை நினைத்துப் பார்க்கும் போது அவ் விநாடியின் தூரம் தள்ளிப் போவதில் ஏதோ ஓர் ஆறுதல் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. 'அவர் இன்னும் சற்றுத் தாமதமாகவே வரட்டும்; அல்லது வராமலே போனாலும் நல்லதுதான்' என்பது போன்ற ஒரு விசித்திர மன நிலையில் சிக்கிய அவன் இரண்டு கால்களையும் நெடுக நீட்டி, உடம்பை நாற்காலியோடு சரித்துப் போட்டுச் சாய்ந்து கொண்டு மெல்லக் கண்களை மூடினான்.

புறப் புலன் அடைபட்டதுமே அகப் புலன் திறந்து கொள்வது சகஜமல்லவா? இதுவரையில் தீவிர முயற்சிசெய்து முடக்கிப் போட்டு வைத்திருந்த அந்தத் துயர நிகழ்ச்சிகளின் நினைவுகள் கட்டவிழ்ந்த ரப்பர்ப் பிரிச் சுருளை போல் அவனது மனப் பரப்பில் சிலிர்த்துக்கொண்டு நீண்டன.

''விதி என்பவன் என்னதான் வல்லவனாய் இருந்தாலும் ஒரு மனிதனின் வாழ்க்கையில் இத்தனை பெரிய அதிர்ச்சிகளையா கொண்டு வந்து குவிப்பது?'' என்று





கடுகடுப்போடு முணகினான் அவன். தினம் செறிந்த அவனுடைய இந்தக் கேள்வி நிரம்பவும் நியாயமானதே! ஓராண்டுக்கு முன்னால் இந்தப் பெரிய வீடும் இதன் சுற்றுப்புறச் சூழலும் எத்தனை சீரும் சிறப்புமாக, மகிழ்ச்சிக் கலகலப்புடன் விளங்கின! அதையெல்லாம் இப்போது கற்பனை பண்ணிக்கூடப் பார்க்க முடியாத நிலையில்லவா அடி புரண்டு போய் விட்டிருக்கிறது!...

சிவதாணுவின் தாய் மாமனான காசிநாதன் ஒரு கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருபவர். வயசு ஐம்பதுக்கு மேல் இருக்கும். தத்துவ சிந்தனைகளிலும் தமிழாராய்ச்சியிலுமாகத் தம் வாழ்க்கையை அமைத்துக் கொண்டிருந்த அவர், அறிஞர் பெருமக்களிடையே பெரிதும் மதிப்பு வாய்ந்தவராக விளங்கினார். அவரது இல்லத் துணைவியாக வந்து வாய்த்த கோமதியம்மாளைத் தமிழ்ப் பெண்ணினத்தின் திலகம் என்றுதான் சொல்ல வேண்டும். இவர்களின் ஒரே செல்வப் புத்திரியாகப் பிறந்து பெற்றோரின் குண நலன்கள் அத்தனையையும் வரித்துக் கொண்டு பதினாறு வயது நிரம்பப் பெற்ற அழகுப் பதுமையாய் வளர்ந்து நின்ற விஜயா, அந்த வருஷம்தான் பள்ளிப் படிப்பை முடித்துக் கொண்டு கல்லூரியில் சேர்ந்திருந்தாள். இந்த மூன்று பேர்கொண்ட சிறிய குடும்பத்தில் நிலவும் அமைதியையும் மகிழ்ச்சியையும் அந்நியோன்ய பாவத்தையும் காணும் யாருமே வியந்து பாராட்டாமலிரார்.

ஆயினும், எங்கும் எதிலும் ஏதேனும் ஒரு குறை வைத்துத் தமது அலகிலா சக்தியை நிலைநாட்டிக் காட்டுவது இறைவனின் செயல்களில் ஒன்றல்லவா? மனத்தளவில் எவ்விதக் குறையுமின்றி இனிமையாக நாட்களைக் கழித்து வந்த காசிநாதனின் உடம்புக்கு அடிக்கடி ஏதேனும் வந்து ஐந்தாறு நாட்கள்வரை பாடாய்ப் படுத்தி விட்டுப் போவது வழக்கமாயிற்று. உள்ளத்தின் திண்மை கொண்டு அதையெல்லாம் எளிதில் எதிர்த்து வந்த அவர், ஒரு சமயம் கடுமையான வயிற்று வலியால் பீடிக்கப்பட்டுப் படுக்கையில் விழுந்தார். அவரைப் பரிசோதித்த டாக்டர், வயிற்றில் ஏதோ கட்டியிருக்கிறது என்று கண்டு அறுவை சிகிச்சையை மேற்கொண்டார். ஒரு மாத காலம் வரை படுகிடையாய்க் கிடந்த காசிநாதன் வயிற்று வலியும் அறுவைத் தையலும் சொஸ்தமாகி எழுந்து நடமாடத் தொடங்கினார்.

ஆனால், அப்படிக் குணமடைந்த மறு வாரமே அவருக்குத் திடீரென்று ஜுரம் வந்து விட்டது. பலஹீனமான உடம்பிலும் அந்தக் கடுமையான ஜுரத்தைத் தாள மாட்டாமல் மூன்றே நாட்களில் உயிராபத்தான கட்டத்தை நெருங்கி விட்டார் அவர். டாக்டர்களும் கிட்டத்தட்ட நம்பிக்கை இழந்து, 'மனிதப் பிரயத்தனத்தால் இனி ஆகக் கூடியது ஒன்றுமில்லை: இறைவன்தான் கருணை செய்ய வேண்டும்' என்ற மன நிலைக்கு வந்து விட்டனர்.

கோமதியம்மாளும் விஜயாவும் புழுவாய்த் துடித்தனர். ஊண் உறக்கமின்றி இராப் பகலாகக் கண் விழித்துக் காசிநாதனின் பக்கத்திலேயே இருந்து பணிவிடைகள் செய்து வந்த அவர்களும் நோயாளிகள் போல் இளைத்துத் துரும்பாயினர்.

அன்று மாலை ஆறரை மணியிருக்கும். ஒளி கரந்து இருள் சுரந்து வரும் நேரம். பாதிப் பிரக்ஞை தவறிய நிலையில் படுத்துக் கிடந்தார் காசிநாதன். தலைமாட்டில் சோகமே உருவாய் உட்கார்ந்திருந்த விஜயா, திருவாசகத்தை மிக மெல்லிய இனிய குரலில் பாடிக் கொண்டிருந்தாள். கால்மாட்டில் கண்ணீரும் கம்பலையுமாக விம்மிப் பொருமிக் கொண்டு நின்றிருந்தாள் கோமதியம்மாள். கட்டிலைச் சுற்றி உறவினர்களும் நண்பர்களுமாகக் குழுமி நின்று கொண்டிருந்தனர்.

அறையில் விளக்கு ஏற்றப்பட்டது. இதுவரை விம்மிக் கரைந்து நின்று கொண்டிருந்த கோமதியம்மாள் ஏதோ நினைவு வரப் பெற்றவள் போல் சட்டென்று நிமிர்ந்து சுவரில் தொங்கிய ஒரு காலண்டரைப் பரபரப்புடன் பார்த்தாள். அன்று மூன்றும் பிரதமைத் திதி. வாடி வெளுத்துச் சோர்ந்திருந்த கோமதியம்மாளின் முகத்தில் இப்போது ஓர் அசாதாரண நம்பிக்கையொளி சுடர் விட்டது. அவள் மணமான காலத்திலிருந்து இதுவரை மூன்றும் பிரதமைத் திதியன்று சகல நேம நியமங்களுடன் முழு விரதமேற்றுத் தெய்வ சிந்தனைகளில் மனத்தை நிலைநிறுத்திப் பிரதமை தரிசனம் செய்வதை வழக்கமாகக் கொண்டவள். இதனால் மாங்கல்ய கெட்டிப்பாடு சித்திக்கும் என்பது அவளின் அசைக்க முடியாத நம்பிக்கை.

ஆனால், அன்றையதினம் அவளுக்கு அந்த நினைவே இல்லை. மரணப் படுக்கையில் கிடக்கும் கணவனின் அருகிலேயே பணிவிடைகள் செய்து வந்ததால், அன்று மூன்றும் பிரதமைத் திதி என்பது அவளுக்கு முற்றும் மறந்தே போய் விட்டது. ஆயினும் அவளையறியாமலே அன்றையதினம் அவள் மேற்கொள்ளக்

கூடிய எல்லா அநுஷ்டானங்களையும் கைக் கொண்டிருந்திருக்கிறாள் என்று தான் சொல்ல வேண்டும். அதாவது, பொழுது புலர்ந்தது முதல் இதுவரை யில் பச்சைத் தண்ணீர் கூட அவள் வாயில் படவில்லை. அவளது எண்ணம் முழுக்க முழுக்க இறைவனின் மீதே லயித்துக் கிடக்கிறது!....

கோமதியம்மாள் ஏதோ ஆவேசம் வந்தவள் போல் சட்டென்று திரும்பி, மொட்டை மாடிக்குச் செல்லும் படி களில் மளமளவென்று ஏறி விரைந்தாள். சுற்றிலும் நின்றவர்கள் இதைக் கண்டு திகைத்தனர்.

பூஞ்சை இருள் பூசிக் கிடந்த மாடித் தளத்துக்குத் தட்டுத் தடுமாறி ஏறி வந்த கோமதியம்மாள் மேற்றிசையில் திரும்பிப் பரபரப்புடன் தன் பார்வை யைச் செலுத்தினாள்.

அங்கே —

மேற்கு வானின் விளிம்பில் ஒளித் துகளால் கீறிய ஒரு சன்ன வளைவுக் கோடு போல் மூன்றாம் பிறை நிலா மிக மங்கலாக ஒட்டிக் கொண்டிருப்பது தெரிந்தது.

இடக் கையால் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு வலக் கையால் மாங்கல்யத்தை எடுத்து இறுகப் பற்றிய வாறு அந்தப் பிரதிமையைக் கண் ணிமைக்காமல் பார்த்துக் கொண்டு நின்ற கோமதியம்மாள் தன் வாய்க்குள் ளாகவே ஏதோ முனகியவளாய், கையி லிருந்த மாங்கல்யத்தை இரு கண்களி லும் ஒற்றிக் கொண்டபோது, கீழே யிருந்து ''அம்மா!'' என்ற விஜயாவின் அழைப்புக் குரல் கேட்டுத் திடுக்கிட்டுப் பதறி மாடித் தளத்திலிருந்து படிகளில் பாய்ந்து இறங்கினாள்.

மறுகணம், அந்தப் படிகளிலிருந்து ஏதோ ஒன்று கடகடவென்று உருளும் சத்தம் கேட்டது. காசிநாதனைச் சுற்றி நின்றிருந்தவர்கள் மாடிப்படியை நோக் கிப் பதற்றத்துடன் ஓடி வந்தனர்.. அங்கே காலிடறி உருண்டு நெஞ்சில் பலத்த அடிபட்ட நிலையில் வெற்றுடம் பாக விழுந்து கிடந்தாள் கோமதி யம்மாள்!

விதியின் விலை விளையாட்டை என் னென்பது? மரணப் படுக்கையில் கிடந்த காசிநாதன் பிழைத்தெழுந்து கொண் டார்! சொற்ப நாட்களில் அவருக்குப் பூரண சுகம் திரும்பி வந்து விட்டது.

காசிநாதன் தம் மனைவியின் மறை வைக் குறித்துச் சொன்னது இதுதான்: ''அவள் சாவித்திரியின் வழி வந்த ஒரு தெய்வப் பெண். என்னுயிரைத் தேடி வந்த எமனின் கையில் தன்னுயிரை



''ஐயா வீட்டில் இருக்கிறாரா?''

'போங்கய்யா! உங்களுக்கு பயந்து கொண்டு அவர் வீட்டுக்கு வருகிறதே இல்லை...அவர் எங்கேயாவது அகப் பட்டால் முதலில் கண்டு பிடித்து வீட்டுக்கு அனுப்புங்கள்.''

சுடாகக் கொடுத்து விட்டு மறைந்து போனாள்....''

மனித வாழ்க்கையின் நிலையாமையை நன்குணர்ந்தவரான காசிநாதன், தம் மனைவியின் மறைவினால் ஏற்பட்ட தாங் கொணாத் துக்கத்தை நெஞ்சின் ஆழத்தில் போட்டு அழுத்திக் கொண்டு, மேலுக்கு ஒன்றுமே உணராதவர் மாதிரி நடந்து கொள்ளலானார். ஆயினும், அதை யொட்டி அவரிடம் ஒரு பெரிய மாறுதல் வெளிப்படையாகத் தென்படவே செய் தது. அது அவரது செல்வ மகள் விஜயா வின் மீது காட்டத் தொடங்கிய அள வற்ற பாசப் பரிவுதான். இந்த உலகமே அவருக்குத் தம் மகளின் வடிவாக மாறிப் போய் விட்டது!

இப்படித் தம் மகள் விஜயாவை ய உயிராகவும் உலகமாகவும் கொண்டு, அமைதியாக நாட்களைக் கழித்து வந்த காசிநாதனின் வாழ்க்கையில் விதி மீண்டும் குறுக்கிட்டது. அந்தக் குறுக் கீட்டின் விளைவு?....

''வணக்கம். வாருங்கள். நலம் தானே?...''

சட்டெனக் கண் விழித்த சிவதாணு அவசரமாக எழுந்து நின்றான்.

''நன்னலமே விஜயா!'' எனப் புன் முறுவலுடன் கூறிக் கொண்டே வாசற் படி மீது ஏறி வந்த காசிநாதன், அப் போதுதான் அங்கு சிவதாணு நின்றிருப் பதைக் கவனித்தவராய் மெள்ளத் தலை நிமிர்ந்து, ''என்ன தம்பி, சௌக் கியமா?'' என்றார் அன்புக் குரலில்.

''வணக்கம், மாமா!'' என்று கம்மிய தொனியில் தழுதழுத்த சிவதாணுவின் கண்கள் கலங்கி விட்டன. உதடுகளைக் கடித்துத் தன் துக்கத்தை அடக்கிக் கொண்டு தலைகுனிந்து நின்றான் அவன்.

காசிநாதனோ எவ்வித உணர்ச்சியையும் காட்டிக் கொள்ளாமல் அமைதியாக அவனைப் பார்த்துப் புன்னகை பூத்தார். ஆனால், அவருடைய பரந்த நெற்றி மேட்டில் மட்டும் குப்பென வியர்வைத் துளிகள் அரும்பின. ''வா, தம்பி! வந்து வெகு நேரமாகிறதா? ஊரிலிருந்து வருவதாக எனக்கு ஒரு கடிதம் கூடப் போடவில்லையே?'' என்று அன்புடன் சொல்லிக்கொண்டே கதவைத் திறந்து உள்ளே சென்றார். அவரைப் பின்தொடர்ந்தான் சிவதாணு.

''உட்கார், தம்பி!'' என்று ஓர் இருக்கையைக் காட்டி விட்டு மற்றோர் அறைக்குச் சென்ற காசிநாதன், முகம் கை கால்களையெல்லாம் கழுவிக் கொண்டு திரும்பி வந்தார்.

''வணக்கம். வாருங்கள். நலம் தானே?'' – கூண்டின் குறுக்குச் சட்டத்தின் மீது அங்குமிங்குமாக அழகு நடை நடந்து கொண்டே தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துத் தெள்ளத் தெளிந்த தீங்குரலில் கொஞ்சியது அந்த அஞ்சுகம்.

''நன்னலமே விஜயா!'' எனப் பூஞ் சிரிப்புடன் சொல்லியவாறு குளிர்ப்பதனப் பெட்டியைத் திறந்து ஒரு கொத்துத் திராட்சைப் பழமும் ஒரு வாழைப் பழமும் எடுத்து வந்து கிளிக் கூண்டின் கதவைத் திறந்து உள்ளே வைத்தார் காசிநாதன். சிறகுகளை அடித்துக் கொண்டு குறுக்குச் சட்டத்தை விட்டுக் கீழே இறங்கிய கிளி அவரது கையை இதமாக இருமுறை கொத்திக் கிசுகிசுத்து விட்டு, திராட்சைப் பழத்தைக் கவ்வியவாறு மேலே ஏறி அமர்ந்து கொண்டு சுவைத்து உண்ணத் தொடங்கியது. கூஜாவிலிருந்து ஒரு கிண்ணத்தில் தண்ணீர் எடுத்து வந்து கூண்டினுள் வைத்து விட்டுச் சிவதாணுவின் எதிரில் போய் அமர்ந்தார். இவ்வளவையும் வியப்புச் செறிந்த அமைதியுடன் பார்த்துக் கொண்டிருந்தான் சிவதாணு.

''வீட்டில் சிவகாமி, குழந்தை கோபு எல்லாரும் சுகம்தானே?'' என்று பரிவுடன் விசாரித்தார் காசிநாதன்.

குவிந்த பார்வையுடன், 'ஆம்' என்று தலையசைத்தான் சிவதாணு. சிறு வயது முதலே அவனுக்கு அவர் மீது மிகுந்த அன்பும் மரியாதையும் உண்டு. அவனுடைய படிப்புக்காகவும், படிப்பு முடிந்த பின் பாங்கியொன்றில் உத்தியோகம் பெறவும் அவரே பெரிதும் உதவி செய்தார். அதன் பின், சிவகாமியைப் பெண் பார்த்துத் தம் சொந்தச் செலவில் அவனுக்குத் திருமணமும் செய்து வைத்தார். திருமணமான மறு வருஷம் அவன் வேலை மாற்றலாகிச் செங்கல்பட்டுக்குக் குடும்பத்தோடு போய் விட்டான். ஆயினும், இரண்டு மாதங்களுக்கொரு முறையேனும் சென்னைக்கு வந்து தன் அக்காளையும் மாமாவையும் பார்த்து விட்டுப் போவதில் தவறுவதில்லை. அவனுடைய தமக்கை கோமதியம்மாள் அகால மரணமடைந்தபோது அவன் தன் மனைவி மக்களோடு இந்த வீட்டில்தான் தங்கியிருந்தான். தமக்கையின் சமக் கடன்களை முடித்துக் கொண்டு ஊருக்குப் போன அவன், இவ்வீட்டுக்கு வருவது இதுவே முதல் தடவை.

''என்ன தம்பி! ஒன்றுமே பேசாமல் மௌனமாக உட்கார்ந்திருக்கிறாய்? என் மீது கோபமா?'' என்று புன்னகையுடன் வினவினார் காசிநாதன். ஆத்திரமும், துக்கமும் அடைத்துக் கொண்டு வர அவரை ஏறிட்டுப் பார்த்து விட்டுச் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டான் சிவதாணு.

காசிநாதனின் பார்வை வேறு பக்கம் திரும்பியது. அவர் மெல்லக் கண்களை மூடியவாறு, ''என்மேல் உனக்குக்கோபம் இருந்தால் அது தவறென்று சொல்ல மாட்டேன்! ஏனென்றால் உனக்கு அவசியம் தெரிவித்திருக்க வேண்டிய அந்த முக்கிய சேதியை நான் தெரிவிக்காமலே இருந்து விட்டேன்! என்ன செய்வது? எனக்கே அந்த விஷயத்தை உண்மை என்று நம்ப ஒரு வாரம் பிடித்ததே!'' என்றார் கரகரத்த குரலில்.

''இப்படி நடக்குமென்று நான் கனவில் கூட நினைக்கவில்லை, மாமா!'' என்றான் சிவதாணு, விம்மலும் பொருமலுமாக.

காசிநாதன் இதைக் கேட்டு மெல்லச் சிரித்தார். ''விதியின் கரங்களால் எழுதப்படும் வாசகம் மிக மிக இரகசியமானது. அதை எழுதியவனே அது செயல்படும் தினத்தன்று தான் அதனைத் தெரிந்து கொள்கிறான்'' என்று கனவில் முனகுவது போல் சொன்னார்.

சிவதாணு அவர் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு தன் இருக்கையை விட்டுச் சற்றே முன் தள்ளி வந்து ''விஜயாவின் மறைவைத் தான் உடனே உங்களால் எனக்குத் தெரியப்படுத்த முடியவில்லை. அவள் நோய்ப் படுக்கையில் கிடந்தபோதாவது தெரிவித்திருக்கலாம் அல்லவா?'' என்று குற்றம் சுமத்துவது போல் ஒருவித படபடப்புடன் கேட்டான்.

காசிநாதன் இதற்குப் பதிலொன்றும் சொல்லாமல் சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு நீண்டதொரு பெருமூச்சு விட்டவராய்த் தணிந்த குரலில் சொன்னார்: ''அவள் எவ்வித நோய்க்கும் உள்ளாகவில்லையே தம்பி!''

திடுக்கிட்டவன் போல் நிமிர்ந்த சிவதானு, ''என்ன மாமா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று அவசரமாக வினவினான்.

''ஆமாம், தம்பி! அதுதான் நடந்த உண்மை!'' என்று சொன்ன காசிநாதன் சாய்வு நாற்காலியில் சோர்வுடன் சாய்ந்து கொண்டு அடைத்த குரலில் தொடர்ந்து பேசலானார்: ''அன்று வெள்ளிக்கிழமை. விஜயாவும் நானும் கல்லூரியிலிருந்து வீடு வந்து சேர்ந்ததும் சிற்றுண்டியை முடித்துக் கொண்டு வழக்கம்போல் உலாவி வருவதற்காக வெளியே புறப்பட்டோம். ஆர்க்காடு சாலைவழியே நெடுகச் சென்று கொண்டிருந்த நாங்கள் மாலை ஆறு மணி வாக்கில் கிட்டத்தட்ட விருகம்பாக்கத்தையே நெருங்கி விட்டோம். இனிமையும் அமைதியுமான அந்த மாலை நேரத்தில் கம்பனைப் பற்றிய சுவையான உரையாடலில் நடைச் சிரமத்தையும் நேரத்தின் நழுவலையும் உணராமல் வெகுதூரம் வந்துவிட்டதை அப்போதுதான் எங்களால் அறிய முடிந்தது. ஆயினும் அதற்காக எவ்விதப் பதற்றமும் கொள்ளாமல் சாவதானமாகவே திரும்பி வரலானோம். அந்தச் சாலையின் இரு பக்கமும் புதராக வளர்ந்திருந்த செடிகொடிகளின் பசுமைக் காட்சிகளை மனம் திறந்துபார்த்து ரசித்தவாறு குதூகலமாக என்னோடு வந்து கொண்டிருந்தாள் விஜயா. ஏதோ சிந்தனையில் மூழ்கியவனாய்க் கைத்தடியை வீசி வீசி ஊன்றியபடி நடந்து கொண்டிருந்த நான் சட்டென்று நின்று சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தேன். அந்த நிச்சலனமான சூழ்நிலையில் எங்கோ ஓர் இடத்திலிருந்து மனோரஞ்சித மலரின் சுகந்த மணம் மென்காற்றில் மிதந்து வந்து என் நாசியை வருடியது. 'என்ன அப்பா?' என்று வினவினாள் விஜயா. பிறகு, 'ஓ.... மனோரஞ்சிதப் பூவின் வாசனை எங்கிருந்தோ கமகமக்கிறதே!' என்று ஆவலுடன் கண்களை அகல விரித்தாள். பாதையின் வலப் பக்கம் பச்சைத் தேர் போல் பம்மலாக வளர்ந்து நின்ற காட்டுக் கொடிகளின் குவியலுக்கு மேலே மனோரஞ்சிதச் செடியின் ஒற்றைக் கிளையொன்று தலைநிமிர்ந்து நிற்பதையும், அதன் கரும் பச்சை இலைக் கணுக்களினிடையே வெளிர்ப் பச்சை நிறமான — தடித்த இதழ்களுடன் கூடிய — இரு



''எனக்குக்கூடத் தெரியாமல் கனகாம்பரக் கலரிலே ஒரு புடவை வாங்கி உங்கள் பெட்டிக்குள்ளே வைத்திருந்தீர்களே! அது 'பஸ்ட்' கிளாஸாக இருக்கு!''

''புடவையா? இத்தனை நாளாக உனக்குப் புடவையாக வாங்கிக் கொடுத்து அலுத்துப்போய் எனக்காக வாங்கி வைத்திருந்த காஷாயத் துணின்னா அது!''

மனோரஞ்சித மலர்கள் முகையவிழ்ந்திருப்பதையும் நான் கண்டு விட்டேன். அந்த மலர்களைப் பார்த்ததும் என் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் அலை புரண்டன. மனித மனத்தில் புதைந்து கிடக்கும் இன்ப — துன்ப நினைவுகளைக் குத்திக் கிளறும் சக்தி மலர்களின் மணங்களுக்குத்தான் அதிகமாக இருக்கிறதென்பது என் அபிப்பிராயம். உன் தமக்கை கோமதிக்கு மனோரஞ்சிதம் என்றால் உயிர். சட்டென்று எனக்கு ஓர் ஆசை பிறந்தது. புத்தம் புதிய அந்த மலர்களைப் பறித்துக் கொண்டு போய் அவளுடைய படத்துக்குச் சூட்ட வேண்டுமென்ற ஆசைதான் அது. மனிதன் எவ்வளவுதான் மேலே மேலே உயர்ந்து போனாலும் திடீர் திடீரெனக் கிளர்ந்தெழும் அற்ப ஆசைகளின் ஈர்ப்பில் இருந்து அவனால் முழுதுமாக விடுபட முடிவதில்லை. 'உனக்கும் ஒரு பூ வேண்டுமா, விஜயா?' என்று அசட்டுச் சிரிப்புடன் கேட்டுக் கொண்டே அந்தக் கொடிப் புதரின் அருகில் போய் நின்று, கைத்தடியின் பின் பக்க வளைவை உயர்த்தி, புதருக்கு மேலே காற்றில் அசைந்தாடிக் கொண்டிருந்த மனோரஞ்சிதச் செடியின் கிளையை வளைத்துக்

ழே தாழ்த்திக் கொண்டு, மறு கையால் அவ்விரு பூக்களையும் பறிப்பதில் முனைந்தேன். அண்ணாந்து பார்த்தபடி எனக்குப் பின்னால் வந்து நின்று கொண்டிருந்த விஜயா, திடீரென்று உரத்த குரலில் ''அப்பா!'' என்று கூவிக் கொண்டே என் கையைப் பற்றி இழுத்து அப்பால் தள்ளினாள். அதிர்ச்சியுற்ற நான் சாலையின் நடுவில் போய் மடாரென விழுந்தேன். விழுந்த அதே வேகத்தில் எழுந்து நின்று திகிலுடன் திரும்பிப் பார்த்தேன். நான் பூப்பறித்துக் கொண்டு நின்ற இடத்திலிருந்து ஒரு கயிற்றரவு கன வேகமாகப் புதரில் ஓடி மறைந்தது. விஜயா தன் இடது காலைக் குனிந்து அழுத்திப் பிடித்தவாறு தட்டுத் தடுமாறி வந்து என் மேல் துவண்டு சாய்ந்தாள். இச்சமயம் அவ்வழியே ஒரு லாரி வந்தது. அதை நிறுத்தி விஜயாவை அதில் தூக்கிப் போட்டுக் கொண்டு, ஆஸ்பத்திரிக்கு விரைந்தேன்!....''

காசிநாதனின் பேச்சுக் குரல் நின்று போயிற்று. ஆனால் அவருடைய உதடுகள் மட்டும் பேசுவதுபோல் அசைந்து கொண்டிருந்தன. ஒன்றிரண்டு விநாடிகளுக்குப் பின் சட்டென்று நிமிர்ந்த அவர், ''என்ன சொன்னேன்? ஒன்றுமில்லையா?...விஷயம் அவ்வளவுதான். என் அருமைச் செல்வி விஜயா நடு வழியிலேயே கண்ணை மூடி விட்டாள்! என்னுயிரைத் தேடி வந்த எமனின் கையில் அவள் தன்னுயிரை ஈடாகக் கொடுத்து விட்டுப் போய் விட்டாள்!'' என்று கூறினார் கசந்த குரலில்.

பிரமை பிடித்தவன் போல் வேர்த்து விறுவிறுத்து உட்கார்ந்திருந்தான் சிவதாணு.

நீண்ட நேர மௌனத்துக்குப் பின் காசிநாதனின் முகத்தில் பழைய தெளிவும் புன்சிரிப்பும் வந்து குடியேறின. அவர் சாவதானமாக நிமிர்ந்து, ''மணி எட்டாகி விட்டதே!..இன்றைக்கு என்னால் சமையல் வேலை செய்ய முடியாதென்று நினைக்கிறேன்!... சிவதாணு, தயவுசெய்து ஹோட்டலுக்குப் போய் நம் இரண்டு பேருக்குமாகச் சாப்பாடு எடுத்துக் கொண்டு வந்து விடு!'' என்று கூறினார்.

அடுக்குப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வெளியேறினான் சிவதாணு.

இரவு உணவை முடித்துக் கொண்டு இருவரும் பழையபடி அந்த அறையில் வந்து அமர்ந்து குடும்ப விஷயமாகப் பலதும் பேசிக் கொண்டிருந்தனர்.

சிவதாணு சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்து, ''நான் இங்கே எதற்காக வந்திருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியுமா, மாமா?'' என்று கேட்டான்.

''அந்த விஷயம்தான் முடிந்து விட்டதே! மறுபடியும் ஏன் அதைக் கிளறுகிறாய்?'' என்று சற்றே சலிப்புடன் சொன்னார் காசிநாதன்.

''இல்லை மாமா! நான் இங்கு வந்த காரியத்தை இன்னும் உங்களிடம் வெளிப்படுத்தவில்லை.''

காசிநாதன் அவனை அமைதியாக ஏறிட்டுப் பார்த்தார். சிவதாணு கூச்சத்துடன் தலைகுனிந்து மென்று விழுங்கிக் கொண்டு சொன்னான்: ''உங்களுக்கு நான் புத்தி சொல்வதாக நினைக்க வேண்டாம், மாமா! நானும் என் மனைவியும் பல நாட்கள் யோசனை செய்தே இந்த முடிவுக்கு வந்திருக்கிறோம். அதாவது உங்களை இனிமேல் தனியாக இங்கு விட்டு வைக்க எங்களுக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை.''

காசிநாதனின் முகத்தில் ஒரு புன்முறுவல் தவழ்ந்தது. சிவதாணு தொடர்ந்து பேசினான். ''உங்களுக்கோ வயசாகி விட்டது. கல்லூரியிலிருந்து ரிடையராக இன்னும் மூன்று வருஷங்கள்தாம் இருக்கின்றன என்று நினைக்கிறேன். இங்கு தனிமையில் இருந்து கொண்டும், தனியாகச் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டும் எதற்காகச் சிரமப்படவேண்டும்? இனி உழைத்துச் சம்பாதிக்க வேண்டிய அவசியம்தான் என்ன? வேலையை ராஜிநாமா செய்து விட்டுப் பேசாமல் எங்களோடு வந்து தங்கி அமைதியாக நாட்களைக் கழிக்கலாமே! இந்த வீட்டை விட்டு நீங்கள் கொஞ்ச காலத்துக்கேனும் வேறு இடத்தில் வசித்தாக வேண்டும். இதைத்தான் நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். உங்களுக்காக என் வீட்டின் மாடி அறைகளைத் துப்புரவு செய்து வைத்திருக்கிறேன். எங்களோடு நீங்கள் வந்து தங்கினால் அது எங்களுக்கும் பெரிய ஆறுதலாகவும் ஆதரவாகவும் இருக்கும்.''

காசிநாதன் ஏதோ யோசனையில் மௌனமாகவே இருந்தார். சிவதாணுவுக்கு மேற்கொண்டு என்ன பேசுவதென்றே தோன்றவில்லை. அவன் அவரை ஆவல் மேவிய பரபரப்புடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

சாய்வு நாற்காலியிலிருந்து மெள்ள நிமிர்ந்து உட்கார்ந்த காசிநாதன் சிரித்துக் கொண்டே, ''ஆமாம்....நான் தனியாய் இருப்பதாக யார் உனக்குச் சொன்னது?'' என்று கேட்டார்.

சிவதாணுவுக்கு ஒன்றும் புரியவில்லை. அவரைப் பேந்தப் பேந்தப் பார்த்து விழித்தான் அவன்.



"தினமும் இவர் எழுதுவதைப் படிக்காதவர்கள் கிடையாது. ரொம்ப இனிமையாகவும் காரசாரமாகவும் பிரித்துப் பிரித்து எழுதுவார்!"

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் இவர் ஓட்டலில் 'ஸ்வீட்' 'சேவரி' போர்டு எழுதுபவர் என்றல்லவா தோன்றுகிறது."

காசிநாதன் மீண்டும் நகைத்துக் கொண்டே அவனைக் குறும்பாகப் பார்த்து, "சிவதாணு! எனக்கு இந்த வீட்டில் இருப்பதால் எவ்விதச் சிரமமும் இல்லை. எனக்கு வேண்டிய உணவை நானே சமைத்துக் கொள்வதை ஒரு நல்ல பொழுதுபோக்காகக் கொண்டிருப்பதால் அதுவும் எனக்குச் சிரமமாகத் தோன்றவில்லை. மேலும், நான் நடந்து போன நிகழ்ச்சிகளை எண்ணிக் கவலைப்படும் நிலையை விட்டு வெளியேறி நீண்ட நாட்களாகி விட்டன. இவையெல்லாம் ஒருபுறமிருந்தாலும் நான் இங்கு தனியாக இல்லை என்பதை மட்டும் உனக்கு நிச்சயப்படுத்திச் சொல்ல விரும்புகிறேன். வேண்டுமானால் அதை நீயே நேரிடையாகப் பார்த்துக் கொள்ளலாம்!" என்று கூறியவாறு மெள்ள எழுந்து போய், புத்தக அலமாரியிலேயிருந்து ஓர் அழகிய சிறு புத்தகத்தை எடுத்துக் கொண்டு திரும்பி வந்து அமர்ந்தார்.

வியப்பால் வாயடைத்து உட்கார்ந்திருந்த சிவதாணு ஆவலுடன் கழுத்தை நீட்டி அவர் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்தான். கெட்டியான சிவப்பு அட்டையுடன் கூடிய திருக்குறள் புத்தகம் அது!

கிளிக் கூண்டு இருக்கும் பக்கமாகத் திரும்பி உட்கார்ந்த காசிநாதன், அந்தப் புத்தகத்தில் ஏற்கனவே அடையாளம் இட்டு வைத்திருந்த ஒரு பக்கத்தை அமைதியாகப் புரட்டிப் பார்த்தார். மறுகணம் —

"அன்பின் வழியது உயிர்நிலை—"

திகைத்துத் திணறி விட்டான் சிவதாணு. காரணம், கூண்டிலிருந்து கிளி அழகாகத் தலையைச் சாய்த்து வைத்துக் கொண்டு தன் பவழ வாயைத் திறந்து இனிய குரலில் தெள்ளத் தெளிய இப்படிச் சொல்லி நிறுத்தியது.

புத்தகத்தை மூடி வைத்து விட்டு எழுந்த காசிநாதன், "......அஃதிலார்க்கு என்புதோல்போர்த்த உடம்பு" என்று புன்னகையுடன் கூறிக்கொண்டே போய் ஒரு கறுப்புத் திராட்சையை எடுத்துக் கிளிக்குக் கொடுத்து விட்டுத் திரும்பி வந்து அமர்ந்தார்.

சில விநாடிகள் வரை அந்த அறையிலே ஆழ்ந்த நிசப்தம் நிலவியது. சாய்வு நாற்காலியில் சாய்ந்தவண்ணம் அந்தக் கிளியையே பார்த்துக் கொண்டிருந்த காசிநாதன் மெல்லப் பெருமூச்சு விட்டவராய்த் தணிந்த குரலில் சொன்னார்: "சிவதாணு! இப்போது தெரிந்து கொண்டாயா? நான் இங்கே தனிமையில் இல்லை என்பதை...? என் அருமை மகள் விஜயாதான் இந்தக் கிளியை வாங்கி வளர்த்து, அதற்கு இக் குறட்பாவின் முதலடியைச் சொல்லிக் கொடுத்தாள். தனக்குப் பின் தன் தந்தைக்கு ஒரு துணை வேண்டும் என்பதற்காகவே அவள் இந்தக் காரியத்தைச் செய்தாளோ என்னவோ! அவள் சாகவில்லை. இந்த வீட்டில் இந்தக் கிளியின் வடிவிலே இதோ என்னைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறாள். அவளது சங்கு நிறக் கழுத்தில் அணிந்திருந்த கருகமணி மாலையைப் போலவே இந்தக் கிளியும் தன் பசிய வண்ணக் கழுத்தில் கருங்கோட்டு ஹாரம் அணிந்து கொண்டிருப்பதைப் பார், தம்பி! தினமும் காலை மாலை என்னைப் பார்த்து, 'வணக்கம், வாருங்கள் நலம்தானே?' என்று என் மகள் விஜயாவைப் போலவே இந்தக் கிளி கொஞ்சிக் கொஞ்சிக் கேட்கும் போது, நான் சஞ்சீவியை உட்கொண்டவன் போல் புளகாங்கிதம் அடைகிறேன். ஒரு மனிதனுக்கு இதைவிடப் பெரிய இன்பமும் துணையுமா வேண்டும்? இது போதும்; இதுவே எனக்குப் போதும்!" அவர் கண்கள் பனித்துப் பனித்திட்டன.

மறு நாள் காசிநாதனிடம் விடை பெற்றுக் கொண்டு ஊருக்குப் புறப்பட்டான் சிவதாணு.

அடுத்த வாரம் வெள்ளிக்கிழமை காலை ஒன்பது மணி இருக்கும். சிவதாணு காரியாலயத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்த சமயம், தந்திச் சேவ

கன் வந்து ஒரு தந்தியைக் கொடுத்து விட்டுச் சென்ருன்.

'காசிநாதன் உடல் நலமின்றிப் படுத் திருக்கிருர். உடனே புறப்பட்டு வர வும்' என்று தந்தியில் குறிப்பிட்டிருந் தது. ஆபீசுக்கு லீவு எழுதி அனுப்பி விட்டுத் தன் மனைவி சிவகாமியையும், மகன் கோபுவையும் அழைத்துக் கொண்டு உடனே சென்னைக்குப் புறப் பட்டான் சிவதாணு.

ஒராண்டுக்கு முன்னுல் அந்த மூன் ரும் பிறை நாளன்று, காசிநாதனின் வீடு எப்படி இருந்ததோ, அதே போல் இன்றும் காட்சியளித்தது. உறவினர் களும் நண்பர்களும் ஒருசேர வந்து குழுமியிருந்தனர். வெட்டிச் சாய்த்த வாழை மரம் போல் கட்டிலில் படுத்துக் கிடந்தார் காசிநாதன். நூற்று ஆறு டிகிரிக்கு மேல் ஜுரம் கனல் பறந்து கொண்டிருந்ததால் அவருக்குச் சுயப் பிரக்ஞையே தவறிப் போய் விட் டிருந்தது.

மூன்று நாட்களாக அவர் பக்கத்தி லேயே இருந்து தம் முழுத் திறமையை யும் காட்டிச் சிகிச்சை செய்து வந்த டாக்டரின் முகத்தில் நேரமாக ஆக அவநம்பிக்கை நிலவ ஆரம்பித்தது. அவர் சிவதாணுவைத் தனியே அழைத் துப் போய், ''என்னுல் இயன்றவரை முயன்று பார்த்து விட்டேன். இனி கடவுள்தான் அவரைக் காப்பாற்ற வேண்டும். நாளைக் காலை வரை அவ ருடைய ஜீவன் உடலில் ஒட்டிக் கொண் டிருந்தால் மட்டுமே மேற்கொண்டு சிகிச்சை செய்யலாம் என்ற முடிவுக்கு வந்து விட்டேன். அவசரத் தேவைக்கு மருந்து இருக்கிறது. இன்றிரவு ஒரு பொழுது அவரை ஜாக்கிரதையாகக் கவனித்து வாருங்கள்'' என்று கூறி விட்டு மன வேதனையோடு அங்கிருந்து கிளம்பிச் சென்ருர்.

காசிநாதனுக்குரிய ஏராளமான சொத்துக்கள் இனி என்ன ஆகுமோ, யாரிடம் போய்ச் சேருமோ என்று கவ லைப்பட்ட சில உறவினர்கள் கும்பல் கூடிக் கசமுசவெனப் பேசலானுர்கள். மற்றவர்கள் காசிநாதன் படுத்துக் கிடந்த கட்டிலைச் சுற்றி நின்று கண் கலங்கிக் கொண்டிருந்தார்கள். கால் மாட்டில் நின்றிருந்த சிவதாணு சிறு பிள்ளை போல் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தான். அவரை அவன் எத்தனை ஆழ்ந்த அன்புடன் நேசித்திருக் கிறுன் என்பதை அவனுடைய கண்களி லிருந்து மடை திறந்து கொட்டும் கண் ணீர் சாட்சி பகர்ந்தது.

இரவு மணி பத்து இருக்கும். எங் கும் நிசப்தம் நிலவியது. அன்பும் அறமும் சத்திய நெறியும் கொண்டு எல் லார்க்கும் நல்லவராய்ப் பெரு வாழ்வு வாழ்ந்த பெரிய மனிதரொருவரின் தூய ஜீவன், தம் கண்ணெதிரே — இன்னும் ஒரு சில விநாடிகளில் — பறந்தோடிப் போகப் போகிறதே என்ற தாள முடி யாத அவல உணர்ச்சியால் தாக்குண்ட ஒவ்வொருவரும் நெஞ்சு நெக்கு விட்டு விரியத் தலைகுனிந்து நின்று கொண் டிருந்தனர்.

மனத்தை முறுக்கிப் பிழியும் வித மாக அங்கு நிலவியிருந்த நிசப்தத்தை இதமாக வருடிக் கலைப்பது போல், பக் கத்து அறையிலிருந்து ஓர் இனிய குரல் எழுந்து ஒலித்தது.

''வணக்கம். வாருங்கள், நலம் தானே?''

கட்டிலைச் சுற்றிக் கல்லாய் மரமாய்ச் சமைந்து நின்ற அனைவரும் தலை நிமிர்ந்து அவ்வொலி வந்த திக்கில் திரும்பினர். அதே சமயம், இவ்வளவு நேரமாக எவ்வித அசைவுமின்றி மரக் கட்டை போல் படுத்துக் கிடந்த காசி நாதன் மெல்லக் கண் திறந்தார். முகத் தில் ஓர் அசாதாரணப் புன்னகை தவழ அங்கிருந்த அனைவரையும் அமைதியாகப் பார்த்தார். பிறகு தம் கால்மாட்டில் நின்று கொண்டிருந்த சிவதாணுவை நோக்கி ஏதோ சமிக்ஞை செய்வது போல் ஹீனமாகக் கண்ணிமைகளை அசைத்தார். அந்தச் சமிக்ஞையை அந்தக் கணமே புரிந்து கொண்டவனுய்ச் சரேலென அடுத்த அறைக்கு விரைந்து சென்ருன் சிவதாணு.

அங்கே, அவன் கண்ட காட்சி?

கிளிக் கூண்டின் கதவு திறந்து கிடந் தது. சிறகுகளைப் படபடவென அடித் துத் திமிறிய அந்தப் பச்சைக் கிளியின் கழுத்தை இறுகப் பற்றிக் கவ்விக்கொண் டிருந்த ஒரு கறுப்புப் பூனை, சன்னல் வழியே வெளியே பாய்ந்து இருளில் புகுந்து மறைந்தது!

விதியின் விளையாட்டை என்னென் பது? மரணப் படுக்கையில் கிடந்த காசிநாதன் மறுபடியும் பிழைத் தெழுந்து கொண்டார்!

படுக்கையை விட்டு எழுந்து உட் கார்ந்த அவர் முதன் முதலாகச் சொன் னது இதுதான்: ''என்னுயிரைத் தேடி வந்த எமனின் கையில் அந்தக் கிளி தன்னுயிரை ஈடாகக் கொடுத்து விட்டுப் போய் விட்டது! பூனை வடிவிலே வந்த யமனைப் பார்த்துக் கூட, 'வணக்கம், வாருங்கள், நலம்தானே?' என்று பண் புடன் வரவேற்ற அந்தக் கிளியின் பெரு மையை எப்படிப் போற்றுவதென்றே எனக்குத் தெரியவில்லை!''



ஏழு
வைட்டமின்கள்
சேர்ந்தது, ஏற்றமிக
அமுல் பாலுணவு
Amul
புரதச்சத்து நிறைந்த அமுல் பாலுணவு வைட்டமின் ஏ, பி, பி, பி, சி, டி ஆகிய சத்துக்களும், நியசினமைடும் கொண்டது. இந்த வைட்டமின் சத்துக்கள் சீரிய, ஆரோக்கியமிக்க வளர்ச்சிக்கு உதவுவதோடு உங்கள் மழலைச் செல்வத்தை நோயிலே இருந்து காத்திடுகின்றன.
தயாரிப்பாளர்கள்:
கெய்ரா டிஸ்ட்ரிக்ட் கோஆப்பரேடிவ் மில்க் ப்ரொட்யூசர்ஸ் யூனியன் லிட்.
அகில இந்திய விநியோகஸ்தர்கள்: VOLTAS வோல்டாஸ் லிமிடெட்.
உங்கள் குழந்தை மிகச் சிறந்தது... அமுல் பால் உணவும் அவ்வாறே!



# தாய்சொல்லைத் தட்டாதே

மோகன்-ராஜு இருவரும் ராஜம்மாவின் பிள்ளைகள்; மூத்தவன், மோகன் — திருடன்; இளையவன் ராஜு இரகசியப் போலீஸில் வேலை பார்க்கும் ஸி.ஐ.டி. சிறு வயதிலேயே மோகன் வீட்டை விட்டு வெளியேறி விட்டதால், ராஜு மோகனைப் பார்த்ததேயில்லை. ராஜு பாண்டித்துரை என்னும் பிரபல பாங்கரின் மகள் விஜயாவைக் காதலிக்கிறான். பாண்டித்துரை பாங்கர் மட்டுமல்ல, பெரிய கொள்ளைக்காரனுங்கூட. அவனுடைய கூட்டாளியான மோகன் கொள்ளைக்காரனுக ஆனதோடு கொலைகாரனுகவும் ஆகிவிட்டான். தன் மகள் விஜயாவிடம் உயிரையே வைத்திருக்கும் பாண்டித்துரை அவளது காதலன் ரகசியப் போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவன் என்பதையறிந்ததும் ராஜுவை மறந்துவிடும்படி விஜயாவை வற்புறுத்துகிறுன். தன் தந்தையைக் கொன்றவன் பாண்டித்துரைதான் என்பதைத் தாயின் மூலம் அறிந்த ராஜு துடிக்கிறுன். காதலர்கள் பிரிக்கப்படுகின்றனர்.

கதை மிகவும் விறுவிறுப்பாகச் செல்லுகிறது. அடுக்கடுக்கான நிகழ்ச்சிகள் சுவாரஸ்யமாயிருக்கின்றன. தேவர் பிலிம்ஸ் தயாரிப்பென்றல், காளைப் போர், காட்டு மிருகங்களின் சண்டை இப்படி ஏதாவது இருக்குமே தவிர உருப்படியான கதை இருக்காது. ஏதோ தவறிப் போய் இந்தப் படத்தில் கதை அம்சத்தைச் சிறப்பாகச் செய்து விட்டார்கள்! அதுவரையில் பாராட்ட வேண்டியதுதான். இந்தப் படத்தில் பாராட்ட வேண்டிய இன்னொரு அம்சமும் இருக்கிறது. பாண்டித்துரையாக வரும் எம். ஆர். ராதா வழக்கம் போல் அடித் தொண்டையிலிருந்து கத்தாமல், மிக அமைதியாக, மிக அழகாக, மிக அற்புதமாக நடித்திருக்கிறுர். மோகனை முதன் முதலில் சந்தித்து நட்புறவு கொண்ட போதும், சதிச் செயல்களைத் தீட்டிய போதும், மகள் விஜயாவிடம் அன்பு காட்டிய போதும், அவள் காதலன் ஒரு ஸி. ஐ. டி. என்று அறிந்து அவளைக் கடிந்து கொண்ட போதும் அவர் நடிப்பு நன்று யிருக்கிறது.

காந்தன்

ஸி. ஐ. டி. ராஜுவாக வரும் எம். ஜி. ராமச்சந்திரன் அந்தப் பாத்திரத்துக்கு மிகப் பொருத்தமா யிருக்கிறுர். போலீஸ் உடையே நன்றுய்ப் பொருந்தி யிருக்கிறது. குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பதில் அவர் காட்டும் பரபரப்பும், சுறுசுறுப்பும் நன்றுயிருக்கின்றன. கடமைக்கு மத்தியில் அவர் காதலைக் கை விட்டு விடவில்லை; காதலி விஜயாவையும் கை விட்டு விடவில்லை. நல்ல நடிப்பையும் கை விட்டு விடவில்லை. மோகன் யாரென்பது தெரியாமல் அவனை அடித்து நொறுக்கி விட்டுப் பிறகு அவன் தன் அண்ணனென்று அறிந்ததும் ராஜு கதறியது, தன் தந்தையைக் கொன்றவனின் மகள் என்ற காரணத்தால் விஜயாவை மறந்து விட நேர்ந்த போது வேதனையில் தவித்தது, பிறகு விஜயாவைத் தன் வீட்டிலேயே சந்தித்து மகிழ்ந்தது ஆகிய சந்தர்ப்பங்களில் எம். ஜி. ஆர். நன்றுக நடித்திருக்கிறுர்.

பி. சரோஜா தேவிக்கு இந்தப் படத்தில் காதலிக்கவும், கண்ணீர் விட்டுக் கதறவும், தந்தையைப் பிரிந்து மணமாகு முன்பே காதலன் வீட்டில் தங்கவும், மழையில் நன்றுய் நனையவும் நல்ல வாய்ப்புக் கிட்டியிருக்கிறது. அதை அவர் நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறுர். இன்பம், துன்பம், அதிர்ச்சி, அயர்வு முதலிய உணர்ச்சிகளையெல்லாம் அநுபவித்து நடித்து நம்மையும் அநுபவிக்க வைக்கிறுர்.

தாயாக வந்து கண்ணீர் வடித்துக் கண்ணும்பா அநுபவப்பட்டவர். அவர் தான் ராஜுவின் தாய். நடிப்புக்குக் கேட்பானேன்!

எஸ். ஏ. அசோகன் மோகனுக வருகிறுர். அது சற்றுச் சிரமமான பாத்திரம். அவரும் சிரமப்பட்டுத்தான் நடித்திருக்கிறுர். ஆனுல் ஏனே பலன் சரியாகக் கிட்டவில்லை.

வி. ஆர். ராஜகோபால், பாண்டித்துரையின் வேலையாளாக வந்து நல்ல கட்டங்களில் குறுக்கிட்டு என்னத்தையாவது உளறி உபத்திரவம் செய்கிறுர். அவர் படத்துக்கு வேண்டாத பாத்திரம். என்ன செய்யலாம்!

இந்தப் படத்தின் பாடல்கள் ஏனே எடுபடவில்லை. ''ஒருத்தி மகனுய்ப் பிறந்தவனும்'' என்ற பாட்டு மட்டும் மனத்தில் தங்கியது.

ராஜுவின் காமிராவில் அசோகனும், பாண்டித் துரையும் அகப்பட்டுக் கொண்ட பிறகு படம் வேகமாகப் போயிருக்க வேண்டும். விஜயாவை மோகன் அடைத்து வைத்திருக்கும் வீட்டில் நடக்கும்சண்டையும், விஷக் காற்றுப் பரவும் காட்சியும் விஷமாக ஏறித் திக்குமுக்காடச் செய்கின்றன!





# கப்பலோட்டிய தமிழன்

தேசபக்தர் வ.உ. சிதம்பரம் பிள்ளை அவர்களைப் பற்றி அறியாதவர்களே இருக்க மாட்டார்கள். அதேபோல அவரைப் பற்றிய வரலாறு முழுவதும் தெரிந்தவர்களும் இருக்க மாட்டார்கள். பத்மினி பிக்சர்ஸாரின் ''கப்பலோட்டிய தமிழன்'' தமிழகத்தின் அரசியல் வரலாற்றுப் படம். யாவரும் அறிந்த ஒரு வீரப் பெருமகனின் வாழ்க்கைச் சரித்திரத்தை மிகவும் பாராட்டத் தக்க விதத்தில் தயாரித்திருக்கிறார்கள். பிள்ளையவர்களின் வாழ்வு தியாகம், வீரம், தீரம், சோகம் முதலிய பல ரஸங்கள் ததும்பி நிரம்பி நிற்பது. 'இம்மென்றால் சிறை வாசம், ஏனென்றால் வன வாசம்' என்று கூறும்படி அக்காலத்து ஆட்சி கொடுமை நிறைந்ததாயிருந்தது. மக்கள் தேச பக்தி கொண்டிருப்பதை அன்னிய அரசாங்கம் பெரிய தேசத் துரோகமாகக் 'கருதி வந்தது; விடுதலை உணர்ச்சி கொண்டவர்களை விபரீதக் கருத்துக்கொண்டவர்களாகத் தீர்மானித்திருந்தது. நம் நாடு அத்தகைய அவல நிலையில் இருந்த போது எத்தனையோ தேச பக்தர்கள் தோன்றி விடுதலை முழக்கம் செய்தனர். அவர்களுள் தூத்துக்குடி வ. உ. சிதம்பரம் பிள்ளை முதன்மையானவர்; அன்னிய ஆட்சியை எதிர்த்து வெறும் முழக்கம் மட்டும் செய்யாமல், அதற்கு எதிராகக் கப்பலோட்டிக் கலக்கிய வீரத் தமிழர் அவர்.

அந்த மாவீரரின் பாகத்தைச் சிவாஜி கணேசன் ஏற்று மிகச் சிறப்பாகச் செய்திருக்கிறார். சிதம்பரம் பிள்ளையையே நேரில் பார்ப்பது போல் தத்ரூபமாயிருக்கிறது 'மேக்கப்'. வழக்கறிஞராக வந்து தமது தந்தையையே வாதில் வென்று. வெற்றி வாகை சூடிய சிதம்பரனார் பிறகு தேச பக்தி மிகுந்து கப்பலோட்டும் அளவுக்குத் தீவிரமாக மாறி அதில் வெற்றிபெற்ற வரலாறு வீரம் ததும்பப் படமாக்கப்பட்டிருக்கிறது. விடுதலைப் போராட்டத்தின் பரிசாக அந்த வீரத் தமிழ் மகன் சிறைபுகுந்தது. செக்கிழுத்தது, இறுதியில் உருக்குலைந்து, உடல் தளர்ந்து விடுதலையடைந்து வீடு திரும்பியது, பிறகு உயிர் துறந்தது ஆகிய கட்டங்களில் சிவாஜி கணேசன் நடிப்பின் சிகரமாக விளங்குகிறார். உயிர் பிரியும் தருணத்தில் அசையாது நின்ற அவரது நடிப்பு பார்ப்பவர்களின் உள்ளங்களை அசைத்து விட்டது. அற்புதமான நடிப்பு.

வ. உ. சி. வாழ்ந்திருந்த காலத்தில் அவருடன் தோளொடு தோள் பிணைந்து நின்ற மகாகவி பாரதியார், தேச பக்த வீரர் சுப்பிரமணிய சிவா ஆகியவர்களும் இந்தப் படத்தில் வருகின்றனர்.

எஸ். வி. சுப்பையாவை மகாகவி பாரதியாரின் தோற்றத்தில் காணும் போது உடம்பு புல்லரிக்கிறது. அற்புதமான மேக்கப்! கவிஞர் பெருமானின் குடும்ப வாழ்வு, வீராவேச உணர்ச்சி, மிடுக்கும் ஹாஸ்யமும் கலந்த பேச்சு யாவும் தத்ரூபமாயிருக்கின்றன. சமையலுக்கு இரவலாகப் பெற்று வந்த அரிசியை மகாகவி குருவிகளுக்கு உணவாக வாரியிறைத்த ஒரு காட்சி போதும், சுவைத்து அநுபவிக்க. ''விட்டு விடுதலையாகி நிற்பாய் இந்தச் சிட்டுக் குருவியைப்போலே'' என்ற பாரதியின் பாட்டும் அச்சமயம் மிக நன்றாய்ப் பதிவாகியிருக்கிறது. தம் வீட்டுச் சொந்தக்காரரான ராயரோடு பாரதியார் பேசிய ஹாஸ்யப் பேச்சுக்களும் 'சபாஷ்' போட வைக்கின்றன. பாரதியார் தம்மைப் பார்க்க வந்த நண்பரிடம், ராயரின் உடம்பிலுள்ள துவாதச நாமங்களைக் காட்டி, ''இந்தப் பன்னிரண்டு நாமங்களுடன் இன்னும் ஒன்





தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

**பெப்ஸ்** வில்லைகளை
உட்கொண்டால், உங்கள் இருமல்
உடனேயே அகலும்

பெப்ஸ் வில்லை ஒன்றைச் சுவைத்து ஆவி போன்ற அதன் சத்து குணமளிக்க வேலை செய்வதை உணருங்கள். வலியைக் குறைக்கவும், தொண்டைப் புண், பிராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமாகிய கிருமிகளை அகற்றவும் உதவியளிக்கிறது. பெப்ஸ் உடனடி நிவாரணம் அளித்து விரைவில் குணமடையச் செய்கிறது.



PPY-94-TAM

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்**

பிரசார ஏஜண்டுகள்
தாதா & கோ., 88, ஆதியப்ப நாயக் தெரு, சென்னை-1

றைச் சேர்த்துக் கொள்ளுங்கள். அவ்வளவு குழந்தைகள் ராயருக்கு!'' என்று ஹாஸ்ய ரஸம் ததும்பச் சொல்லுவதைக் கேட்கும் போது மிகவும் சுவையாயிருக்கிறது.

அடுத்தபடியாக நம் மனங்கவரும் தேச பக்தர் சுப்பிரமணியசிவா. அந்தப் பாத்திரத்தை ஏற்றிருக்கும் டி. கே. சண்முகம் அருமையாக நடித்திருக்கிறார். சிறையிலிருந்து வெளிப்பட்ட பிறகு அந்த வீர தேச பக்தர் தொழு நோயுற்று வருந்தியபோது சிதம்பரனார் அவரைச் சந்தித்துப் பேசிய காட்சி கல் மனத்தையும் கரைய வைக்கும்.

வெறும் தேச பக்தியையும், தியாகத்தையும் மாத்திரம் வைத்துக் கொண்டு ஒரு படத்தைத் தயாரித்து விட முடியுமா? சுவையூட்டும் காதல் காட்சி வேண்டாமா? அதற்குத்தான் மாடசாமி — கண்ணம்மாவின் காதல் கதை சுவையாகப் புனையப்பட்டிருக்கிறது. ஜெமினி கணேசனும் சாவித்திரியும் நடித்திருக்கின்றனர். இருவரில் சாவித்திரியின் நடிப்பு சிறப்பாக அமைந்திருக்கிறது: படத்துக்கே தனிக்கவர்ச்சியைத் தருகிறது. சிரிப்பும், நொடிப்பும், குதூகலமும், துயரமும், பயமும் அவர் முகபாவங்களில் மாறி மாறிப் பொங்குகின்றன.

ஜெமினி கணேசன், போலீஸ் இலாகாவுக்கு 'டிமிக்கி' கொடுக்கப் பல வேடங்களில் தோன்றுகிறார். அவற்றுள் குடுகுடுப்பாண்டி வேடம் மிகவும் பொருத்தமா யிருக்கிறது. தேச பக்தி நிறைந்த இந்த வீர வரலாற்றுக்கு இழுக்கு நேராவண்ணம் மாடசாமியின் கதையைச் சேர்த்திருப்பது மெச்சத்தக்கது.

கலெக்டர் ஆஷ் துரையைக் கொன்ற வீரன் வாஞ்சியின் வரலாறு சுருக்கமாயிருந்தாலும் உருக்கமாயிருக்கிறது.

''கப்பலோட்டிய தமிழ''னைப் பார்ப்பதற்கு முன்பு 'இது ஒரு டாகுமெண்டரிப் படம் மாதிரி ஆகி விடுமோ' எனச் சிறிது அஞ்சினேன். படத்தைப் பார்த்ததும் அந்த அச்சம் பறந்து விட்டது. நவ ரஸங்களும் ததும்பும் ஒரு நல்ல படமாகவே அமைந்து விட்டது தமிழ் மக்களின் பாக்கியம் என்றுதான் கூற வேண்டும்.

திரைக்கதையைத் தயாரித்தவர் சித்ரா கிருஷ்ணஸ்வாமி. நன்றாகவே செய்திருக்கிறார்.

தமிழ்ப்பட உலகில் அநுபவம் மிக்க எஸ். டி. சுந்தரம் மிகவும் அழகாக வசனம் எழுதியிருக்கிறார். வ. உ. சி., பாரதியார், சுப்பிரமணியசிவா ஆகியவர்களுக்கு ஏற்ற முறையில் எளிமையும் எழிலும் பொங்க வசனம் அமைந்திருப்பது பாராட்டுக்குரியது.

படம் முழுவதும் பாரதியார் கவிதைகளை எடுத்தாண்டிருப்பது பாராட்டுக்குரியது தான். ஆனால் அவைகளின் மெட்டு அமைப்பு கவரக்கூடியதாயில்லை என்பதையும் சொல்லித்தானாக வேண்டும். ''ஓடி விளையாடு, பாப்பா'' ஒன்றுதான் நன்றாயிருக்கிறது. மற்றவை எடுபடவில்லையே!

''வீரபாண்டியக் கட்டபொம்மனை''க் கண்டு வியந்த தமிழ் மக்கள், ''கப்பலோட்டிய தமி''ழனைக் கண்டு களிக்கலாம். அற்புதமாகத் தயாரிக்கப்பட்டிருக்கும் அருமையான படம் இது.




ராதாவும் சுந்தரும் கல்லூரிக் காதலர்கள். ராதாவின் வீட்டு வேலைக்காரி கமலா ஒரு கைம்பெண். ராதா-சுந்தர் மணமானதும் ராதாவுடன் கமலாவும் செல்கிறாள். அங்கு சின்னஞ்சிறு வயதில் தனக்கு மாலையிட்டவன் சுந்தர்தான் என்பதைக் கமலா அறிந்து கொள்கிறாள். ராதா பிரசவத்துக்குப் பிறந்த வீட்டுக்குப் போகிறாள். அப்பொழுது சுந்தரின் தொடர்பால் தாய்மை அடைகிறாள்.

சின்னஞ்சிறு வயதில் நடந்த திருமணத்தைப் புகைப்படம் பிடித்து வைத்தார்களோ, திரைக்கதை பிழைத்ததோ! அதுவும் சொல்லி வைத்தாற் போல் புகைப்படத்தில் இரண்டு பிரதிகள் எடுத்துக் கமலாவிடம் ஒன்றும், சுந்தர் வீட்டில் ஒன்றுமாக இருக்கச் செய்ததைப் பெரிய உத்தியாகக் கொள்ள வேண்டியதுதான்! அந்த உத்தி மட்டும் இல்லாவிட்டால் படத்தை முடிப்பது சிரமமாகப் போயிருக்கும்!

மனைவி பிறந்த வீட்டுக்குப் போயிருந்த சமயம், வேலைக்காரியுடன் சுந்தர் சல்லாபித்ததாகக் கதையில் வருவது ஓர் ஆபாசம். நல்லவேளையாக அந்தக் காட்சியைப் படத் தணிக்கையாளர் வெட்டி விட்டார்கள். ஆனாலும் சம்பவத்தின் கசப்பு படம் முழுவதும் பரவிவிட்டது!

படத்தின் முற்பகுதி முழுதும் ஒரே சிரிப்பாய்ச் சிரிக்கிறது; பிற்பகுதி முழுதும் அழுது வழிகிறது.

தங்கவேலு-ஏற்கனவே 'அன்புமகன்' என்ற படத்தில் சட்டப் புத்தகங்களினால் மனைவியிடம் அடிபட்டவருக்கு, மீண்டும் பாத்திரங்களினால் அடிபடுவதில் அலுப்புத் தோன்றியதோ என்னவோ, நமக்கு அலுத்துப் போகிறது. கட்டபொம்மனை வேண்டி அவர் வீரம் பெறுவது நன்றாக இருக்கிறது.

''பாக்கியலக்ஷ்மி''யின் ஆரம்பத்தில் வரும் மாணவ மாணவிகள் 'பிக்னிக்' கூட்டம் சைக்கிள் வண்டிகளில் போகும் காட்சியையும், மாணவ மாணவியரின் ஆட்டபாட்டங்களையும் 'அடுத்த வீட்டுப் பெண்'ணில் பார்த்து விட்டோமே! கல்லூரி மாணவ மாணவிகளின் குதிப்பும் கொம்மாளமும் சகிக்கக் கூடியதாக இல்லை. மக்களுக்கு மகிழ்ச்சியூட்ட வேண்டும் என்பதற்காகவே இப்படிக் கேலிக் கூத்தடிப்பது மிகவும் கொடுமையாகும்.

'பாக்கியலக்ஷ்மி'யில், நடிப்பின் முதல் ஸ்தானம் பெறும் பாக்கியம் சௌகார் ஜானகிக்குத்தான் கிட்டியிருக்கிறது. பூவிழந்து, பொட்டிழந்து வாடும் கமலாவாக வந்து அவர் கண்ணீரில் கரைகிற காட்சி படம் பார்ப்பவர்களையும் கரைய வைக்கிறது.

சுந்தரின் பாகம், திரைக் கதையிலேயே சரியாக உருவாக வில்லை. ஒன்று நல்லவனாக இருக்க வேண்டும். இல்லை கெட்டவனாகவே இருந்து தொலைய வேண்டும். அல்லது கெட்டுப் போய்த் திருந்தி வரவேண்டும். இதில் எதுவுமே இல்லை. இரண்டுங்கெட்டான் நிலை! அந்தப் பாகத்தை ஏற்றிருக்கும் ஜெமினி கணேசன் காதல் காட்சிகளில் சோபித்தது போல், பிற்பகுதியில் சோகக் காட்சிகளில் சோபிக்கவில்லை. குற்றம் புரிந்துவிட்ட மனப்பான்மையில் சுந்தர் இடிந்துபோக வேண்டாமோ? இறுதிக் கட்டத்தில் கமலாவின் உயிர் பிரியும் தருணத்தில் கூடச் சுந்தர் துடிக்கவில்லையே! ஜெமினி கணேசன் நல்ல வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறி விட்டார் என்றுதான் கூற வேண்டும்.

அவர் கல்லூரி மாணவனாக வரும் போது பாராட்டத் தோன்றவில்லை. அதற்கு வேண்

யை இளம் உடற்கட்டு குறைந்து விட்டது. இனி அவர் தம் பாத்திரத்தை மாற்றிக் கொள்ள வேண்டும்.

ஈ. வி. சரோஜா ராதாவாக வருகிறார்; துடுக்காகப் பேசுகிறார்; மிடுக்காக நடை போடுகிறார்; துள்ளித் திரிந்து நடனமாடுகிறார். இவ்வளவு போதாதா? நடிப்பைப் பற்றி அநாவசியமாகக் கவலைப்படுவானேன்?

கமலா கண்ணாடியில் தெரியும் தோற்றம் நன்றாக இருக்கிறது. காதலர்கள் நிலவொளியில் உல்லாசமாக ஆடிப் பாடும் காட்சியும் நன்றாகப் படமாக்கப்பட்டிருக்கிறது. ஒளிப்பதிவுக் கலைஞர் திரு ஜி. பாலகிருஷ்ணனைப் பாராட்ட வேண்டும்.

''வரலக்ஷ்மி வருவாயம்மா'', ''மாலைப் பொழுதின் மயக்கத்திலே'', ''காண வந்த காட்சி என்ன'' என்ற பாடல்கள் மிகவும் நன்றாயிருக்கின்றன.

''பாக்கியலக்ஷ்மி''யை ஒரு முழு வெற்றிப் படமாகக் கூறுவதற்கில்லை.

# வட்டமேஜை 

## கோபத்துக்குக் காரணம்: மேலும் சில

சென்ற 29-10-61 கல்கி இதழில் வெளியாகியுள்ள ராஜாஜி அவர்களின் 'என் கோபத்துக்குக் காரணம்' என்ற தலையங்கத்தை நேரு அவர்களும், அவர் சகாக்களும் பதற்றமில்லாமல் நடுநிலைமையாளர்களாக இருந்து படித்துச் சிந்தித்துப் பார்த்தால் எவ்வளவோ நன்றாக இருக்கும். எல்லா மொழிகளிலும் அச்சிட்டு மக்களுக்கு வழங்க வேண்டிய கட்டுரை அது. ராஜாஜி மட்டுமின்றி நாடே கொதித்தெழும் காரியங்களைத்தான் காங்கிரஸ் சர்க்கார் செய்து வருகிறது. இன்றைய நிலைமைச் சுருக்கமாகப் பார்க்கலாம்:

காங்கிரஸ் சர்க்காரானது காந்தீயத் தத்துவங்களைப் பின்பற்றத் தவறி விட்டது. கோடிக்கணக்காக வெளி நாடுகளிலிருந்து கடன் வாங்கி அது திட்டங்கள் தீட்டியும் அவைகளினால் ஏற்பட்ட பலன்களை மக்கள் அநுபவிக்க முடியவில்லை. அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களின் விலைவாசிகள் மேலும் மேலும் ஏறிக் கொண்டேயிருக்கின்றன. வரிச் சுமையும் மேலும் மேலும் உயர்ந்து கொண்டிருக்கிறது. உணவுப் பிரச்னைக்குத் தீர்வு காண முடியாமல் இன்றைய ஆட்சியாளர்கள் திணறுகிறார்கள். வேலையில்லாத் திண்டாட்டம் பெருகுகிறது. கட்சியில் உள்ள பெரிய புள்ளியைப் பிடித்தால்தான் காரியம் ஆகும் என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. மக்களுக்காகத் தொழில் செய்யும் சர்க்கார் சிப்பந்திகள் ஆளும் கட்சியில் உள்ள பெரிய புள்ளிகளின் விருப்பம் போல் நடக்க வேண்டியிருக்கிறது.

மக்கள் தங்கள் புனிதமான வாக்கை யாருக்குக் கொடுப்பது என்று தீர்மானம் செய்ய இவை போதாதா?

குடந்தை
26-10-61 — வி. நாகராஜன்

## ஆஸ்திகத்தின் அறைகூவல்

சமீபத்தில் ராஜாஜி அவர்கள் கல்கியில் எழுதியுள்ள 'உண்மை சுதந்திரத்தை உருவாக்குவோம்' என்ற கட்டுரையும், 'என் கோபத்துக்குக் காரணம்' என்ற கட்டுரையும் படிப்பவர்களின் மனத்தைப் பரிசுத்தப்படுத்துகின்றன. தெய்வ நம்பிக்கை, அஹிம்சை, நேர்மை இவற்றைக் கடைப்பிடிக்கும்படி தூண்டுகின்றன.

நாம் எவ்வளவுதான் அயல் நாடுகளில் கடன் வாங்கித் திட்டங்கள் போட்டு மக்களைப் பொருளாதாரத் துறையில் முன்னேறச் செய்தாலும் மக்களுடைய மனம் பரிசுத்தமாக இல்லை என்றால் என்ன பயன்? பொருளாதாரத்தில் மிகவும் முன்னேற்றம் அடைந்துள்ள அமெரிக்காவும், ருஷ்யாவும் இன்று அணுகுண்டுகளை வெடித்துப் பரிசோதனை செய்து மக்களுடைய வாழ்க்கையையே கெடுத்து வருகின்றன. காரணம், தெய்வ நம்பிக்கை மறைந்து விஞ்ஞான அறிவு மட்டும் வளருவதே. உள்ளத் தூய்மையையும், அதற்கு மூலமாகிய தெய்வ நம்பிக்கையையும் அரசியலில் கலக்க வேண்டும் என்பதை ராஜாஜியின் எழுத்துக்கள் எடுத்துரைக்கின்றன.

செலமாநத்தம்
27-10-61 — எஸ். பி. தசரதன்

## அக்களூர் அவதிகள்

எண்ணற்ற கிராமங்களுக்குப் புத்துருவம் தருவதாகக் கூறப்படும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் நிறைவேறிய பின்னும் எங்கள் அக்களூர் கிராமம் மட்டும் பழைய நிலைக்கே ஒரு புராதனச் சின்னமாக விளங்கி வருகிறது. இத்தனைக்கும் எங்கள் கிராமம் ஏதோ வனாந்தரத்தில் இல்லை. மாயூரத்தைச் சார்ந்த கூறை நாட்டின் தென்புறத்தில் சுமார் நான்கு பர்லாங் தூரத்திலுள்ளது தான் அது. இந்தக் கிராம மக்களின் அன்றாடத் தேவைகள் அனைத்தும் மாயூரம், கூறை நாட்டுக்கு வந்தால்தான் நிறைவேறும். பள்ளிச் சிறுவர், பிரசவப் பெண்கள் இந்தக் கிராமத்திலிருந்து நகரத்தையடைய இடையே உள்ள வாய்க்காலுக்குப் பாலம் இல்லாததால் மிகவும் அவதிப்படுகின்றனர். இக்கிராமத்திலுள்ள நாற்பது வீட்டில் வசிக்கும் நானூறு பேர்களுக்கு ஒரே குழாய்தான் இருக்கிறது. மருத்துவ வசதி, பள்ளி வசதி இவையும் உடனடித் தேவையாகும். இந்தக் கிராமத்திலிருந்து மூன்று பர்லாங் தூரத்தில் மின்சார பவர் ஹவுஸ் இருப்பதால் மின்சார வசதியும் அளிக்கவேண்டியது அவசியம்.

அக்களூர்
4-11-61 — கே. நடராஜ்

# வாழும் வர்ணனைகள்

11. சுந்தர ராமசாமி

### பாதை

முன்னால் சிமெண்டு ரஸ்தா. இந்த ரஸ்தா தென்திசையில் பன்னிரண்டு மைல் சென்றதும் குமரித் துறையில் நீராட இறங்கி விடுகிறது. வட திசையில் திருவனந்தபுரம் என்ன, பம்பாய் என்ன, இமயம் வரை கூட விரிகிறது. அதற்கு அப்பாலும் விரிகிறது என்றும் சொல்லலாம். மனிதனின் காலடிச் சுவடு பட்ட இடமெல்லாம் பாதை தானே? கிழக்கிலிருந்து புளிய மரத்தின் பின்புறம் வந்ததும் மரத்தைச் சுற்றி இரு கிளைகளாகப் பிரிந்து சிமெண்டு ரோட்டில் கலக்கும் பாதை எங்கிருந்து புறப்படுகிறதோ? யாருக்குத் தெரியும்? சொல்லப்போனால் எல்லாப் பாதைகளும் கடலோரம் கிளைத்து மற்றொரு கடற்கரையில் கரைகிறது. நடுவில் ஆரம்பம் எது? முடிவு எது?

### பாட்டியின் பயணம்

பாட்டி சாமான்களை ஒவ்வொன்றாக ஒட்டுத் திண்ணைக்கு நகர்த்தினாள். செண்பகராமன் புதூர்க் கீரைத் தண்டு ஒரு கூடை நிறைய. அதை ஈரத் துணி போட்டு மூடிக் கட்டியிருந்தாள். ஒரு பெரிய டப்பா. அதற்கு மூடியும் பூட்டும் இருந்தன. துணி மூட்டை புடைவைகள் இரண்டு இணை சேர்ந்த பாம்புகள்மாதிரி முறுக்கிக் கொண்டு ஒன்றையொன்று பார்த்தபடி நின்றன. மாஜி வெள்ளை நிறம். ஓர் அரிவாள்மணை. புத்தம் புதிசு. மணைக் காம்பு மஞ்சள் மசேலென்றிருந்தது. அரிவாளைப் பழந்துணியால் சுற்றியிருப்பது சக பிரயாணிகளுக்குத் திருப்தி தரும் விஷயம். நாலுசாமான்களும் ஒட்டுத் திண்ணையில் ஏறிக் கொண்டால் பாட்டி நிற்கத்தான் வேண்டும். டப்பாவையும், கீரைக் கூடையையும் காலடியில் சேர்த்து வைத்துக் கொண்டாள். அரிவாள் மணையையும் துணி மூட்டையையும் இரு பக்கமும் வைத்து இரு கைகளாலும் செல்லமாக அணைத்தபடி திண்ணையில் அமர்ந்தாள். ஜங்ஷனில் நிற்பவர்களின் முதல் பார்வையில் தட்டுப்படும்படி வீற்றிருந்தாள் பாட்டி.



### வெட்டுண்ட மரம்

மிகவும் வயதான மரம் கிழடு தட்டிப் போய்விட்டது. எட்டி நின்று சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தால் தலை பஞ்சுப் பொதியாகி, கண்களும் பஞ்சடைந்து, கூனிக் குறுகிப் போன கிழவி ஒருத்தி நிஷ்காம்ய நிலையில் ஆழ்ந்து தன்னுள்ளே புதையுண்டிருக்கும் ஆனந்தத்தைத் தேடி எடுத்து அநுபவித்துக் கொண்டிருப்பது போல் தானிருக்கும். எத்தனையோ வருடங்களுக்கு முன்னால் முளை விட்டு, நேற்று வரை சுயமரியாதையுடன் வாழ்ந்துவந்த மரம் இன்னும் சில காலம் விட்டுப் பார்த்திருந்தால் மூப்பு மிஞ்சி ஜீவனும் தனியே பிரிந்துதான் போயிருக்கும். மனிதனுடைய அவசரம், மார் தட்டி, மண்ணடையும் விருப்பு விட்டு வைக்கவில்லை. மரத்தை அழித்து விட்டார்கள். நின்ற மேனிக்குப் பட்டுப்போய்விட்டது மரம். புளிய மரம் வாழ்ந்த கதையும், அழிந்த கதையும் இன்றளவும் எங்கள் மனத்தில் நிற்கிறது. என்றும் நீங்காது நிற்கவும் செய்யும். மறக்க முடியாத விஷயங்களும் சில உண்டுதானே? அதில் ஒன்றுதான் இந்தப் புளிய மரத்தின் கதையும்.

### இதுதான் ஹோட்டல்

அட, என்ன கூட்டம்! சர்வர்கள் மிஷின்கள், பம்பரக் காய்கள் மாதிரி சுழலுகின்றனர். அன்றைய வேலையால் சக்கையாக்கி உமிழ்ந்து விட்ட மாஜி மனித ஆத்மாக்கள், வம்பளந்தவாறே சுயப்பிரக்ஞையின்றித் தட்டைக் காலி செய்கிறார்கள். பட்சணங்கள்தான் எத்தனை இனுசுகள்!

வெளியே — ஓட்டல் எச்சில் தொட்டி. அதைச் சுற்றி இவர்கள் — இவை என்ன? நமது சக வர்க்கமா?

பிராணி வர்க்கத்தைச் சேர்ந்ததாக இருக்குமோ? சே! அவை கௌரவமாக வாழ்பவை!

நீங்கள் இவற்றைப் பார்த்திருக்கிறீர்களா? உங்களுக்கு எந்த ஊர்? நம்ம பக்கம்தானே? சரிதான். அப்பொழுது நீங்கள் இவர்களைப் பார்க்காத நாளே இருந்திருக்க முடியாதே! .... அவர்கள் பார்த்துக் கொண்டே நின்று விட்டுப் போகட்டும். நீங்கள் சாப்பிடுங்களேன். சும்மா சாப்பிடுங்கள். ஓட்டலில் எவ்வளவோ பேர்கள் உங்களைப் பார்த்துக் கொண்டிருக்க வில்லையா? இதையெல்லாம் பார்த்தால் முடியுமா? அதுவும் நம் புண்ணிய தேசத்தில். சாப்பிடுங்கள். என்ன முடியவில்லையா? ஒரேயடியாக மறந்தே விடுங்களேன். சாத்தியமில்லையா? ருசி குறைந்து கொண்டே போகிறதா? ஆமாம்! வாஸ்தவந்தான். அந்தக் கண்கள், அந்த முகம்—இவற்றை மறக்க முடியாது. அது அசட்டை செய்ய வேண்டிய—செய்யக் கூடிய பொருளல்ல.

## தண்ணீர்ப் பஞ்சம்

கிணறுகளில் நெல் போட்டுப் பத்திரமாக வைக்கலாம். ஆனால் அவர்கள் வீடுகளில் மணி நெல் கூட இல்லை. கிணறு கிணறாக இருந்திருந்தால் பானைகள் காலியாகவும் இருந்திராது. தவிப்பு என்றாலே சாதக பட்சியின் நிலைதான். தவிப்பு, தவிப்பு, ஓயாத தவிப்பு. தண்ணீர் குடித்தால்தான் தாகம் தணியும். குடிக்கும் நீர் கழுத்துத் துவாரம் வழியாக வெளியே வழிந்து விடும். தணியாத தாகத்தைத் தணித்துக் கொள்ள மழைதான் ஒரே கதி. வானை நோக்கி வாயைத் திறந்து விடலாம். தாகித்து வறண்டு போய் மழையை எதிர்நோக்கி ஏங்கிக் கிடக்கும் சாதக பட்சியின் நிலைமை சோக மயமானது.

கிராமத்து மக்கள் சாதக பட்சிகளாக மாறி விட்டனர். கிராமத்து மக்களுக்கு நானாவிதமான சிந்தனையும், பல விதமான பேச்சும் என்றுமே கிடையாது. இருந்தாலும் ஓரளவு சிந்தனையும், குறுகிய வரம்புக்குள் பேச்சும் உண்டு. இன்று சிந்தனையும் பேச்சும் ஒன்றாகத் திரண்டு ஒரே கேள்வியாகப் பிறந்துவிட்டது. பல்வேறு ரூபங் கொண்ட ஆண் — பெண் முகங்களில் அந்த ஒரே ஒரு கேள்விதான்.

''மழை வருமா?''

## டாக்டர் செங்கமலம்

உலகம் எங்கும் வியாதிக் கிருமிகள் மயம். இலேசாகச் சொல்லி விடலாம். நாலைந்து ஆண்டுகள் இதைப் பற்றி ஆராய்ச்சி செய்து பட்டம் பெற்ற செங்கமலத்துக்கு அல்லவா அதன் பயங்கர விளையாட்டுக்கள் தெரியும். வியாதிக் கிருமிகளைப் பூதக்கண்ணாடி வழியாகச் சோதனை செய்து எண்ணிக் கணக்கிடுவது அவள் வேலை.

ரோகாணுக்களின் சம்ஹாரத் திருவிளையாடல்களைப் பற்றி எத்தனை தடவை கௌரிக் குட்டியிடம் சொன்னாலும் அலுக்காது செங்கமலத்திற்கு. அரை மணி நேரம் மூச்சே விடாமல் சொற்பொழிவு ஆற்றி விட்டுக் கேள்விகள் தொடுப்பாள்.

''இன்று துடைப்பக் கட்டையை லோஷன் விட்டுக் கழுவினாயோ?''

''ம்!''

''கொல்லையில் மாமரத்தடியில் பத்து அவுன்ஸ் தண்ணீர் தேங்கி நிற்கிறது. இந்த உலகம் அழிய அதுவே அதிகம்..''

''கவனிக்கிறேன்.''

''இன்று காலையில் குளித்தாயோ?''

''ஆமாம்''

''மருந்து சோப்புத்தானே?''

''ஆமாம்.''

வாசலில் கார் வந்து நின்றது. செங்கமலம் கிளம்பி விட்டாள், பூதக் கண்ணாடி வழியே அணுவை எண்ணிக் கணக்கிட.


ஆல்மன்டைன் பல விருத்தி லேகியம்
கூலெக்ஸ் உஷ்ண சமனக்கான தைலம்
டோனஎடல் பிரசவத்திற்குப் பிறகு உதவும் லேகியம்
காஸ்மஸ் கஸ்தூரி மாத்திரை பாட்டில் 0.40
சாதாரணம் நஞ்சன்கூடு-பல்பொடி பாக்கெட்டில்
I.D.L-61 உயர்தரம் [டப்பியில்] பல் உபாதைகளை குணப்படுத்த
கர்ஜன் கோரோஜனை மாத்திரை பாட்டில் 0.50
ஜீஞ்சிப் அஜீர்ணம், பித்த சமனி
நீலா தைலம் இளநரை தடுக்க, கூந்தல் செழிக்க
டிகாகோ ஆரோக்ய சர்பத்
பாலக்ஸ் பேதியாக மாத்திரை பாட்டில் 0.40
சோல் ஏஜண்டு: யுனைடெட் கன்ஸர்ன், 54, பந்தர் தெரு, சென்னை-1
(மதுரையில் சௌந்திரபாண்டியன் செட்டியார், கீழச் சித்திரை வீதி)

நம் நாட்டு பெண்மணிகள் தங்களது அழகான நீண்ட கூந்தலைத் தொன்றுதொட்ட பழக்கப்படி வீட்டிலேயே தயாரிக்கப்பட்ட ஷாம்புவினால் சுத்தம் செய்கின்றனர். அது கூந்தலை மிகவும் நன்றாகவே சுத்தம் செய்யலாம். ஆனால் அது மிகவும் சிரமமான காரியம்.

# ஷாம்பு எதற்கு?

வீட்டில் தயாரிக்கும் ஷாம்புவைவிட நல்ல தேங்காய் எண்ணெயினால் ஆலையில் தயார் செய்யப்பட்டு பாட்டிலில் கிடைக்கும் ஷாம்பு கூந்தலைச் சுத்தம் செய்ய வெகு சுலபமானது. டாடாவின் தயாரிப்பான இத்தகைய ஷாம்பு எளிதில் உபயோகிக்கக்கூடியது. நறுமணம் கொண்டது. அதன் மிருதுவான நுரை கூந்தலை நன்றாகச் சுத்தம் செய்து மயிர்க்கால்களிலிருக்கும் தூசி, அழுக்கு முதலியவைகளை அகற்றி கூந்தலை மிருதுவாகவும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறது.

பளபளப்பான கூந்தலுக்கு—

# டாடாவின் ஷாம்பு



# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) ( ரிஜிஸ்டர்டு )

கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கருநிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்கு குளிர்ச்சி அளித்து, ஞாபகசக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது

பெரிய பாட்டில் விலை ரூ. 4.50 : சிறிய பாட்டில் விலை ரூ. 2.25

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்யமாக வாழ்வீர்கள்.

விலை ரூ. 3/- ( தபால் செலவு உள்பட )

## SHRI RAMTIRTH YOGASHRAM

**DADAR, BOMBAY-14**

மதராஸ் டிப்போ : 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ் - 3

---

# ஆந்திரா பாங்க்

## லிமிடெட்

ஸ்தாபிதம் : 1923

தலைமைக் காரியாலயம் : மசூலிப்பட்டிணம்

74 காரியாலயங்கள்

நகரக் காரியாலயங்கள் :

சென்னை – பெங்களூர் – கோயமுத்தூர் – ஹைதராபாத் & பம்பாய்

சேவிங்ஸ் டிபாஸிட்டுகளுக்கு மாதாந்திர குறைந்த பட்ச மீதத்தின்மீது

**3%** வட்டி அளிக்கப்படும்.

**சேவிங்ஸ் டிபாஸிட்டில் குறைந்தது ரூ. 10 இருக்கவேண்டும்**

வாரத்திற்கு அதிக பட்சம் ரூ. 1000/-க்குமேல் போகாமல், எத்தனை தடவைகளில் வேண்டுமானாலும் பாங்கியிலிருந்து பணத்தைத் திருப்பப் பெற்றுக் கொள்ளலாம்.

# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

### 32

திருமூலர் தம்முடைய ஞானானந்த அனுபவத்தை உலக மாந்தருக்கு வெளியிட்டுச் சொல்லுகிறார். நந்திபெருமானாகிய இறைவனே குருவாக வந்து தம்மை ஆட்கொண்டு அருளிய அந்த இன்பத்தைப் பாடுகிறார்.

**அருளால் அமுதப்**
**பெருங்கடல் ஆட்டி**

குருவாகி வந்த பெருமான் தன் திருவருளாலே ஆனந்தக் கடலாகிய அமுதக் கடலிலே என்னைக் குளித்து மகிழச் செய்து.

**அருளால் அடிபுனைந்து**

[அடிபுனைந்து-திருவடியைச் சூட்டி.]

அருளோடுதானே தனது திருவடி இரண்டையும் எனது தலையிலே சூட்டி.

**அருளால் அடிபுனைந்து**
**ஆர்வமும் தந்திடடு**

[ஆர்வம்—பக்தி.]

அந்தத் திருப்பாதங்களிலே அன்பு உண்டாக்கி; அதாவது நான் பக்தி கொள்ளும்படி செய்து.

**அருளான ஆனந்தத்து**
**ஆரமுது ஊட்டி**

அவனுடைய அருளாகிய ஆனந்த அமுதத்தை நான் உண்ணும்படி எனக்கு ஊட்டி.

**அருளால்என் நந்தி**
**அகம்புகுந் தானே**

[என் அகம்—என் உள்ளத்தில்.]

அருளோடுதானே நந்தி பெருமான் என் உள்ளத்தில்புகுந்துகொண்டான்.

குருவாகிய இறைவன் உள்ளத்தில் புகுந்ததினால் ஏற்பட்ட அனுபவங்களை இவ்வாறு பாடுகிறார் முனிவர். சற்குருவை அடையும்போது உள்ளத்தில் பக்தி தோன்றுகிறது. இதைத் தடுக்காமல் ஆண்டவனுடைய அருள் என்றே வரவேற்று அதன் முழுப் பயனையும் அடைய வேண்டும் என்பது கருத்து. பக்தி வளர்ந்து முதிரும்போதுதான் ஆனந்த நிலை கிட்டுகிறது.

**அருளால் அமுதப்**
**பெருங்கடல் ஆட்டி**
**அருளால் அடிபுனைந்**
**தார்வமும் தந்திட்டு**
**அருளான ஆனந்தத்**
**தாரமு தூட்டி**
**அருளால்என் நந்தி**
**அகம்புகுந் தானே**

உடம்பு என்பது ஓர் ஆலயம். உள்ளம் என்பது ஆலயத்திற்குள் உள்ள கர்ப்பக் கிருகம். அந்தக் கர்ப்பக் கிருகத்துக்குள் இறைவன் வந்து வீற்றிருக்கிறான். இதைப் பரவசத்தோடு பாடுகிறார் முனிவர்.

**உள்ளம் பெருங்கோயில்**
**ஊனுடம்பு ஆலயம்**

[பெருங்கோயில்-ஆலயத்திலேயுள்ள கர்ப்பக் கிருகம்—கருவறை. ஆலயம்—கோயில்.]

கோயிலிலுள்ள கர்ப்பக் கிருகத்துக்குப் பெருங்கோயில் என்று சொல்வது வழக்கு. சிறிய அறையைப் பெருங் கோயில் என்று சொல்வது அதன் சிறப்பு பற்றி.




**வள்ளல் பிரானார்க்கு
வாய்கோ புரவாசல்**

[வள்ளல் பிரானார்க்கு — கருணையோடு கோயில் கொண்ட வள்ளலாகிய எம்பெருமானுக்கு.]

இந்த உடம்பாகிய ஆலயத்தில் உள்ளமே கருவறையாகிய கர்ப்பக் கிருகம். வாய்தான் கோபுரவாசல்.

**தெள்ளத் தெளிந்தார்க்குச்
சீவன் சிவலிங்கம்**

தெள்ளிய அறிவோடு மெய்ஞ் ஞானம் பெற்றவர்களுக்கு ஆன்மாவே பூஜைக்குரிய சிவலிங்கம்.

**கள்ளப் புலன்ஐந்தும்
காளா மணிவிளக்கே**

[கள்ளப் புலன்—ஞானமடையாதவர்களைக் கவிழ்க்கிற புலன்கள். காளா—இருளற்ற அதாவது அணையாத. மணிவிளக்கு—கோவிலில் ஏற்றி வைக்கும் விளக்குகள்.]

இந்த உடம்பாகிய கோவிலுக்கு ஏற்றிய ஐந்து விளக்குகள் பஞ்சேந்திரியங்களே! இந்த ஐந்தும் ஐந்து காளா மணி விளக்குகளே.

ஞானம் பெற்றவனுக்கு ஐந்து புலன்களும் அணையாத ஆலய விளக்குகளாகும். ஞானம் பெறாதவர்களுக்கு அவை கள்ளப் புலன்களாகும். ஞானம் பெற்றவர்களுக்கோ அவையே சிவலிங்கத்தைக் காட்டும் விளக்குகளாகும்.

**உள்ளம் பெருங்கோயில்
ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு
வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச்
சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும்
காளா மணிவிளக்கே**

சித்தர்களுடைய யோக நெறிப்படி இந்தச் சரீரத்தையே கோவிலாக்கி அதனுள் பூஜைக்குரிய ஸ்தானங்களும் சொல்லப்படுகின்றன. குருமுகமாகத் தெரிந்து கொண்டு செய்ய வேண்டிய அந்த ஆன்ம பூஜா ரகசியத்தைக் கவிதை யெழினும் உபமான அழகும் பொருந்தும்படி பாடுகிறார் தவ முனிவர்.

# பாரதி கலா மன்றம் (Regd.)

மோடி மினுர், பிராமன்வாடா ரோடு, மாதுங்கா, பம்பாய் -19

போன் : 60865

*

## நாடக விழா - 1961

( நூல் நிலைய, கட்டிட நிதிக்காக )

*

நடிகர் திலகம்

## சிவாஜி கணேசன்

அளிக்கும்

சிவாஜி நாடக மன்றத்தாரின் நாடகங்கள்

*

| | |
|---|---|
| 1-12-61 இரவு 8 மணிக்கு<br>2-12-61 இரவு 8 மணிக்கு | **நாக நந்தி** |
| 3-12-61 இரவு 7 மணிக்கு<br>4-12-61 இரவு 8 மணிக்கு | **பகல் நிலா** |
| 5-12-61 இரவு 8 மணிக்கு<br>6-12-61 இரவு 8 மணிக்கு | **கட்டபொம்மன்** |

இடம்

**காஸ்மாபாலிட்டன் விளையாட்டு மைதானம்**

கிங் சர்க்கிள் ரயில்வே ஸ்டேஷன் அருகில் - மாதுங்கா - பம்பாய் - 19

கட்டணம்: சீசன் : ரூ. 100/- 60/- 30/- 12/- 9/- 7/-
தினசரி : ரூ. 15/- 5/- 4/- 3/-


ஆதரவுடன் சீராட்டி
ஆஸ்டர்மில்க்
பாலூட்டி . . .
OSTERMILK
உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர்
மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப் பாலுக்கு
நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து
தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின்
பச்சிளம் ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப்
பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும்
திடவளர்ச்சிபெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த
சோகை தட்டாமல் காப்பதற்கான அயச்சத்தும்
அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.
...தாய்ப் பாலுக்கு நிகரானது.
இலவசம்: 'ஆஸ்டர் மில்க் புத்தகம்' (ஆங்கிலப் பிரதி)...
...விரிவுமிக்க, குழந்தைப் பராமரிப்பு நூல் ...தபால் செலவுக்காக 50 ந. பைசாத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: 'ஆஸ்டர்மில்க்' தபால் பெட்டி எண் 2430, சென்னை-2.

OS. 8-X51-M. TM



# புது வெள்ளம்

## அத்தியாயம் முப்பத்தொன்று

## பாலைவனச் சோலை

சித்திராவின் மென்றளிர்க்கரம் முருகையனின் தோளில் பதிந்தவுடன் அவனுடைய இதயம் சிலிர்த்தது. மின்னல் வீச்சுக்களைப் போல் பல்வேறு எண்ணங்கள் அவனிடம் பளிச்சிட்டு மறைந்தன. யாரைக் காண வேண்டுமென்று அவன் பல தினங்களாக ஏங்கிக் கொண்டிருந்தானோ அவள் அவனருகிலேயே வந்து விட்டாள். யாரைக் காணக் கூடாது என்று அவன் தன் ஆவலைத் தடுத்துக் கொண்டிருந்தானோ, அந்த ஆவலுக்குரியவள் அவனுடைய தடைகளைச் சுக்குநூறாகச் சிதற அடித்துக் கொண்டிருந்தாள்.

அலைமோதிக் கூத்தாடும் கடல்; ஒளியை அள்ளிச் சொரியும் அழகு நிலா; அருகிலே அன்பு நிறைந்த ஒரு பெண்மணி. — 'எதற்காக இந்த நேரத்தில் துன்ப நினைவுகளைச் சுமந்துகொண்டு அல்லற்பட வேண்டும்? எதற்காக என் துன்பச் சுமைகளை அவள் இதயத்தில் இறக்கி வைக்க வேண்டும்?'

அழுத கண்ணீரைக் கூடத் துடைத்துக் கொள்ளாமல் சிரித்தபடியே எழுந்து உட்கார்ந்தான். சித்திராவுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

''என்ன அத்தான் இது! நான் கனவு காண்கிறேனா? இல்லை, நீங்கள் தான் உண்மையில் என் எதிரில் இருக்கிறீர்களா?'' என்றாள் அவள்.

''கனவு பாதி; உண்மை பாதி!'' என்றான் முருகையன்.

''எது கனவு? எது உண்மை?''

''நீ கனவுலகத்தில் மிதந்து கொண்டிருக்கிறாய்; நான் உண்மையான உலகத்தில் இருக்கிறேன்.''

''நீங்கள் பேசுவதும் சரி, செய்வதும் சரி, ஒன்றுமே எனக்குப் புரியவில்லை'' என்றாள் சித்திரா. ''நாங்கள் பெங்களூருக்குச் சென்றிருந்த போது திடீரென்று நீங்கள் வீட்டுக்கு வந்தீர்களாம். இரண்டு நாட்கள் தங்கியிருந்து விட்டுச் சொல்லிக் கொள்ளாமல் கூடப் புறப்பட்டு விட்டீர்களாம். நீங்கள் ஊருக்குத் திரும்பிப் போகவில்லை என்று மட்டும் தாத்தா கூறினார்.''

''வேறு ஒன்றும் சொல்லவில்லையா?''

''வேறு என்ன சொல்வார் அவர்?'' என்று கோபமாய்க் கூறிவிட்டு, ''போங்கள் அத்தான்! உங்களுக்கு என் மேல் அன்பும் கிடையாது; பற்றுதலும் கிடையாது'' என்றாள் சித்திரா.

அகிலன்

முருகையன் சிரித்தான்; வருத்தம் தோய்ந்த சிரிப்பு.

''ஆமாம், பார்த்தால் பார்த்த இடத்தில் பொய்ச் சிரிப்பு சிரிப்பீர்கள். கண்ணிலிருந்து மறைந்தால் அடியோடு மறந்து விடுவீர்கள். ஏன், எனக்குக் கடிதம் எழுதக்கூடாதா? என்னை வந்து மறுபடியும் வீட்டில் பார்க்கக் கூடாதா?''

''உனக்கு நினைவிருந்தால் நீயாவது என் அப்பாவுக்கு எழுதிக் கேட்டிருக்கலாமே?''

''நான் ஒன்றும் முன்போல் சிறு பெண் இல்லை!'' என்று சிறிது செருக்கோடு கூறினள் சித்திரா. ''எனக்கு உங்களிடம் கோபம். நேரில் கண்டால் கூடப் பேசக்கூடாதென்று இருந்தேன். என்னவோ மனம் கேட்கவில்லை; சிநேகிதிகளை வீட்டுக்கு அனுப்பி விட்டு நான் மாத்திரம் வந்திருக்கிறேன்.''

முருகையன் சித்திராவை அந்த நிலவொளியில் கண்ணிமைக்காமல் கவனித்தான். முன்போல் அவள் சிறு பெண் இல்லைதான். புத்தம் புது மலர்க் கொத்துப் போல் பொங்கிப் பூரித்துப் பருவமென்னும் மென்கொடியில் அவள் குலுங்கிச் சிரித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய அழகில் ஒரு வசீகரம், இளமையில் மென்மை, தோற்றத்தில் கல்வியின் நாகரிகம், ஆடையணிகளில் செல்வத்தின் மெருகு இவ்வளவும் கூடிக் கலந்திருந்தன. ஆனல் எதுவுமே அவளிடம் செயற்கையழகைத் தோற்றுவிக்கவில்லை.

முருகையன் குற்றவாளி போல் வாய்மூடி மௌனம் சாதித்தான்.

''நீங்கள் செய்வதெல்லாம் என்ன அத்தான்! உள்ளூரிலிருந்துகொண்டே எங்களை அவமானப் படுத்துவதற்காகவா இந்த வேலையைச் செய்தீர்கள்? 'பெரியபாளையத்து அத்தான் தானா இவர்?' என்று சந்தேகப் படும்படியாக வல்லவோ நடந்து கொள்ளுகிறீர்கள்? — இப்போதே இந்தத் தகர டப்பாவைத் தூக்கிக் கடலில் எறிந்துவிட்டு நீங்கள் என்னோடு வீட்டுக்குப் புறப்பட வேண்டும்!''

''என்னை மன்னித்துக் கொள், சித்திரா. இப்போது என்னல் வர முடியாது. மெதுவாக ஒருநாள் வருகிறேன்.''

''காரணம்?''

முருகையன் உண்மையைச் சொல்ல விரும்பவில்லை. அந்த நிலையில் அவளோடு வீட்டுக்குப் புறப்பட வேண்டிய நெருக்கடியை அவன் எப்படியாவது தவிர்க்க முற்பட்டான். அப்பொழுது தான் ரிக்ஷாக்கார முனியாண்டி அவனிடம் பேசிய பேச்சுக்கள் அவனுக்குக் கை கொடுத்தன.

''நான் வேறொரு விஷயமாகப் போலீஸ் 'வாரண்டு'க்குத் தப்பித் தலைமறைவாக இருக்கிறேன், சித்திரா! முன்பு உங்கள் வீட்டுக்கு வந்து உன்னுடைய ஆதரவில் இருக்கலாமென்றுதான் நினைத்தேன். பிறகு என்னல் உங்களுக்குச் சிரமம் வேண்டாம் என்று யோசனையை மாற்றிக் கொண்டேன்.''

''எவ்வளவு காலம் நீங்கள் இப்படியே இருப்பீர்கள்?''

''சீக்கிரம் நாட்டுக்கு விடுதலை கிடைத்து விடும். பிறகு இந்த உத்தரவுகளை மாற்றி அமைத்து விடுவார்கள். அதுவரையில் நாம் ஒருவரை யொருவர் சந்திக்காமல் இருப்பது நல்லது.''

அந்த விநாடி வரையில் அவனைப் பற்றி அவள் உள்ளத்தின் ஒரு பகுதியில் ஒளிந்து கொண்டிருந்த தாழ்மையுணர்ச்சி திடீரென்று மறைந்தது. அவளுக்கு அவன் ஒரு போர்வீரனைப் போல் காட்சியளிக்க ஆரம்பித்தான். வியப்பும் பெருமிதமும் பொங்க அவனைப் பார்த்துப் புன்னகை பூத்தாள் சித்திரா.

''என்னுடைய சிறிய அண்ணாவுக்குப் பல இடங்களில் செல்வாக்கு இருக்கிறது. அவரிடம் சொல்லி இப்போதே உங்களைத் தப்புவிக்க வழி செய்கிறேன்.''

''வேண்டாம், சித்திரா! என்னைப் பார்த்ததைக் கூட நீ யாரிடமும் சொல்லாமல் இருப்பது நல்லது.''

''நான் யாரிடமும் சொல்லவில்லை. ஆனல் நீங்கள் எனக்கு ஒரே ஒரு வாக்குறுதி தர வேண்டும். கடற்கரையில் என்னைக் கண்டு விட்டால், என்னையும் போலீசாக நினைத்துக் கொண்டு வேறு எங்கேயாவது நீங்கள் ஓடிப் போய் விடக் கூடாது!''

கல கல வென்று பலமாகச் சிரித்தான் முருகையன்.

''எப்போதாவது இது போல் நாம் தனிமையில் சந்தித்துப் பேசுவோம்'' என்றாள் சித்திரா.

முருகையன் பதிலளிக்க முடியாமல் தயங்கினன். 'காரில் காற்று வாங்குவதற்காகக் கடற்கரைக்கு வரும் ஒரு செல்வச் சீமாட்டியிடம், கடலை விற்பவனுக்கு என்ன பேச்சு வேண்டியிருக்கிறது?'

''வேண்டாம், சித்திரா! நான் சொல்வதைத் தவருக நினைத்துக் கொள்ளாதே! சில மாதங்களுக்காவது நாம் சந்திக்காமல் இருப்போம்.''

சித்திராவின் முகம் சுருங்கியது.

''அத்தான்! எதற்காக என்னிடம் மூடி மறைத்துப் பேச வேண்டும்? பிடிக்கவில்லை யென்றால் நேரடியாகவே சொல்லி விடுங்களேன்!'' திடீரென்று


அபசுரம்
என்பதே
கிடையாது!
மாடல் 0452 6 வால்வ்
9 செயல்திறனுடன். ஆல்-வேவ் 3-பாண்ட்.
பியானோ - கீ ஸ்விட்ச் - ஏஸி
murphy radio
மர்பி ரேடியோ
இல்லத்திற்கு இன்பமளிக்கிறது

அவ்விடத்தை விட்டு எழுந்து போக முயன்றாள் அவள்.

''சித்திரா!''

''நான் போகிறேன்.''

''உட்கார், சித்திரா! பாலைவனத்தில் சோலையைக் காண்பது போல் நான் உன்னை இன்றைக்குக் கண்டிருக்கிறேன். வெகு நாளைக்குப் பிறகு நாம் சந்திக்கிறோம் என்பதையும் மறந்து விட்டு, எப்படி உன்னால் கோபித்துக் கொள்ள முடிகிறது?''



''இனி மேல் சந்திக்க வேண்டாம் என்று சொன்னால் என்ன அர்த்தம்? எனக்கொன்றும் கோபமில்லை; நீங்கள் தான் என்னை நம்ப மாட்டேன் என்கிறீர்கள்.'' மளமள வென்று சித்திராவின் கண்களில் நீர் வழிந்தது.

முருகையன் பணிவுடன் மீண்டும் அவளை அழைத்து அருகில் உட்காரச் செய்தான். காரிருளில் தோன்றி மறையும் மின்னலைப் போல் எங்கே கணப் பொழுதில்மறைந்து விடுவாளோ என்ற துடிப்பு அவனிடம் எழுந்தது.

''வீட்டுக்குத் தெரியாமல் நாம் அடிக்கடி சந்தித்துப் பேசுவது சரியாகுமா என்று யோசித்துப் பார். வேறு எதற்காகவும் நான் சொல்லவில்லை. என் நிலைமை சீராகும் வரையில் பொறுத்திருக்கலாம் என்றுதான் சொன்னேன்.''

''யாருக்கு யார் தெரியாமல் பழகுவதற்கு? நீங்கள் என்னுடைய சொந்த அத்தான்! நம் இருவரையும் ஒன்றாக வைத்துக் கொண்டு நம்முடைய வீட்டுக்காரர்கள் பரிகாசம் செய்ததை நீங்கள் அதற்குள் மறந்து விட்டீர்களா?'' என்று கேட்டாள் சித்திரா.

''மறக்கவில்லை, சித்திரா, மறக்கவே இல்லை!'' என்று குரல் தழுதழுக்கக் கூறினான் முருகையன். ''உண்மையில் என்னுடைய ஆசை என்ன தெரியுமா? தினந்தோறும் நீயும் நானும் இதே இடத்தில் சிறிது நேரம் மனம் விட்டுப் பேசிக் கொண்டிருந்தால் அதுவே போதும் போலிருக்கிறது. ஆனால் உன்னாலும் அது முடியாது; என்னாலும் முடியாது.''

''கவலைப்படாதீர்கள், அத்தான்!'' என்று முருகையனைத் தேற்றினாள் சித்திரா. ''தினந்தோறும் இல்லாவிட்டாலும் வாரத்துக்கு ஒரு முறையாவது இப்படி வருகிறேன். நீங்கள் இங்கே இருப்பது பற்றி நான் யாரிடமும் சொல்லவில்லை. உங்களுக்கு என்ன உதவி தேவையாக இருந்தாலும் என்னிடம் கேளுங்கள்.''

''கேட்க வேண்டிய சமயம் வரும் போது கேட்கிறேன், சித்திரா! இப்போது நீ செய்ய வேண்டிய உதவி கலகலப்பாக என்னோடு பேசிக் கொண்டிருப்பதுதான்.''

கடலைப் பொட்டலம் ஒன்றை எடுத்து நீட்டினான் முருகையன். சாப்பிட்டுக் கொண்டே, ''தலைமறைவாக இருந்தால் இப்படியெல்லாம் வேஷம் போட்டுக் கொண்டுதான் இருக்க வேண்டுமா?'' என்று கேட்டாள் சித்திரா.

முதலில் ஒரு பொய்யைச் சொல்லி விட்ட முருகையன், பிறகு அதை நிலைநாட்ட இன்னும் சில பொய்கள் சொல்லவேண்டியிருந்தது. நேரம் போவது தெரியாமல் இருவரும் எதை யெதையோ பேசிக் கொண்டிருந்தார்கள். கடற் கரையில் கூட்டம் வெகுவாகக் குறைந்துவிட்டது.

''உங்களை விட்டுப் பிரியவே எனக்கு மனம் வரவில்லை, அத்தான்!'' என்று கூறிக் கொண்டே அவள் எழுந்தாள். ''வருகிறீர்களா, காரில் உங்களைக் கொண்டு போய் விட்டு விட்டு நான் வீட்டுக்குப் போகிறேன்?''

''வேண்டாம், சித்திரா!''

திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சித்திரா மணலில் நடந்து தன் காருக்குச் சென்றாள். கண்களுக்கு அவள் மறையும் வரையில் சிலை போல் அவளைப் பார்த்துக் கொண்டு நின்றான் முருகையன்.

## அத்தியாயம் முப்பத்திரண்டு

# கலைஞனின் கவலை

உண்ணாவிரதக் கூட்டுறவுக் கலைக் கூடத்தின் நிர்வாக முதலாளியான குருசாமிக்குத் தன்னுடைய முதல் நாடகத்துக்கான நடிக — நடிகைகள் சேர்ந்தவுடன் மூச்சு விடுவதற்குக் கூட நேரம் இல்லை. ஒரு பக்கம் தீவிரமான நாடக ஒத்திகைகள் நடத்துவதும், மறு பக்கம் நகரத்துக்குள் அலைந்து திரிந்து ரசிகர்களின் பொருளாதார ஆதரவைத் தேடுவதுமாக இருந்தான். அவனுடைய நடிப்பில் ஈடுபாடு கொண்ட சில பெரிய மனிதர்களைச் சந்தித்து, நிலைமையை எடுத்துச் சொல்லி, நாடகத்துக்குச் சில வாரங்களுக்கு முன்பே 'டிக்கட்டு'களை விற்கத் தொடங்கினான். நூறும் இரு நூறுமாகக் கையில் பணம் புரளத் தொடங்கியது. அரங்கேற்றத்துக்கு வேண்டிய முன் செலவுகள் நடந்தன.

ஒரு நாள் திடீரென்று முருகையனைத் தேடிக் கொண்டு வந்தான் குருசாமி. ''அண்ணா! இந்தாருங்கள், முன் பணம்



ஐம்பது ரூபாய் வைத்துக் கொள்ளுங்கள்!'' என்று நோட்டுக்களை எடுத்து அவனிடம் நீட்டினான். ''வேண்டாமென்று சொல்லாதீர்கள்; பிடியுங்கள், இருக்கட்டும்.''

எங்கே, தன்னையும் நடிப்பதற்கு ஒப்பந்தம் செய்ய வந்திருக்கிறானோ என்ற பயம் வந்துவிட்டது முருகையனுக்கு. கொடுத்த பணத்தை வாங்கிக் கொள்ளாமல், ''விளையாடாதீர்கள், குருசாமி! எனக்கு நடிக்கத் தெரியாது'' என்று கூறினான்.

விழுந்து விழுந்து சிரித்தான் நடிக நண்பன். ''உங்களுக்கு மேடையிலும் சரியாய் நடிக்கத் தெரியாது; வாழ்க்கையிலும் சரியாக நடிக்கத் தெரியாது. அதனால்தான் உங்களை எனக்குப் பிடித்திருக்கிறது'' என்றான்.

''பிறகு எதற்குப் பணம்?''

''நாளையிலிருந்து தினம் ஐந்து ரூபாய்க்கு எங்களுக்கு வேர்க்கடலையும் கண்டலும் வேண்டும். இருபத்தைந்து பேர்களுக்குப் பொட்டலம் போட்டு வைத்திருங்கள். ஆள் அனுப்பி எடுத்துக் கொள்ளுகிறேன்; அல்லது ரிக்ஷாவில் வரும் கருணையோடு அதையும் அனுப்பி விடுங்கள். இருபது நாட்களுக்கு இப்போதைக்குத் தேவைப்படும். மீதி ஐம்பது ரூபாய் இரண்டு நாட்களில் தந்து விடுகிறேன்.''

தர்ம சங்கடமான உதவியைத் தன்னிடம் கேட்டுப் பெற்ற நண்பன், இப்போது தனக்கே உதவி செய்ய முன் வந்ததைக் கண்டு, நன்றியுடன் அவனிடமிருந்து பணத்தைப் பெற்றுக் கொண்டான் முருகையன்.

''இது உங்களுக்கு உதவி இல்லை, அண்ணே! என் தேவைக்காகக் கொடுக்கிறேன்'' என்று விளக்கினான் குருசாமி. ''ஒத்திகைக்கு வருகிறவர்களுடைய முகங்களைப் பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது. வயிற்றில் பசியை வைத்துக் கொண்டிருப்பவர்களிடம் துடிப்பான வசனம் பேசச் சொன்னால் அதில் உயிர் இருக்குமா? அவர்கள் குரலுக்காவது ஒரு தெம்பு வரவேண்டாமா? நாடகம் அரங்கேறுவதற்குள் அவர்கள் ரயிலேறி விடுவார்கள் போல் தோன்றியது! அதனால்தான் இந்த வழியைச் செய்தேன்.''

''பணம் எப்படிக் கிடைத்தது?''

''கேளுங்கள், கொடுக்கப்படும்; தட்டுங்கள், திறக்கப்படும்!'' என்று வசனம் பேசி விட்டுச் சிரித்தான் குருசாமி. ''நல்லவர்கள் சிலரிடமும் பொல்லாதவர்கள் சிலரிடமும் இப்போது தேவைக்கு அதிகமான பணம் இருக்கத்தான் செய்கிறது. நல்லவர்கள் கேட்டால் தந்துவிடுவார்கள்; கெட்டவர்கள் தட்டினால் பெட்டியைத் திறந்து விடுவார்கள் — ரசிக மனம் படைத்த நல்லவர்களிடம் மட்டும் நான் இப்போது கை நீட்டிக் கொண்டு வருகிறேன்.''

முருகையனுக்குக் குருசாமியின் நடவடிக்கைகள் வியப்பாகத் தோன்றின. சில நாட்களுக்கு முன்னால் கையில் காலணாக் காசுகூட இல்லாமல் வந்தவனால் இப்போது எப்படிப் பைநிறையப் பணம் சேர்க்க முடிந்தது?

''எனக்கொரு ஆசை, அண்ணே! எப்படியாவது இருப்பவர்களை வைத்துக் கொண்டு சில நல்ல நாடகங்களை நடத்தி விட்டால், பிறகு இருபது இருபத்தைந்து குடும்பங்களாவது வாழ்வதற்கு வசதி செய்ய முடியுமென்று நினைக்கிறேன்.''

''இது போன்ற ஆசைகள் வளரவும் வேண்டும்; நிறைவேறவும் வேண்டும்'' என்றான் முருகையன்.

அப்போது எதேச்சையாக வெளிப்புறம் வந்த கருணையின் தகப்பன் ஓர் ஓரமாக நின்று கொண்டு குருசாமியின் பேச்சுக்களை உற்றுக் கேட்டான். அவனது சட்டைப் பையிலிருந்த பணத்தின் மேல் கிழவனின் பார்வை விழுந்து விட்டது. அவ்வளவுதான்! திடீரென்று உள்ளே புகுந்து குருசாமியை அளவுக்கு மீறி உபசரிக்கத் தொடங்கி விட்டான்.

''வாங்க, வாங்க! உங்களைப் பத்திக் கருணை என்னிடம் பேசாத நாள் கிடையாது. நாடகப் பாடத்தை நீங்கள் ரொம்ப அற்புதமாகச் சொல்லித் தர்றீங்களாம். உங்களோட சேர்ந்து நடிக்கிறதிலே கருணைவுக்கு எவ்வளவு பெருமை தெரியுமா?''

''வந்தது, ஆபத்து — பணத்துக்கு!'' என்று முருகையனுக்கு மட்டிலும் கேட்கும்படியாய்க் கூறினான் குருசாமி. பிறகு, ''போய் உங்க பெண்ணைக் கூட்டிக்கிட்டு வாங்க'' என்று கிழவனை உள்ளே அனுப்பினான்.

கிழவனின் தலை மறைந்தவுடன், ''அண்ணே! இவன் அந்தப் பெண்ணுக்குத் தகப்பனில்லை'' என்றான் குருசாமி முருகையனிடம்.

''என்ன!''

''ஆமாம்; தனியாக இருப்பதற்குப் பயந்து கொண்டு அவனைத் தகப்பன் வேலைக்கு இவள் நியமித்திருக்கிறாள். நடிப்பில் கெட்டிக்காரிதான்; ஆனால் குணத்தில் பச்சைக் குழந்தை.''

எதனால் அவன் கருணையைப் பற்றி அப்படிக் குறிப்பிட்டான் என்று முருகையனுக்குத் தெரியவில்லை. அதற்குள் கருணையே தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு இரண்டு தம்ளர்களில் காப்பியோடு அங்கு வந்து சேர்ந்தாள்.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்த்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




'பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப்' பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.'

OCG.72QT-TAM.

# தலை அலங்கரிப்புக்குத்

# தகுந்த ஹேர் ஆயில்


அடர்த்தியான, பளபளப்பான கருங்கூந்தல் படைத்த ஸ்திரீ நாள் தவறாமல் எண்ணெய் தடவிக் கூந்தல் வாருவது சகஜம். மயிர்க்கால்களுக்குக் கணிசமான எண்ணெய் சேருவதே அவளுடைய கூந்தல் அழகின் ரகசியமாகும். அதனால்தான் மண்டையோட்டுக்கு வளமூட்டத்தக்க எண்ணெயைத் தேர்ந்தெடுப்பதில் அவள் அதிக கவனம் செலுத்துகிறாள்.

டாடாவின் ஹேர் ஆயில்கள் மண்டையோட்டை வளப்படுத்தி, ஆரோக்கியமான, அடர்த்தியான கூந்தல்வளர உதவுகின்றன.

டாடாவின் கோகோனட் மற்றும் கேஸ்டர் ஹேர் ஆயில்கள் நறுமணமூட்டப்பட்டு, மூன்று வித சைஸ்களில் கிடைக்கின்றன.






## டாடாவின்
## ஹேர் ஆயில்கள்

THOY-12-TAM

மரியாதை கலந்த வெட்கத்தோடு காப்பியை அவர்கள் முன்பு வைத்தான்.

அந்தச் சில விநாடிப் பொழுதுக்குள்ளாகவே கருணா குருசாமியின் மீது தனியானதொரு பற்றுதல் கொண்டிருந்தாள் என்பது முருகையனுக்கு விளங்கி விட்டது. குருசாமியோ அவளைச் சரியாகக் கூடத் திரும்பிப் பார்க்காமல் காப்பியை எடுத்துக் குடித்தான்.

''இந்தா! உன் அப்பா முன்பு கேட்டாரே, அந்த முப்பது ரூபாயை இப்போது வாங்கிக் கொள். நாடகம் தொடர்ந்து நடந்தால் ஒவ்வொரு நாடகத்துக்கும் உனக்கு இதே பணம்.''

''இப்போது ஒன்றும் பணம் வேண்டாம்!'' என்று சொல்லி விட்டு அவசரமாகத் தம்ளர்களை எடுத்துக் கொண்டு திரும்பினாள் கருணா.

''இந்தா, கருணா!''

''இல்லை, வேண்டாம்! இன்னும் நாடகத்துக்கு எவ்வளவோ செலவிருக்கிறது. அதை முதலில் கவனியுங்கள். நான் மெதுவாக வாங்கிக் கொள்ளுகிறேன்.''

அவள் பிடிவாதமாக மறுத்தவுடன் குருசாமி அவளுடைய 'அப்பா'வை அழைத்து அவனிடம் நீட்டினான். கருணா குறுக்கிட்டு, ''வாங்காதீர்கள், அப்பா!'' என்று கிழவனையும் தடுத்துப் பார்த்தாள். கிழவனோ தயங்குவது போல் பாவனை செய்துவிட்டு, அவசரமாகப் பெற்றுக் கொண்டு தன் பல் தெரியச் சிரித்தான்.

''தொழிலைத் தொழிலாய்க் கவனிக்க வேண்டும், கருணா! இந்தா, முடிந்தால், முடிந்தவரையில் எனக்கு டிக்கெட் விற்றுக் கொடு. இதில் ஒரு ரூபாய் டிக்கெட் இருபது இருக்கிறது'' என்று ஒரு சிறிய டிக்கெட் புத்தகத்தை அவளிடம் கொடுத்தான் குருசாமி.

கருணா அதைப் பெற்றுக் கொண்டு உள்ளே நுழைந்தாள். கிழவனும் அவளைப் பின்பற்றினான்.

''பார்த்தீர்களா, உலகத்தை!'' என்றான் குருசாமி. ''முன்பு குறுக்கே நின்ற நந்தி இப்போது என்னிடமே குழைக் கும்பிடு போடுகிறது. எல்லாம் பணம் செய்யும் வேலை, அண்ணா!''

''அந்தப் பெண்ணைப் பார்த்தால் நல்லவளாகத் தோன்றுகிறது'' என்றான் முருகையன்.

''அவள் ஒரு முட்டாள்! பிழைக்கத் தெரியாத பெண். நான் நடிப்புக்காகச் சொல்லிக் கொடுக்கும் வசனங்களை உண்மையென்று நம்பிக்கொண்டு திண்டாடுகிறாள்.''

''நாடகத்தில் கருணாவுக்கு என்ன வேஷம்? கதாநாயகியா?''

## கார்த்திகை நாள்

**கலாபாரதி**

விண்ணுலகில் வட்டமதி
  வீற்றிருந்து வீசும்ஒளி
எண்ணிறைந்த விண்மீனும்
  எழிலொளியைக் காட்டுவதும்
மண்ணுலகில் பண்ணியதோர்
  மங்கலமாம் அகல்விளக்கில்
தண்ணொளிதான் காட்டிடுமோர்
  தத்துவத்துக் கிடாமோ?
அகல்விளக்கே! அழகொளியே!
  அம்பிகையின் அருட்சுடரே!
அகமனைத்தும் நிறைந்தஇருள்
  அகன்றிடவே வரமருள்வாய்!
சகமதனில் ஒளிவடிவாய்
  சரவிளக்கில் சிவமயமாய்
சுகமெனவே சூட்சமமாய்
  சுடரிடும்நாள் கார்த்திகையோ?

''இல்லை; அதற்கு வேறொரு பெண் இருக்கிறாள். இவளுக்கு என்னுடைய நாயகியாக வந்து தொலைய வேண்டிய வேஷம்! நாடகத்தை எழுதி வைத்திருக்கும் ஆசிரியரோ இவளுக்கும் எனக்கும் காதல் கரை புரண்டு ஓடுகிற மாதிரி வசனங்களை எழுதித் தள்ளியிருக்கிறார். என்னத்தைச் செய்வது? ஒத்திகையின் போது நான் இவளிடம் அகப்பட்டுக் கொண்டு படாதபாடு படவேண்டியிருக்கிறது'' என்றான் குருசாமி.

''அப்படியானால் உண்மையிலே...'' என்று சொற்களை முடிக்காமல் சிரித்தான் முருகையன்.

''காதலாவது, மண்ணாங்கட்டியாவது! எனக்கோ இரவு பகலாய் நாடகத்தை வெற்றிகரமாய் நடத்தி முடிக்க வேண்டுமே என்ற ஒரே கவலை. கிடைத்திருக்கும் ஆதரவை வைத்துக்கொண்டு இந்தக் குழுவை எப்படியாவது இந்தப் பட்டணத்தில் நிலைநாட்டிவிட வேண்டுமென்று பார்க்கிறேன். இவளோ இதற்குள் உரிமை கொண்டாடப் பார்க்கிறாள்.''

கருணாவின் கதையை முருகையனிடம் கூறினான் குருசாமி. குழந்தைப் பிராயத்திலேயே பெற்றோரை இழந்த அநாதைப் பெண்ணும் அவள். யாரோ உறவினர்கள் வீட்டில் பல கொடுமைகளுக்கு மத்தியில் அவள் வளர்ந்திருக்கிறாள். கல்யாண ஏற்பாடுகள் ஒன்றும்




நடப்பதாய்த் தெரிய வில்லை. நாடகத்திலும் சினிமாவிலும் ஒரே பைத்தியம் அவளுக்கு. திடீரென்று சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டுக் கிளம்பி ரயிலேறிச் சென்னைக்கு வந்து விட்டாள். திரையுலகத்தில் சேர்ந்து நட்சத்திர நடிகையாகப் பிரகாசிக்கலாம் என்று மனப்பால் குடித்துக் கொண்டு வந்தவள் அவள்!

''பாவம்!'' என்றான் முருகையன்.

''பாவமாவது புண்ணியமாவது! வடிகட்டின முட்டாள்தனம்!'' என்று கோபமாய்க் கூறினான் குருசாமி. ''ஏற்கனவே தொழிலில்லாமல் இங்கே ஆயிரக்கணக்கான பேர் அலைந்து கொண்டிருக்கிறோம். இதில் குடும்பத்தைவிட்டுப் பெண்களும் பள்ளிக்கூடங்களை விட்டுப் பையன்களும் ஓடி வந்தால் இங்கே யார் என்ன செய்ய முடியும்? கெட்டுக் குட்டிச்சுவராய்ப் போய்ச் சீரழிந்து தெருவில் நிற்பவர்களைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறதண்ணா! இவள் மட்டும் எப்படியோ தன்னைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காக ஒரு தகப்பனைத் தேடிக் கொண்டிருக்கிறாள். இருந்தாலும், பொதுவாக இதுபோல் வரும் பெண்கள் தாங்கள் ஏமாந்து சீரழிவதற்காகவே இங்கு வருகிறார்கள் என்பது என் எண்ணம்.''

விளக்கு வெளிச்சத்தில் கண்ணைப் பறிக்கும் கலை உலகத்தைத் தேடி விட்டில் பூச்சிகள் பல பறந்து வரும் செய்தி முருகையனுக்கு அப்போதுதான் தெரிந்தது.

''நீங்கள் நினைத்தால் அந்த ஒரு பெண்ணுக்காவது வாழ்வளிக்க முடியுமல்லவா?'' என்று கேட்டான்.

''இன்றைக்குள்ள நிலைமையில் என்னுடைய கலைக்கூடம் கொலைக்கூடமாகி விடும். என் மதிப்பும் மரியாதையும் காற்றில் பறந்து விடும். இவளைஎன் கலைக்கூடத்தின் வளர்ச்சிக்காகக் கூப்பிட்டேனே தவிர, என்னைக் காதலிப்பதற்காக அல்ல!''

குருசாமியின் பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டான் முருகையன்.

அப்போது தபால்காரர் வந்து ஒரு கடிதத்தை முருகையனிடம் நீட்டினார். அதைப் பிரித்துப் படித்தவுடன் முருகையனின் முகம் வெளுத்தது. அவன் கண்களில் நீர்த் துளிகள் திரண்டன.

''என்ன அண்ணா, விஷயம்? சொல்லுங்கள்!'' என்றான் பதற்றத்துடன் குருசாமி. (தொடரும்)

# உங்கள் சிந்தனைக்கு...

**காரின் முன் பக்க விளக்குக்கு மஞ்சள் கண்ணாடி இருந்தால் பனிப் படலத்தையும் ஊடுருவும் என்கிறார்களே; சரிதானா?**

இல்லை. மஞ்சள் நிறக் கண்ணாடி, ஊடுருவிச் செல்லும் சிவப்பு ஒளிக்கோ மஞ்சள் ஒளிக்கோ உதவுவதில்லை. ஆனால் அவை நீலநிற ஒளியை இழுத்துக் கொள்கின்றன. இதனால் எதிரே வரும் காரோட்டியின் கண்கூச்சம் தவிர்க்கப்படுகிறது என்பது உண்மை.

**கோடைக் காலத்தில் இரும்புப் பாலம் சுருங்கும் என்கிறார்களே; சரியா?**

இல்லை. இரும்பு சூட்டினால் விரிவடைகிறது. ஆகவே பாலம் விரிவடையும். இப்படி விரிவதைப் பயன்படுத்தித்தான் வண்டிச் சக்கரத்துக்கு இரும்புப் பட்டை போடுகிறார்கள். இரு தண்டவாளங்களுக் கிடையில் சிறிது இடைவெளி விட்டு இரண்டையும் சேர்க்கிறார்கள். மணி காட்டும் கடிகாரத்தின் உறுப்புக்கள் செய்யச் சூட்டாலும் குளிர்ச்சியாலும் மாறுபாடடையாத கலப்பு உலோகங்களை உபயோகிக்கிறார்கள்.

**நீரிழிவு நோய்க்கு 'இன்சுலின்' நல்ல மருந்து என்கிறார்களே; உண்மைதானா?**

இல்லை! இரைப்பையில் சுரக்கும் கணைய நீரில் 'இன்சுலின்' இருக்கிறது. இது சரிவர இல்லாவிட்டால் உடலில் கொழுப்புப் பொருளும் முடிவில் சர்க்கரைப் பொருளும் செரிக்கப்படாமல் போகின்றன. இன்சுலின் சர்க்கரையைச் செரிக்க உதவுகிறதே தவிர, நீரிழிவுநோய்க்கு மருந்தல்ல.

**கோடைகாலத்தில் கறுப்பு உடை அணிவது நல்லதா? வெள்ளை உடை நல்லதா?**

வெள்ளை ஆடைகள் அணிவதுதான் நல்லது. வெள்ளை ஆடைகள் உஷ்ணத்தைத் திருப்பி அனுப்பி விடுகின்றன. கறுப்பு ஆடைகளோ சூட்டை இழுத்துக் கொண்டு, பின் வெளியிடுகின்றன. ஆகவே கறுப்புச் சட்டை போட்டிருப்பவர்கள் புழுக்கத்தால் அதிகம் சிரமப்படுவார்கள். வெள்ளைச் சட்டை போட்டிருப்பவர்கள் வெய்யிலினால் அதிகம் கஷ்டப்படுவதில்லை.

**கறுப்புக் கரியை உபயோகித்துச் சர்க்கரையை வெண்மையாக்கலாம் என்கிறார்களே.....?**

உண்மை. கரியில் நுண்ணிய துவாரங்கள் இருக்கின்றன. சர்க்கரை நீரை எலும்புக் கரித் தூளைப் போட்டுக் காய்ச்சி வடிகட்டினால் சர்க்கரை நீர் வெண்மையாகிறது. கரித் தூளுக்குப் பிற பொருளிலுள்ள நிறத்தையும் மணத்தையும் போக்கும் தன்மை உண்டு. அதனால்தான் விஷவாயு பரவியிருக்கும் இடங்களில் கரித் தூள் நிறைந்த முகமூடியை அணிந்து வேலை செய்கிறார்கள்.

**திருடன் நம்மைத் திடீரென்று வழிப் பறிக்கிறான்; உடல் நடுங்குகிறது. உடலில் அப்போது என்ன மாற்றம் நேர்கிறது?**

அப்போது நம் உடலில் நாளமில்லாத சுரப்பிகளிலிருந்து 'அட்ரினலின்' என்ற திரவம் இரத்தத்தில் நிறைய கலக்கிறது. மனிதன் ஒன்று பயந்தோடுங்கிப் போவான். அல்லது எதற்கும் தயாராகும் அசாதாரணத் துணிவைப் பெறுவான். நோனியாக இருப்பவர்களும், பைத்தியக்காரர்களும் சில சமயம் பலம் பெறுவதன் காரணம் இதுதான்.

**ஏன் நமது உடல் வேர்க்கிறது?**

உடலின் உஷ்ணத்தைத் தணிக்கத் தோலின் மீதுள்ள வேர்வைச் சுரப்பிகள் வேர்வையை வெளித் தள்ளுகின்றன. வேர்வை ஆவியாக உடலின் உஷ்ணம் உபயோகப்படுகிறது. உஷ்ணம் இப்படிச் செலவாக உடல் குளிர்ச்சி அடைகிறது.

**நமது உடலால் ஹைட்ரோ குளோரிக் அமிலத்தைத் தயார் செய்ய முடியுமா?**

இரைப்பையில் சுரக்கும் திரவங்களில் ஹைட்ரோ குளோரிக் அமிலம் ஒன்றாகும். ஹைட்ரோ குளோரிக் அமிலம் உணவுப் பொருளைக் கரைக்கிறது. தீமை செய்யும் பாக்டீரியாவைக் கொல்லுகிறது. இரும்பை உடல் உபயோகிக்க இது தேவை. இது சரிவர இல்லாவிட்டால் சோகை உண்டாகும். இது அதிகமாகச் சுரந்தால் இரைப்பையின் சுவர்களை அரித்துப் புண்ணை உண்டாக்கும்.

**உங்கள் ஆடைகளை ஒலி அலைகளால் சலவை செய்ய முடியும் என்கிறார்களே?**

உண்மை. நாம் பேசுவதை நம் காது கேட்கிறது. காற்றில் அழுக்கத்தையும் விரிவையும் ஏற்படுத்தி அலை போல் ஒலி நம் காதுக்கு வந்து சேருகிறது. நம் காது கேட்க முடியாத ஒலியும் இருக்கிறது. அதைக் கேளா ஒலி (ultra sonic waves) என்கிறோம். அவ்வொலியை அழுக்குத் துணிகள்மீது பாய்ச்சினால் அழுக்கு தானே உதிர்ந்து விடுகிறது. மூளையின் ரண சிகிச்சையிலும் உலோகங்களின் உறுதியைச் சோதிப்பதிலும் கூட, கேளாத ஒலி பயன்படுகிறது.

**ரத்தத்தை உடலில் ஏற்றும்போது எந்த வகை ரத்தத்தை எல்லோருக்கும் அளிக்கலாம்?**

ரத்தத்தில் முக்கியமாக ஐந்து வகைப் பிரிவுகள் இருக்கின்றன. ஏ, பி, ஏபி, ஓ, ரீசஸ் என்ற வகைகள். அவசரத்தில் நோயாளியின் ரத்த வகையை ஆராயாமல் 'ஓ' வகை ரத்தத்தை எல்லாருக்கும் அளிக்கலாம். ஆனால் வேறு வகைகள் கொடுத்தால், அவை நோயாளியின் வகையிலிருந்து மாறுபட்டிருக்குமானால் நோயாளி இறந்துபோக நேரிடும்.

தொகுத்தவர்: உதயமூர்த்தி




# நன்ருக வாரிவிடப்பட்ட ஆரோக்கியமான கூந்தல்



எப்பொழுதுமே
கண்ணைக்
கவரும்!

காலகேட் ஹேர் டானிக்கில் லெனோலின் என்ற இயற்கையான கூந்தல் எண்ணெய்களை ஒத்த எண்ணெய் மிகச்சிறந்த முறையில் சேர்க்கப்பட்டிருக்கிறது. பிரதி தினமும் கால்கேட் ஹேர் டானிக்கை உங்கள் தலையில் தடவி 3 நிமிடங்களுக்கு வழக்கமாகத் தேய்த்தால் உங்கள் கூந்தல் ஆரோக்கியமாகவும், அடர்த்தியாகவும் வளருவதுடன் நாள் முழுவதும் சேர்த்தியாகப் படிந்திருக்கவும் உதவுகிறது!




லெனோலின் கலந்த **கால்கேட்**
ஹேர் டானிக் உபயோகியுங்கள்!

ஆடவர்கள் விரும்புவது!

CHT.G.6

# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் முப்பத்திமூன்று

அருண்குமார் வந்து போன அன்று முழுவதும் அவருக்குப் படுக்கக் கூட முடியவில்லை. 'ராம ராம' என்று மல்லாந்து படுத்தவாறே மனத்துக்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். மங்களப் பாட்டி உச்சிப் பொழுதுக்குக் கஞ்சி கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் பேச உட்கார்ந்தாள். அவளுக்குப் புத்த ஜாதகக் கதைகள் நாலைந்து சொன்னார் அவர். பாலி மொழியில் புத்தர் செய்யுட்களைப் பத்துப் பதினைந்து எடுத்துக் கூறி ஒவ்வொன்றையும் விளக்கிக் கொண்டே வந்தார்.

மங்களப் பாட்டி எல்லாவற்றையும் கேட்டாள். கடைசியில் அவளுக்குச் சந்தேகம் வந்து விட்டது. ''ஏன் ஸ்வாமி! கேக்கறேனென்று நெனைச்சுக் கப்படாது. நீங்க என்ன புத்த சன்யாசியா? சாதாரண சன்யாசியா?'' என்று கேட்டு வைத்தாள்.

''சன்யாசியிலே புத்த சன்யாசி, வைஷ்ணவ சன்யாசி இதெல்லாம் உண்டா, என்ன? சன்யாசி எல்லாரும் வெறும் சன்யாசிதான். விட்டு விடுவதானால் எல்லாவற்றையும்தான் விட்டுவிட வேண்டும்.''

''அதுக்கில்லே ஸ்வாமி. சாமி இல்லை, பூதம் இல்லைன்னு பேசினாராமே புத்தர். நீங்க 'ராமா ராமா' ன்னு சொல்லச் சொல்றேளேன்னு கேட்டேன்.''

''புத்தர்தான் நம் எல்லாரையும்விட சாமி இருக்கிறது என்று ரொம்ப அதிகமாக நம்பினவர். ஆனால் கை, கால், தலை, மூளையெல்லாம் வைத்து அனுப்பின மனுஷன் தலைக்கு மேல் கிடக்கிற வேலைகளை விட்டு விட்டு, 'சாமி சாமி' என்று புலம்பிக் கொண்டிருக்கிறானே என்று தான் அவர் அப்படி சாமி இருக்கிறாரோ என்னவோ எனக்குத் தெரியாது என்று சொல்லி யிருப்பார். சம்பளம் கொடுத்துச் சாமானெல்லாம் வாங்கிக் கொடுத்து வேலையைச் செய்யடா என்று வேலைக்காரனிடம் சொல்கிறோம். அவன் சற்றைக்கொரு தடவை வந்து, 'எசமான், உங்களைப் போல் நல்லவர்களே கிடையாது. நீங்க ரொம்பப் பெரியவங்க' என்று சொல்லிக் கொண்டு நின்றுகொண்டே யிருந்தால் நமக்கு அலுப்பாக இருக்குமா, இராதா? என்னடா பெரிய 'கழுப்புணி'யாக இருக்கிறான், வேலையை விட்டு இப்படிப் புலம்பிக் கொண்டே யிருக்கிறானே! இதையெல்லாம் யார் கேட்டார்கள் என்று நினைப்போமா மாட்டோமா?''

''அப்படியா!'' என்று மங்களப் பாட்டி தரையைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்தாள்.

''சரி ஸ்வாமி, நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள். நான் இத்தனை நேரமாகப் பேச வைத்து விட்டேன் உங்களை. நீங்க சொல்ற வேலைக்காரன் மாதிரியே ஆயிட்டுது என் லட்சணமும்'' என்று சொல்லி, கஞ்சிப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு கீழே இறங்கினாள்.

சாயங்காலம் யாரும் வரவில்லை. இரவும் அப்படியே



தி. ஜானகிராமன்

கழிந்தது. ஆழ்ந்து உறங்குகிறார் அவர். வீட்டுக்கு வெகு சமீபத்தில் தோப்பு ஒன்றிருந்தது.

விழிப்புக் கொடுத்து விட்டது அவருக்கு. பட்சிகள் அடையும் தோப்பு அது. வெள்ளி முளைக்கும்போதே அங்கு ஏகப்பட்ட இரைச்சல் கிளம்பி விடும். கரிச்சான்கள், தினைக் குருவிகள், நாகணவாய்கள், சேவல்கள், காக்கைகள் எல்லாம் பேரிரைச்சலாக ஆரம்பித்து விடும். சிறிது புலன் கூர்மையுள்ளவர்கள் தூங்கக்கூட முடியாது. விழித்துக் கொண்டு விட்டார் அவர். பட்சிகள் ஆயிரக்கணக்கில் இருக்கும் போல் இருந்தது. அவ்வளவு இரைச்சல், கூவல் குழைவு, பேச்சு, கரையல், சீத்காரம், கரகரப்பு—இப்படிப் போர்க்கள இரைச்சலாகக் கேட்டது. இது என்ன சந்தோஷமா, கோபமா, ஆராதனையா — ஒன்றும் புரியாமல் கேட்டுக்கொண்டிருந்தார். கேட்கும்பொழுதே இருட்டும் பிரிந்து வானம், வீடு எல்லாவற்றையும் நரை பூசிக் கொண்டே வந்தது. தென்னை மரத்தின் கீற்றில் இருந்தாற் போலிருந்து பொன் ஒளி மின்னியது. சூரியோதயம் ஆகிவிட்டது. எழுந்து உட்கார்ந்தார் அவர். பட்சிகளின் ஓசைகள் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிற்று. 'ணிக் ணிக்' என்று ஓர் அணிலும் ஒரு மடாச் சேவலும் செய்த சப்த ஜாலங்களும், ஒரு வாளித் தண்ணீரை விட்டுத் திண்ணைகளை வாருகோலால் கழுவும் ஓசைகளும் கேட்டன. குளிக்க முடியாமல், இந்தக் காலையின் அமைதி வெள்ளத்தில் தலையை முழுக்கி முழுக்கிக் குளித்தார் அவர். வீட்டை விட்டுக் காட்டுக்கு ஓடுகிற துறவிகளைக் கூடத் துரத்தித் துரத்தி வரும் இயற்கையின் ஓசைகளைக் கண்டு அவருக்குச் சற்று ஆறுதலாக இருந்தது.

கிழக்கின் பொன்னைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தார் அவர். ஏதோ இரண்டு வீடுகளின் இடுக்கு வழியாக உதயசூரியன் தெரிந்தது. அதையே பார்த்தார். என்ன தான் சூன்யவாதமும், தானே கடவுளும் என்று நினைத்துக் கொண்டாலும் சூரிய வட்டத்தின் நடுவில் தாமரை மீது அமர்ந்து புன்னகை பூக்கும் கடவுளைக் காணும் பரவசத்துக்கு ஈடாகாது அது என்று அவருக்குத் தோன்றியது. அந்தக் காட்சியையே அந்த ஒளி வட்டத்தில் வைத்துச் சிறிது நேரம் நினைவிழந்து விட்டார் அவர்.

''காப்பி சாப்பிடுவதற்கே வரச் சொன்னீர்களே, வந்து விட்டேன்'' என்று அதே கிழக்குத் திசையில் குரல் கேட்டது. சூரியனைப் பார்த்துக் கொண்டிருந்தவர் இலேசாகத் திரும்பினார் கண்ணில் பொன்னும் தீயும் கலந்து பார்வையை மூடிற்று.

''நான்தான் மாமா!'' என்று டொக்கி வந்தாள். இடது கையில் ஒரு செம்பு. வலது கையில் ஒரு டபராவும் டம்ளரும்.

''செம்பில் தண்ணீர் இருக்கிறது. முகத்தைக் கழுவி வாயைக் கொப்பளியுங்கள்'' என்று மேஜைமீது காப்பியை வைத்து, செம்பை வலது கைக்கு மாற்றி அவரிடம் கொடுத்தாள்.

''இப்பத்தான் வந்தேன். பாட்டியம்மா காப்பியைக் கலந்து கொண்டிருந்தாள். நான் கொண்டு கொடுக்கிறேன் என்று வாங்கி வந்தேன்.''

சூரிய வட்டத்திலிருந்து அவள் எழுந்து வருவது போலிருந்தது அனந்தசாமிக்கு.

''கோலம் போடவே வந்து விடுவேன் என்று சொன்னேயே நேற்று?''

''நீங்கள் போய்ப் பாருங்களேன், மாமா! கீழே சமையல் உள் அலமாரியில் ஒரு புத்தர் படம் வைத்திருக்கிறதே. அதற்கு நேரே சின்னதாக ஒரு நட்சத்திரக் கோலம் போட்டு விட்டுத் தான் காப்பியைக் கொண்டு வந்தேன்'' என்று கூறினாள்.

அவள் முகத்தில் இருந்த அசாதாரணமான ஒளியையும் குழந்தைத் தன்மையையும் கண்டபொழுது, சூரியனிடத்திலிருந்தே எழுந்து வந்தாற் போல் ஒரு கண் கொட்டு நொடிக்குப் பிரமித்து விட்டார் அவர். காரணம் தெரியாத ஒரு கிறக்கம் அவர் இதயத்தில் சுரந்து பெருகியது.

''அப்பா எங்கே?''

''வருவார் மாமா!''

''கீழே இருக்கிறாரா?''

''வீட்டில் இருக்கிறார்.''

''வீட்டிலா?''

''ஆமாம், மாமா!''

''நீ யாரோடு வந்தாய்?''

''என்னோடுதான்'' என்று சிரிப்பு நெஞ்சில் தொனிக்கச் சொன்னாள் டொக்கி.

''தனியாகவா?''

''இங்கே என்ன மாமா பயம்? அப்பாவிடம் சொன்னேன், இந்த மாதிரிக் கோலம் போடுவதற்கே போய் விடணும் என்று. சரியென்று ஒரு சைக்கிள் ரிக்ஷா பேசி ஏற்றி விட்டார். காப்பி கலந்து வைத்து விட்டுத்தான் வந்தேன். அதை எடுத்து அப்பா தம்பிகளுக்குக் கொடுத்து விட்டுத் தாமும் சாப்பிடுவார். சமையலை அம்மா பார்த்துக் கொள்வாள். நடமாட முடிகிறது. காலையில் எழுந்திருப்பதுதான் சிரமம்.

அதற்காகத்தான் நான் எழுந்து அடுப்பை மூட்டிக் காப்பிக் கடையைக் கவனித்து விட்டு வந்தேன்!'' என்று எல்லாக் கேள்விகளுக்குமாகச் சேர்த்து விடை சொல்லி விட்டாள் டொக்கி.

''வாயைக் கொப்பளித்து விட்டு வாருங்களேன். காப்பி ஆறிப் போகிறது.....''

காப்பியைச் சாப்பிட்டதும் கீழே பாத்திரங்களைக் கொண்டு வைத்துவிட்டு மறுபடியும் மேலே வந்தாள் டொக்கி.

கீழே உட்கார்ந்து கொண்டாள்.

''இந்த இடம் ரொம்ப நன்றாயிருக்கிறது, மாமா!'' என்று அறையிலுள்ள புத்தக அலமாரி, மருந்துகள், சுற்றிலும் 'ஹோவென்று' திறந்து கிடந்த வெளி, வீடுகள், சூரிய ஒளி எல்லாவற்றையும் ஒரு தடவை நோட்டம் விட்டாள் டொக்கி.

எழுந்து புத்தகங்கள் நாலைந்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள். மறுபடியும் வைத்தாள். பத்திரிகைகளை எடுத்துப் பிரித்தாள். திருப்பி இருந்த இடத்திலே வைத்தாள். மாடியை உராய்ந்து நின்ற மரங்கள், வானம் எல்லாவற்றையும் பார்த்தாள்.

''நீங்கள் மாத்திரம் சரி என்று சொல்லுங்கள். நான் இங்கேயே இருந்து விடுவேன்'' என்றாள்.

அவர் ஒன்றும் பேசவில்லை. ஏதோ பிடுங்கலிலிருந்து தப்பித்து வந்து யாரும் வராத இடமாகப் பார்த்து ஒளிந்து கொண்டாற் போல் இருந்தது. அவளைப் பார்த்தால். தெருவில் துரத்தி வரும் நாயினின்றும் பிழைத்து வீட்டுக்குள் ஓடி வந்து பீரோ இடுக்கில் பதுங்கி விழித்து விழித்துப் பார்க்கும் பூனைக் குட்டி மாதிரி இருந்தது.

டொக்கி மறுபடியும் எழுந்து ஒரு பத்திரிகையை எடுத்துப் பிரித்து வாசித்தாள்.

கால் மணி நேரம் ஆயிற்று.

''நேற்று இங்கிருந்து போனாயே. என்னென்ன செய்தாய்? சொல்லேன்'' என்று அவளைப் பேச்சுக்கு இழுத்தார் அனந்தசாமி.

''ஒன்றும் செய்யவில்லை. மத்தியானம் காப்பி போட்டேன். கொஞ்ச நேரம் டான்ஸ் பண்ணினேன். கொஞ்ச நேரம் ஜபம் பண்ணினேன்.''

''ஜபமா? என்ன ஜபம்?''

''சும்மா மாமா. ஜபம் என்றால் சுவாமி ஜபம் இல்லை. எனக்குத் தைரியம் ஜாஸ்தி. என்னை ஒருத்தரும் ஒன்றும் செய்ய முடியாது என்று ஒரு மணி நேரம் சொல்லிக் கொண்டேயிருந்தேன்.''

''எதற்காக?''

''ஒரு புஸ்தகத்தில் எழுதியிருந்தது. நமக்கு எது வேண்டுமானாலும் அதைத் திருப்பித் திருப்பி, மனத்தோடு நம்பிக்கையோடு சொல்லிக் கொண்டேயிருந்தால் அப்படியே ஆக்கி விடலாம் என்று எழுதியிருந்தது. சொல்லிக் கொண்டிருந்தேன்....''

அதைப் பற்றி அபிப்பிராயம் ஒன்றும் சொல்லவில்லை அனந்தசாமி. சிறிது நேரம் மௌனம் சாதித்தார்.

''அப்புறம்?''

''அப்புறம் அப்பாவோடும், பெரிய தம்பியோடும் பீச்சுக்குப் போனேன்.''

''அப்புறம்?''

''வீட்டுக்கு வந்தோம். சாப்பிட்டோம். ரங்கன் வந்தார். ஒரு கேம் 'செஸ்' ஆடினோம்.''

''செஸ் கூட ஆடத் தெரியுமா, உனக்கு?''

''ஊரிலே ஆடுவேன். நம்ம ஊர் சதுரங்கம் அது. இங்கே வந்ததும் ரங்கன் ஒரே நாளில் சீமை செஸ் சொல்லிக் கொடுத்து விட்டார். உங்களுக்குத் தெரியுமா?''

''எனக்குத் தெரிந்தால் பொழுது போக வில்லையே என்று இப்படி அழுவேனா?'' என்று கேட்டுச் சிரித்தார் அனந்தசாமி.

''தெரிய வேண்டாம், மாமா.''

''ஏன்?''

''ஒரு மணி நேரம் ஆடினால் மூளை உடம்பெல்லாம் அயர்ந்து போய் அடித்துப் போட்டாற் போல் ஆகி விடுகிறது, மாமா. அப்புறம் ஒரு பிரயோசனமுமில்லாமல் ஏன் இப்படி மண்டையை உடைத்துக் கொண்டோம் என்று வருத்தம் வந்து விடுகிறது.''

''மூளைக்கு நல்ல பயிற்சி இல்லையோ அது? என்ன இப்படிச் சொல்லி விட்டாய்?'' என்றார் அனந்தசாமி.

''மூளைக்கு செஸ் ஆடறதுக்குத் தானே பயிற்சி? மற்றச் சமாசாரங்களுக்கு இது என்னமா பிரயோசனப்படும்? அதிலே தனித்தனியாய்ப் பழக்கம் பண்ணிக் கொண்டால்தானே நடக்கும்?''

அனந்தசாமிக்கு வியப்பாகத்தான் இருந்தது. இவ்வளவு சின்னப் பெண், என்னென்னவெல்லாம் யோசித்து யோசித்து வைத்திருக்கிறாள் என்று நினைத்துக் கொண்டார்.

''சரி செஸ் ஆடினாய்.....''

''ரங்கன் போனார், கதவைத் தாளிட்டுப் படுத்துக் கொண்டேன்.''

''ரங்கன் ஒன்றும் சொல்லவில்லையா?''

''உங்களைப் பற்றிக் கேட்டார். 'அவருக்கு ஜுரம், இப்பொழுது யாரையும் பார்க்க மாட்டார்' என்றேன். நான்

நேற்று இங்கு வந்து விட்டுப் போனதையும் சொன்னேன்.''

''ஐயையோ, ஏன் அப்படிச் சொன்னாய்....?''

''ஆமாம். உங்களைப் பார்க்க வருவார். நானும் இங்கு வருவேன். எதற்காக....அநாவசியமாக?''

''இங்கு உன்னைப் பார்க்காவிட்டாலும் நேற்று அங்கு வந்தாரே.''

''அதற்காகத்தான் அவர் வந்ததும் வராததுமாக 'உங்களைத்தான் எதிர்பார்த்திண்டேயிருக்கேன். செஸ் விளையாடணும் போலிருக்கு' என்றேன். உடனே உட்கார்ந்து விட்டார். ஒரு மணி ஆடிக் களைத்து எழுந்து போனார். உங்களை வந்து பார்த்து வரப் போகிறேன் என்றார். 'அதெல்லாம் வேண்டாம். நோயாளிகள் வேறு வந்து



பிடுங்குகிறார்கள். இன்னும் நாலைந்து நாட்கள் நாமாவது அவரைத் தொந்தரவு செய்யாமல் இருந்தால்தான் நல்லது' என்று சொல்லி வைத்தேன்.''

''பயமாயிருக்கு, பயமாயிருக்குன்னு நேற்று சொன்னாய். இவ்வளவு யமனாக இருக்கிறாயே'' என்று கூறிச் சிரித்தார் அனந்தசாமி.

''போங்க, மாமா. பின்னே நான் வருகிற இடத்துக்குக் கூடக் கூட வந்தால் என்ன செய்கிறதாம்? யமனைத் தான் யாரும் தொடர்ந்து போகாமல் இருப்பார்கள்.''

பேசிக் கொண்டிருக்கும் போதே மங்களப் பாட்டி வந்தாள். ''சுவாமி! உங்களை யாரோ பார்க்க வந்திருக்கிறார்கள், காரில். 'உடம்பு சரியாயிருக்கிறதா, வந்து பார்க்கலாமா, தொந்தரவாக இராதே' என்று கேட்கிறார்கள். வரச் சொல்லட்டுமா?''

''வரச் சொல்லுங்கள். யாரு?''

''யாரோ பொண்ணு.

''அப்படியே இதையும் கேட்டுக் கொண்டு போயிடறேன். இன்னிக்குக் கொஞ்சம் பொரிச்ச ரசமா வைக்கலாமா? நாலு நாளா கஞ்சியே சாப்பிடுகிறீர்களே!... நாக்கு செத்துப் போயிடுமே'' என்று இடுப்புக் கூனலை நிமிர்த்தி நின்றவாறு கேட்டாள் மங்களப் பாட்டி.

''நீங்கள் எது செய்தாலும் சரி'' என்று கூறினார் அனந்தசாமி.

''அப்படியே செஞ்சுடறேன். அப்படியே மணத்தக்காளி வத்தலைப் பொரிச்சுடறேன். பொரிச்ச ரசம் வைச்சுடறேன். வாய்க்கு ஆரோக்கியமா இருக்கும்'' என்றாள் பாட்டி.

''அப்படியே செய்யுங்கள்.''

''எனக்கும் சேர்த்து....'' என்றாள் டொக்கி.

''ஏண்டி கண்ணு, உனக்கில்லாமலா? குழந்தை.... ஐயோ, படு சமர்த்து. வந்தவுடனே அவ கோலம் போட்டாளே, அதைச் சொல்லணும். ராமர் படம் எழுதுவானே எத்திராஜு, அந்த மாதிரின்னா போடறா. பொரிச்ச ரசம் நன்னா வைப்பேண்டி, குழந்தை. நீ இருந்து சாப்பிடு'' என்று சொல்லிக் கொண்டே இறங்கினாள் பாட்டி.

''மாமா, நானும் கீழே போறேனே. யாரோ பார்க்க வந்திருக்காப் போலே இருக்குதே'' என்று எழுந்தாள் டொக்கி.

''உன்னையும் பார்க்கப்படாதா?''

''எனக்கு ஜுரமில்லை, மாமா!''

''ஜுரம் இல்லாவிட்டால் உன்னைப் பார்க்கப்படாதா?''

''இல்லை, மாமா!''

''சீ, அசடு! உட்கார்'' என்று அனந்தசாமி சொன்ன பிறகுதான் எழுந்தவள் உட்கார்ந்தாள்.

மாடிப் படியில் பட்டுப் புடவை மொட மொடத்தது. சந்திரா நிலையிலிருந்து வந்து கொண்டிருந்தாள்..... ரோஜா நிறத்தில் பொட பொட என்று பட்டுப் புடவையும், நெற்றியில் குங்குமமும், ஸ்நானம் செய்து எண்ணெய் போடாமல் வாரிவிட்ட தலையுமாக வந்த அவளைப் பார்த்து டொக்கியின் கண்கள் வியந்ததைக் கண்டார் அனந்தசாமி.

''என்ன மாமா, இது!'' என்று அவருக்கே ஜுரம் வந்து விட்ட புரட்சியை எல்லோரையும் போல் விசாரித்துக் கொண்டே வந்தாள் சந்திரா. டொக்கியையும் பார்த்தாள்.

குருசாமி முன்னால் வந்தான், கையில் ஒரு கூடையுடன்.

''என்னு சாமி?'' என்று அவனும் திகைத்துக் கொண்டே கூடையை மேஜை மீது வைத்தான்.

''வாம்மா, சந்திரா!''

சந்திரா அவர் உடம்பைப் பற்றி விசாரித்தாள். டொக்கியை அடிக்கடி பார்த்தாள். டொக்கியும் சந்திராவின் பின்னல் போடாமல் வெறுமனே முடிந்த கூந்தல் பள பள வென்று மின்னும் பிடரியிலும் மேல் முதுகிலும் தளரத் தளரப் புரள்வதைக் கண்ணெடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடைய நீண்டு திரண்ட கைகால், உயரமும் எடுப்பும் புஷ்டியின் தளதளப்பும் நீண்டு சேர்ந்து கூர்ந்த விரல்கள் எல்லாவற்றையும் பார்த்துப் பிரமித்தாற் போல் உட்கார்ந்திருந்தாள். ஐந்து நிமிஷங்களுக்குள் ஓர் ஆரஞ்சை உரித்து, ஆப்பிள் ஒன்றைத் தேங்காய் சீவித் துண்டம் போட்டு ஒரு காகிதத்தில் வைத்து அவர் முன் வைத்தான் குருசாமி.

''அடேடே.... நான் பார்க்கவே இல்லையே! இதெல்லாம் எதற்கு?'' என்றார் அவர்.

''சாப்பிடுங்க சாமி!''

''எல்லாரும் சாப்பிடலாம்.''

''குருசாமி! நீ போய் விட்டு வந்து விடேன்'' என்றாள் சந்திரா.

''எங்கே?'' என்று கேட்டார்.

''சதுர்த்தி பூஜை செய்கிறாள் அம்மா நாளைக்கு. ஏதோ சாமான் வாங்கி வரச் சொல்லியிருக்கிறாள். நீ போய் வா.''

''சரி'' என்று குருசாமி நகர்ந்தான்.

மறுபடியும் சந்திரா டொக்கியைப் பார்த்தாள். அனந்தசாமி அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தார்.

''இப்ப வெறும் சந்திரா இல்லை, மாமா. ஒரு வாரமாகக் காலேஜுக்குப் போகிறேன். டெமான்ஸ்ட்ரேட்டர் வேலை கிடைத்திருக்கிறது.''

''பலே, பலே! எங்கிட்டே சொல்லவே இல்லையே!''

''அப்பவே சொல்லியிருக்கணும். உங்களை எங்கே என்று கண்டுபிடிக்கிறது? நல்ல வேளை, ஜுரம் வந்ததோ, பார்க்க முடிந்ததோ!''

''எத்தனை நாட்களாச்சு வேலையை ஒப்புக்கொண்டு?''

''ஒரு வாரம் ஆகப் போகிறது.''

''ஹும், வேலை பிடித்திருக்கிறதா?''

''பிடித்திருக்கிறது.''

''ம்.''

பிறகு டொக்கியையும் விவரமாக அறிமுகப்படுத்தினார் அனந்தசாமி. அவள் பாட்டு, ஆட்டம், நடிப்பு, ஆடைகள் எல்லாவற்றையும் விரிவாகச் சொல்லி விட்டார்.





சென்ற அக்டோபர் 30ந் தேதியன்று பெங்களூரில், மைசூர் ராஜ்ய சுதந்திரக் கட்சித் தேர்தல் பிரசாரம் தொடங்கி வைக்கப்பட்டது. அப்போது ராஜாஜியிடம் கட்சிக்காக ஒரு லட்ச ரூபாய் வழங்கப்பட்டது. விழாவில் கலந்துகொண்ட ஸ்ரீமான்கள் வி. பி. மேனன், கே. எம். முன்ஷி, ஆசார்ய ரங்கா, ராஜாஜி, எம். ஆர். மஸானி, ஜினராஜ ஹெக்டே, பெங்களூர் நகரப் பார்லிமெண்டரித் தொகுதியில் போட்டியிடவிருக்கும் வி. எஸ். நடராஜன் ஆகியோரையும், மைசூர் ராஜ்ய சுதந்திரக் கட்சிக் காரியதரிசி ஸ்ரீ வி. டி. ஸ்ரீநிவாஸன் அவர்களிடமிருந்து ராஜாஜி நிதியைப் பெற்றுக் கொள்வதையும் மேலே காணலாம்.

---

டொக்கி தலையைக் குனிந்து உட்கார்ந்திருந்தாள்.

சந்திராவும் அவளை என்னென்னவோ கேட்க ஆரம்பித்தாள். ஊர், படிப்பு எல்லாம் விசாரித்தாள்.

"உன் மாதிரி மாசச் சம்பள ஆள் இல்லை அவன். திடீர்னு லட்சக்கணக்கில் சம்பாதிக்க ஆரம்பித்து விடுவான்" என்றார் அனந்தசாமி.

தலையை நிமிர்த்தி, அடிபட்ட மிருகம் போல் அவரைப் பார்த்தாள் டொக்கி. அவர் சிரித்தார்.

"மாமா, எழுந்து போய் விடு என்று நேராகச் சொல்லுங்களேன். ஏன் இப்படி சுற்றிச் சுற்றிச் சொல்லணும்?"

"வேடிக்கையாகத்தானே சொல்கிறார் மாமா. நாங்கள் பிராணவாயுவையும் கரியமில வாயுவையும், ஆஸிட்டையும் காரத்தையும் கட்டிண்டு அழற ஜன்மங்கள். நல்ல குரலில் பாடுகிறவர்களிடம்தான் லட்சுமி வருவாள் என்று தானே மாமா சொல்கிறார். இதற்கு என்ன கோபம்?" என்று தேற்றினாள் சந்திரா.

அவளைத் துளைத்து விடுவது போல் ஒரு பத்து விநாடி பார்த்தாள் டொக்கி. பின்பு அவள் முகம் சாந்த மடைந்தது. "அதுக்குச் சொல்லல்லே மாமி....." என்று ஆரம்பித்தாள் அவள்.

"ஐய்யய்யோ — நான் மாமியாம். என்னைப் பார்த்தால் அப்படியா இருக்கு?" என்று உரக்கச் சிரித்தாள் சந்திரா. பிறகு "டொக்கி மாமி, போத்து மாதிரி வளர்ந்திருக்கிறேனே என்று பார்க்கிறீர்களா? நானும் போன வருஷம் தான் பாஸ் பண்ணினேன். இதைப் பாரு. இனிமேல் மாமி, நீங்கள் இதை யெல்லாம், சொன்னாயோ உன் மூக்கைக் கடித்துச் சாப்பிட்டு விடுவேன்!" என்று நடு விரலையும், கட்டை விரலையும் சேர்த்து வளைத்து டொக்கியின் மூக்கின் அருகில் நீட்டிப் பயமுறுத்தினாள் சந்திரா. "ஆமாம். வெள்ளரிப் பிஞ்சு மாதிரி இருக்கு பார். இந்த மூக்கைக் கடித்துத் தின்று விடுவேன்" என்று டொக்கியின் முகத்தை மலைப்புடன் பார்த்தாள். "மாமா, சிலை மாதிரி இருக்கா மாமா இந்த டொக்கி. மூக்கு, கன்னம், முக வாய் எல்லாம் பார்த்தீர்களா? பழைய காலத்து முகம் மாமா இது. கையிலே ஒரு தாமரைப் பூவைக் கொடுத்து, புடவையை மடித்துக் கொசுவிக் கட்டி எங்கேயாவது ஒரு கோவிலிலே ஒரு மூலையிலே அசையாமல் நில்லு என்று நிறுத்தி வைத்து விட்டால் போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாம் விழுந்து விழுந்து கும்பிட்டு விட்டுப் போவார்கள்.... இல்லை?.... அப்படியே விக்கிரக மூஞ்சி" என்று சற்றுத் தலையைப் பின் தள்ளி வியந்தாள் சந்திரா.

"ஒரு கோயில் கட்டி வைத்துவிடுவோமா?" என்றார் அனந்தசாமி.

"ஸ்டூடியோவுக்குப் பதிலாகக் கோயிலிலே வைத்தால்தான் பாந்தமாயிருக்கும் இவளை. மறுபடியும் கோபித்துக் கொண்டு விடப் போகிறாள்!" என்றாள் சந்திரா.

"என்னைப் பார்த்தால் அவ்வளவு சிடு மூஞ்சியாகவா இருக்கிறது?" என்று கேட்டாள் டொக்கி. இருவரும் பலமாகச் சிரித்தார்கள். அனந்தசாமி எதையோ நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார். (தொடரும்)



ஜலதோஷமா? இருமலா?
உடனே சிறிதளவு
அமிர்தாஞ்சனம்
தடவுங்கள்
அது விரைவில்
குணமளிக்கும்
AMRUTANJAN
Pain Balm
ஜலதோஷம், ஜுரம், வாயுப் பிடிப்பு போன்ற உபாதைகளிலிருந்து உங்கள் குடும்பத்தை காப்பாற்றுங்கள். ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்க வேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடுநாள் வரை நீடிக்கிறது.
அமிர்தாஞ்சனம் லிமிடெட், மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடெல்லி-1

# மணிபல்லவம்

## நான்காம் பருவம்

## பொற்சுடர்

பொருள்களில் பொன்னுக்கு மட்டும் தனித்தன்மை ஒன்றுண்டு. தன்னுடைய பிரகாசம் பிறரைச் சுடாமல் தனக்குப் பெருமையும் பிறர்க்கு ஒளியும் தருகிற ஒரே திரவியம் தங்கம். தருக்க நூல்களில் பொருள்களுக்கு இலட்சணம் சொல்லும்போது தங்கத்தை நெருப்பு ேறே சொல்லுகிறார்கள். தான் ஒளி மயமாக இருத்தல், தன்னை அணுக முடியாமை, தன்னிடமிருந்து ஒளி பெறுதல், தான் சார்ந்த இடத்தைத் தூயதாக்குதல் – ஆகிய இவை நான்கும் தங்கத்துக்கும், நெருப்புக்கும் ஒத்த குணங்கள். நெருப்பு என்பது சுடுகின்ற பொன், பொன் என்பது சுடாத நெருப்பு. வெதும்பி வாடி இளக இளகத் தம்மொளி வளருதல் என்பது இரண்டுக்கும் பொதுத் தன்மை. சுடுவதும், சுடாமல் இருப்பதும்தான் நெருப்புக்கும் பொன்னுக்குமுள்ள ஒரே வேற்றுமை.





தொட்டால் சுடுகின்றது என்ற ஒரே காரணத்தால் பொன்னைவிடப் பிரகாசமுள்ள நெருப்புக்கு மதிப்பும் விலையும் இல்லை. சுடாதது என்ற ஒரே காரணத்துக்காக நெருப்பினும் குறைந்து குறைந்த பிரகாசமுள்ள பொன்னுக்கு மதிப்பு விலை எல்லாம் உண்டு. பொன்னுக்கும், மணிக்கும் முத்துக்கும், வைர வைடூரியங்களுக்கும் – அவற்றைச் சார்ந்துள்ள பிரகாசத்தின் காரணமாகத்தான் மதிப்பு என்றால் பிரகாசத்தையே மூல வடிவமாகக் கொண்ட அக்கினிக்கு இவற்றை விட அதிகமான மதிப்பு இருக்க வேண்டும். நெருப்பாகிய சுடுகின்ற பொன்னுக்கு விலை இல்லை. பொன்னாகிய சுடாத நெருப்புக்கு விலை உண்டு. நிலம், நீர், தீ, காற்று, வான், காலம், திக்கு, ஆன்மா, மனம் என்று







### நா. பார்த்தசாரதி

உலகத்துப் பொருள்களை ஒன்பது வகையாகப் பிரித்திருக்கிறது தருக்கம். இந்த ஒன்பது வகைகளில் தங்கம் என்னும் ஒளிமிக்க உலோகம் எவ்வகைக்குள் அடங்குமென்று ஆராய்ந்தால் நெருப்பில் அடங்கும்; நெருப்பாய் அடங்கும், நெருப்பினாலே அடங்கும்.

என்றும் தான் ஒளி மயமாக இருத்தல், தன்னை அணுகுவதற்கு அருமை, தன்னிடமிருந்து பிறர் ஒளி பெறுதல், தான் சார்ந்த இடத்தைத் தன்னுடைய சார்பால் தூயதாக்குதல்—ஆகிய பொன்னின் குணங்களோடு தன் கண்களின் நோக்கத்தாலேயே தீமைகளை எரிக்கும் சுடரின் குணத்தையும் சேர்த்துப் பெற்றிருக்கிற காரணத்தினால் இந்தக் கதையின் நாயகனாகிய இளங்குமரனின் நான்காம் பருவத்து வாழ்வைப் பொற்சுடராகவே உருவகம் செய்யலாம் என்று தோன்றுகிறது.

பொன்னுக்கு விலையும் மதிப்பும் எப்போது ஏற்பட்டிருக்கும்? யாரால் ஏற்படுத்தப்பட்டிருக்கும்? பொன்னின் ஒளியில் மதிப்பு வைக்கத் தெரிந்து கொண்ட

ஒரு முதல் மனிதனும் அதைத் தொடர்ந்து அதன் மேல் அதே மதிப்பை வைக்கப் பழகிவிட்ட முடிவற்ற பல மனிதர்களும் பொன்னைப் பற்றி எண்ணி எண்ணிச் சுமந்து விட்ட எண்ணத்தின் கனம்தான் பொன்னின் கனம், பொன்னின் விலை! இவற்றை நீக்கி விட்டுப் பார்த்தால் பொன்னுக்கும் விலை இல்லைதான்.

''அப்படியானால் பொன்னை மதித்து மதித்துப் பொன்னின் ஒளிக்கு அடிமையாகி இருண்டு விட்ட மானிட இனத்தின் கண்களுக்குப் பொன்னை விடப் பிரகாசமான எதுவும் இன்று வரை படவே இல்லையா?''

''இல்லை.''

''பொன்னை விடப் பிரகாசமான ஒரு பொருளிலிருந்துதான் பொன்னே பிறந்தது!''

''அப்படியா? பொன்னுக்கும் முன் மூலமான அந்தப் பொருள் எது என்று தெரிந்தால் அதைப் பொன்னைக் காட்டிலும் அதிகமாக மதிக்கத் தொடங்கி விடலாமே?''

''இனிமேல்தான் தொடங்க வேண்டும் என்பதில்லை! அதை நாம் மதிக்கத் தொடங்கியபோதுதான் நமது மறைகளின் முதற் குரல் திசைகளின் செவிகளில் முதற் கேள்வியாகி ஒலித்தது. அதை நாம் மதிக்கத் தொடங்கிய போதுதான் நமது வேள்விச் சாலைகளில் அது முதல் தெய்வமாய் வளர்ந்து எரிந்து கொழுந்து விட்டது. அதை நாம் மதிக்கத் தொடங்கிய போதுதான் நம்முடைய மதிப்பு உண்மையான ஒளியைப் புரிந்துகொண்டு மதித்துப் போற்றியது.''

''அதற்குப் பெயர்?''

''சுடர்.''

''அந்தச் சுடர் பொன்னின் ஒளியிலும் இருக்கிறது அல்லவா?''

''இருக்கிறது! ஆனால் நெருப்பின் சுடரில் பொன்னிலிருப்பதைக் காட்டிலும் அதிகமான ஒளி இருக்கிறது. இயற்கைப் பொருள்களில் ஒன்றாகிய நெருப்பின் ஓர் ஒளிக் கீற்றுத்தான் தங்கத்திலும் தங்கமாக இருக்கிறது. தங்கமில்லாமலும் உலகில் ஒளி உண்டு. உலகில் ஒளி இல்லாவிட்டால் தங்கமே இல்லை. ஒளி இன்றேல் தங்கத்தை இப்போது புரிந்து கொண்டிருக்கிறாற்போலத் தங்கமாக மதித்துப் புரிந்து கொண்டிருக்கவே முடியாது.''

''தங்கத்திலிருந்து சுடரை மட்டும் பிரித்து விட்டால்.....?''

''சுடரிழந்த தங்கம் அப்படி அதை இழந்துவிட்ட காரணத்தால் மண்ணாயிருக்கும்.''

''அதாவது மண்ணில் சுடர் கலவாது தங்கம் இல்லை! தங்கம் கலவாத சுடர் உண்டு.''

''தங்கம் மண்ணாயிருந்தால் அதைத் தங்கமாக மதிக்கக் காரணமாயிருக்கும் ஒளியை அதில் காண முடியாது. மண் கலவாத தனி ஒளியாயிருந்தால் அதுவே சுடும்! தங்கம் ஒளியாயிருக்கிறது; சுடவும் இல்லை. அதனால்தான் சுடுகின்ற ஒளியைக் காட்டிலும் தங்கமாகிய சுடாத ஒளிக்கு அதிக மதிப்பு.''

இந்தக் கதையின் தலைவனும், இரு நாங்கூரடிகள் உருவாக்கிய காவிய நாயகனுமாகிய இளங்குமரன் ஞானப் பசி தீர்ந்தும் தீர்த்தும் வெற்றிக்கொடி நாட்டியபின் மணிபல்லவத்துக்குப் புறப்படுகிற சமயத்தில் பொன்னாகவும் இருந்தான், சுடராகவும் இருந்தான். முழுமையான பொற்சுடராகவே இருந்தான்.

தான் ஒளி மயமாக இருத்தல், தன்னை அணுகுவதற்கு அருமை, தன்னிடமிருந்து பிறர் ஒளி பெறுதல், தான் சார்ந்த இடத்தைத் தன்னுடைய சார்பால் தூயதாக்குதல் ஆகிய பொன்னின் குணங்களைப் பெற்றுத் தானே பொன்னாகி ஒளிரும் ஒருவன் வேறு பொன்னின் மேல் ஆசைப்பட என்ன இருக்கிறது? ஒன்றுமில்லைதான்! அவன் எல்லா ஆசைகளையும் உதிர்த்து விட்டு நின்றபோது எல்லாருடைய ஆசைகளும் அவனைச் சூழ்ந்தன. இளங்குமரன் என்ற அந்தப் பொற் சுடருக்காக முல்லை ஏங்கினாள். சுரமஞ்சரி தவித்தாள். — தன்னுடைய பெரு மாளிகை நிறையக் குவிந்திருந்த அவ்வளவு பொன்னிலும் காணாத சுடரை இளங்குமரனுடைய கண்களில் கண்டு தவித்துக் கொண்டிருந்தாள் அந்தப் பட்டினப் பாக்கத்துப் பெண்.

தான் சார்ந்த இடங்களை ஒளியுறச் செய்யும் பொன்னைப் போல் அவர்கள் இருவருடைய ஆசையிலும் தான் இருந்து — தன்னுடைய ஆசையில் அவர்கள் இருவரும் இல்லாமல் — அவர்களுக்கு ஒளி தந்து கொண்டிருந்தான் இளங்குமரன்.

யாரை அல்லது எதை ஆசைப்படுகிறோமோ அவர் அல்லது அது பரிசுத்தமாக இருந்தால் அந்த ஆசை விளைந்து வளர இடமாக இருப்பதன் காரணமாகவே அவை நிகழ்கின்ற மனத்துக்கும் முகத்துக்கும் அழகும் ஒளியும் உண்டாகும்! தெய்வத்தை ஆசைப்படுகிற பக்தனின் முகம், குழந்தையை ஆசைப்படுகிற தாயின் முகம், மெய்யான மாணவனை ஆசைப்படுகிற குருவின் முகம், இவைகளுக்கு வரும் அழகைப்

போல் இளங்குமரனை ஆசைப்பட்டு ஆசைப்பட்டு அவனுடைய ஒளியையும் தங்களுடைய ஒளியையும் சேர்த்தே வளர்த்துக் கொண்டிருந்தார்கள் இவர்கள்.

உலகத்தில் பொன்னுக்குப் பொன்னாசை இல்லை. இளங்குமரனும் அப்படிப் பொற்சுடராக இருந்தான். தன்னுடைய மிகுந்த ஒளியினால் பிறருடைய ஆசைகளையும் தன்னையறியாமலே எரித்துச் சுத்தமாக்கிக் கொண்டிருந்தான் அவன். பூம்புகார்த் துறைமுகத்திலிருந்து கப்பல் நகர்ந்தபோது தன்னையறியாமலே தான் முல்லையை மனம் வெதும்பச் செய்திருப்பதை உணர்ந்த சில கணங்களில் மட்டும் சுடுகின்ற நெருப்பாகவும் தான் இருந்து விட்டது போல் தோன்றியது இளங்குமரனுக்கு. அதற்காகத் தனக்குள் வருந்தினான் அவன்.

'வாழ்க்கையில் பிறரோடு பழகும் போது கோடைக்காலத்து வெயில்போல் பழகினாலும் துன்பம். குளிர் காலத்துச் சுனை நீர் போலப் பழகினாலும் துன்பம். கோடைக் காலத்தில் குளிர்ந்த நீர் போலவும், குளிர் காலத்தில் நல்ல வெயில் போலவும் பொருந்திச் சூழ்ந்துள்ளவர்கள் மனம் வெதும்பாமலும்—ஒருகால் தன் மனத்தைச் சூழ்ந்துள்ளவர்கள் வெதும்பச் செய்து விட்டால் அதைத் தாங்கிக் கொண்டு மறந்தும்—வாழத் திட்டமிட்டுக் கொள்ள வேண்டும்...'' என்று பொது வாழ்வுக்கு வேண்டிய ஒப்புரவு பற்றித் திருநாங்கூர் அடிகள் பல முறை கூறியிருந்த பழைய அறவுரையை எண்ணிக் கொண்டான் இளங்குமரன்.

முரடனாயிருந்து ஒளியற்றவனாகத் தோன்றினால் பிறர் வெறுப்பையும் — தூய்மையோடு பொற்சுடரா யிருந்து ஒளி பரப்பினால்—பிறருடைய ஆசைகளையும், மோகங்களையும் எதிர்பார்த்து விலக்கிச் சுடாத நெருப்பாகவும் சுடுகின்ற நெருப்பாகவும் மாறி மாறி வாழ நேரும் விந்தையை எண்ணியபடியே கப்பலின் மேல்தளத்திலிருந்து வானத்தைப் பார்த்தான் இளங்குமரன். அவனுடைய முகத்திலும், தோளிலும், மார்பிலும் காலை வெயில் பட்டது. அவை தங்கங்களாகிய அங்கங்களாய் மின்னிப் பொற்சுடர் பரப்பின. உலகப் பொருள்கள் யாவற்றுக்கும் ஒளி தரும் கதிரவனை வணங்கினான் ஒளிச் செல்வனாகிய இளங்குமரன்.

# 1. அன்பு என்னும் அமுதம்

கடலில் தென் திசை நோக்கி விரைந்து கொண்டிருந்த அதே கப்பலில் இளங்குமரன் நின்று கொண்டிருந்த அதே மேல் தளத்தில் பாய்மரத்தின் மறு பக்கமாக ஓவியன் மணிமார்பனும், அவன் மனைவியும் நின்று கொண்டிருந்தார்கள். இளங்குமரன் சிந்தனையில் ஆழ்ந்த மனத்தினனாக அமைதியாய் நின்று கொண்டிருந்ததனால் அவன் அங்கு இருப்பதையே மறந்து கீழே இறங்கிப் போய் விட்டதாக எண்ணிக் கொண்டு மணிமார்பனின் மனைவி தன் மனத்தில் இருந்த சில கருத்துக்களைக் கணவனிடம் பேசத் தொடங்கினாள்.

''என்ன இருந்தாலும் உங்கள் நண்பருக்கு இந்தக் கல் மனம் ஆகாது. துறைமுகத்திலிருந்து புறப்பட்டுக் கப்பலில் ஏறிக் கொள்ளும்போது அவர் வேண்டுமென்றே அந்தப் பெண்ணைப் புறக்கணித்ததை நான் கவனித்தேன். அவர் விரும்பி யிருந்தால் 'போய் வருகிறேன் முல்லை!' என்று அந்தப் பெண்ணிடமும் இரண்டு வார்த்தைகள் பேசியிருக்கலாமே?''

''பெண்ணே! முதலில் நீ இளங்குமரனை என்னுடைய நண்பர் என்று சொல்வதை இந்தக் கணமே மாற்றிக் கொள்ள வேண்டும். நான் அவரை என்னுடைய நண்பராக நினைத்துக் கொண்டிருந்த காலமும் உண்டு. இப்போது அப்படி நினைப்பதற்கே பயமா யிருக்கிறது எனக்கு. சிலவற்றிற்குக் குருவாகவும், இன்னும் சிலவற்றுக்குத் தெய்வமாகவும் இப்போது அந்த மனிதரை நான் பாவிக்கிறேன். அவரிடம் குற்றம் இருப்பதாக நினைப்பதற்கே நான் பயப்படுகிறேன். நீயோ குற்றம் இருப்பதாக வாய் திறந்து சொல்வதற்கே துணிகிறாய்! வீர சோழிய வளநாடுடையார் மகள் முல்லையிடம் அவர் பேசாமலே வந்ததற்கு நீயாகவே விளைவு கற்பிக்கிறாய்! எல்லாவற்றிலுமே குணம்தான் நிரம்பியிருக்கிறதென்று முற்றிலும் குணமாகவே பாவிப்பது எப்படிக் கெடுதலோ, அப்படியே முற்றிலும் குற்றமாகவே பாவிப்பதும் கெடுதல். அவர் அந்தப் பெண்ணிடம் பேசாமலிருந்தது குற்றமென்று நீ எப்படிச் சொல்ல முடியும்? மௌனத்துக்குப் பொருள் விரோதமென்று கொண்டால், நான் உன்னிடம் பேசாமல் இருந்த சமயங்களில் எல்லாம் கூட உன்னோடு விரோதமா யிருந்திருக்கிறேன் என்று நீ நினைக்கலாம்.''

கார் மூலம்
இந்தியாவைக்காண

**CALTEX**

அமிருதசரஸிலுள்ள பொன் ஆலயமும்,
அமரத்துவப் பொய்கையும் சீக்கியர்களுக்கு
மிகவும் புனிதமானவை. டில்லியிலிருந்து
278 மைல் பயணத்திலுள்ளது அமிருதசரஸ்.
இந்நகரத்தை ராம்தாஸ் நிறுவினர்;
குரு அர்ஜுன் தேவ் ஆலயம் எழுப்பினர்;
ரஞ்சித் ஸிங் அதற்குத் தங்கத் தகடுகள்
வேய்ந்தார். அதன் சுவர்கள் சலவைக் கல்
இழைத்தவை. அதனுடைய குவிந்த
விதானத்தின் அடியில்தான் சீக்கியர்களின்
புனித நூலாகிய 'கிரந்த சாகிப்' உள்ளது.
'குரு-கா-பாக்' என்ற பகுதியில் சீக்கிய
மத ஸ்தாபகரான குரு நானக்கின் வரலாற்று
நிகழ்ச்சிகள் சுவரோவியங்களாகத்
திகழ்கின்றன.



எல்லாப் பெரிய நகரங்களிலுள்ள கால்டெக்ஸ் சர்வீஸ் ஸ்டேஷன்களிலிருந்தும்
இக்காட்சியின் வண்ணப் பிரதிகளைக் கோரிப் பெறலாம்.

CALTEX

கார்மூலம் இந்தியாவைக் காண்பதற்கு
நீங்கள் எங்கிருந்து புறப்பட்டாலும் சரி,
கார் தொந்திரவுகளின்றி பயணம்
மகிழ்வாகவும் உல்லாசமாகவும் இருக்க
கால்டெக்ஸ் லூப்ரிகண்ட்களையும்,
பெட்ரோலையும் தேர்ந்தெடுங்கள்

*Caltex (India) Limited*

''நான் அப்படி நினைத்தால் அதில் தவறென்ன? கலகலப்பாகச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தவர் மௌனமாகி விட்டால் அந்த மௌனத்துக்குக் காரணம் இல்லாமற் போகாது. பேச்சுக்குக் காரணமும், அர்த்தமும் இருப்பது போல் பேசாமைக்கும் காரணம் அர்த்தம், எல்லாம் இருந்தே ஆக வேண்டும்.''

''பேச்சுக்கும், பேசாமைக்கும், ஆகிய இரண்டுக்குமே அர்த்தம் இல்லை என்று அவரே சற்று முன் வளநாடுடையாரிடம் கூறியதைக் கேட்கவில்லையா நீ? மௌனத்துக்கு ஒரே அர்த்தம் மௌனமாயிருப்பது என்பதுதான்....''

''அந்தப் பெண் அவருடைய மௌனத்தை அப்படி எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லையே? கப்பல் புறப்படுவதற்கு முன் நான் அவளிடம் விடை பெறுவதற்குச் சென்றேன். அப்போது அவள் எனக்கு விடை கொடுப்பதில் அசிரத்தையும், அவர் தன்னிடம் விடைபெறுவதற்கு வரமாட்டாரா என்று கவனிப்பதில் சிரத்தையும் காண்பித்தபடி நின்றிருந்தாள். அவளுடைய கண்களிலும் முகத்திலும் நம்பிக்கை அழிந்து — அது அழிந்த இடத்தில் ஏமாற்றம் குடிகொள்ளத் தொடங்கி யிருந்தது.''

''அப்படியா? நீ சொல்வதைக் கேட்டால் முல்லை அப்போது நின்ற நிலை சித்திரத்துக்கு நல்ல காட்சியாக அமைந்திருக்கும் போல் தோன்றுகிறதே. ஒருணர்வு அழிந்து இன்னோர் உணர்வு பிறக்கின்ற காலத்து முக பாவத்தை அப்படியே சித்திரிக்க முடிந்தால் அது ஓவியத் துறையில் ஈடுபட்டிருப்பவனுக்கு மாபெரும் வெற்றி பெண்ணே! இருள் அழிந்து ஒளி பிறக்கிற நேரத்தையும், ஒளி அழிந்து இருள் பிறக்கிற நேரத்தையும் இயற்கை வரைந்து காட்டுகிறாற் போல் முழுமையாய் வரைந்து காட்டுகிற ஓவியனோ, கவிஞனோ, உலகத்தில் இதுவரை ஏற்படவில்லை!''

''இந்தக் கலைஞர்களே இப்படித்தான். பிறருடைய துக்கத்திலிருந்து தேடித் தங்கள் கலையைப் பிறப்பிக்கிறார்கள். 'அவர் தன்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லிக் கொள்ளாமல் புறக்கணித்தது போலப் போகிறாரே' என்று அந்தப் பெண் முல்லை துயரக் கோலத்தில் நின்றாள் என்று சொன்னால் அந்தக் கோலம் சித்திரத்துக்கு நன்றாக இருக்குமே என்று வாய் கூசாமல் நீங்கள் பதில் சொல்லுகிறீர்களே? இப்போது நீங்கள் கூறியதை அந்தப் பெண்ணின் தந்தை கேட்டால் எவ்வளவுவருத்தப்படுவார்?''

''பெண்ணே! இப்படி நினைப்பதாயிருந்தால் நீ என்னைப் போல் ஒரு கலைஞனுக்கு மனைவியாக வாய்த்திருக்கக் கூடாது. ஒவ்வொரு கலைஞனுடைய மனமும் பேசாத யாழ். பிறருடைய துன்பங்களாகிய இளைத்த கைகளின் மெலிந்த விரல்கள் அந்த யாழை வருடும் போதுதான் அது பேசுகிறது. அதில் கலைப் பண்கள் பிறக்கின்றன. திருமாலும், திருமகளும், இராமனும், சீதையுமாக மண்ணில் பிறந்து மனிதர்களாக வாழ்ந்து மனிதர்களின் துன்பத்தை மனிதர்களுக்கே உரிய குறைந்த பலத்தோடு தாங்கியிரா விட்டால் எந்தக் கவியின் கையாவது இராமாயணம் எழுதத் துடித்திருக்குமா பெண்ணே?''

''சிறிது காலமாக உங்கள் நண்பரோடு இருந்து அவர் பேசிய பேச்சுக்களையும், புரிந்த சமய வாதங்களையும் கேட்டாலும் கேட்டீர்கள்; — இப்போது நீங்களே அவரைப் போலப் பேசத் தொடங்கி விட்டீர்கள்.''

''என் செய்வது? கண்ணாடி எல்லா உருவத்தையும் தனக்குள் வாங்கிக் காட்டுகிறாற் போலப் பரிசுத்தமானவர்கள் தங்களோடு பழகுகிறவர்களையெல்லாம் சார்ந்ததன் வண்ணமாகச் செய்து விடுகிறார்கள்!''

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் தலை குனிந்தாள் மணிமார்பனின் மனைவி.

''பதுமை! இதோ இப்படி என்னைப் பார்! உனக்கு ஒரு பெரிய உண்மையைச் சொல்லித் தருகிறேன்''— என்று தன் மனைவியை அவளுடைய அழகிய பெயரைச் சொல்லி அழைத்தான் மணிமார்பன். பிடரியில் வேர்க்கும்போது எங்கிருந்தோ தற்செயலாகக் குளிர்ச்சியை வீசிக் கொண்டு சில்லென்று பாய்ந்து வந்த தென்றலைப் போல அவன் தன்னைப் பெயர் சொல்லி அழைத்த மகிழ்ச்சியில் குழைந்து நிமிர்ந்து பார்த்தாள் பதுமை. ஓவியன் மணிமார்பன் சிரித்துக் கொண்டே அவளை நோக்கிச் சொன்னான்: —

''பதுமை! நீங்கள் பெண்கள். எந்த விஷயத்தையும் ஒரு குறிப்பிட்ட எல்லை வரை தான் உங்களால் நினைத்துப் பார்க்க முடியும். அதற்கு அப்பால் நினைக்க முடியாது. அல்லது நினைக்க விரும்ப மாட்டீர்கள். எல்லாப் பூக்களுக்கும் மென்மை என்பது பொதுக் குணமாகி நிற்பது போல் பெண்களாகிய நீங்கள் அன்பை மட்டும் மையமாக வைத்துக் கொண்டே யாவற்றையும் சிந்திக்கிறீர்கள். ஒற்றைத் தூணில் நிற்கிற மண்டபத்துக்குப் பலம் குறைவு; தூணுக்கும் சுமை அதிகம்....''

''எப்படியோ பேச்சைத் தொடங்கி எப்படியோ வளர்த்து முடிவில் பெண்களெல்லாம் உணர்ச்சி யில்லாத ஜடத்துக்கற்கள் என்று முடிக்கிறீர்களே; இது உங்களுக்கே நன்றா யிருக்கிறதா?''

''அவசரப் படாதே பதுமை! நான் சொல்ல வந்தது வேறு. நீ புரிந்து கொண்டது வேறு. கோபமோ, தாபமோ, ஊடலோ, உவகையோ, எல்லா உணர்ச்சிகளையும் அன்பு என்ற ஒரே அடிப்படையில் தான் அடைகிறீர்கள் பெண்களாகிய நீங்கள். எல்லா விளைவுகளுக்கும் ஒரே காரணத்தைத் தவிர வேறு மாற்றமில்லாத வாழ்வு விரைவில் சலித்துப் போய்விடும் என்பார்கள். ஆனால் உலகத்துப் பெண் குலத்துக்கு அந்த அன்பு என்ற ஒரே காரணம் இந்த யுகம் வரை சிறிதும் சலித்ததாக எனக்குத் தெரியவில்லை. நேர் மாறாக அந்த ஒரே காரணத்தில் இன்னும் உறுதியாகக் காலூன்றிக் கொண்டு தான் நிற்க முயல்கிறீர்கள் நீங்கள். பல விளைவுகளுக்குக் காரணமாயிருக்கிற ஒரு காரணம் பல காரணங்களுக்கும் விளைவாயிருப்பது நியாயந்தான். வீரசோழிய வளநாடுடையார் மகள் முல்லை 'இளங்குமரன் தன்னிடம் சொல்லி விடைபெற வேண்டும்' என்று எதிர்பார்த்ததுக்கும் அவளுடைய அன்புதான் காரணம். அவர் அப்படிச் சொல்லி விடை பெறாத போது அவளுடைய முகத்தில் நம்பிக்கை அழிந்து ஏமாற்றம் பிறந்ததற்கும் அந்த அன்புதான் காரணம். மண்ணுலகத்தில் உயிரை வளர்க்கும் அமுதம் இல்லை என்கிறார்கள் விவரம் தெரியாதவர்கள். மண்ணுலகத்தில்தான் மெய்யான அமுதம் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது பதுமை! இந்த உலகத்தில் அன்புதான் அமுதம் என்று வைத்துக் கொள்ளலாம். அந்த அமுதத்தை வைத்துக் கொண்டே உயிர் உறவுகளை நீண்ட காலத்துக்கு அழியாமல் வளர்த்துக் கொண்டு போகலாம்.''

''ஆனால் சலிப்பு ஏற்படாத அந்தக் காரியத்தைப் பெண்களாகிய நாங்கள் தான் செய்ய முடியும் என்றும் ஒப்புக் கொள்கிறீர்கள் அல்லவா? குணங்கள் எல்லாம் தாய்மையிலிருந்து பிறக்கின்றன என்று நீங்கள் ஒப்புக் கொள்வீர்களோ? உங்கள் கலைக்குத் தொடர்புடைய உதாரணத்தையே சொல்லுகிறேன். நிறங்கள் நிறமில்லாமையிலிருந்து பிறக்கின்றன. ஏழு நிறங்களிலும் அடங்காதது என்ன நிறம்?''

''சூன்ய நிறம் என்று வைத்துக் கொள்ளேன்.''

''சூன்ய நிறம் என்று நீங்கள் சொல்கிற அந்த நிறமின்மையிலிருந்து எல்லா நிறங்களும் விளைக்க முடியுமானால் எங்கள் அன்பு என்ற ஒரே காரணத்திலிருந்து எல்லா அன்புகளும் ஏன் விளைய முடியாது?''

''விளைய முடியும் என்று நான் ஒப்புக் கொள்கிறேன் பதுமை! என் நிலை வேறு. இளங்குமரனுடைய நிலை வேறு. நான் அன்பை எதிர்பார்க்கிறவன். அன்பு செலுத்துகிறவன். அவர் தம் அன்பைப் பலர் எதிர்பார்த்து ஏங்கும்படி செய்கிறவர். அருளாளர். அன்பு செய்கிறவனுக்கும் அருள் செய்கிறவனுக்கும் வேற்றுமை உண்டு. குணங்களிலே அன்பு தான் தாய்க்குணம். அருட்குணம் அன்பிலிருந்து தோன்றிய குழந்தை. தொடர்புடையவர்கள் மேல் மட்டும் நெகிழ்கிற உறவுதான் அன்பு. தொடர்பு தொடர்பின்மை, எதையும் கருதாது எல்லா உயிர்கள் மேலும் செல்கிற பரந்த இரக்கம்தான் அருள். பரந்த எல்லையில் நின்று பார்க்கிறவரைக் குறுகிய எல்லைக்குக் கொண்டு வர முயல்வது நல்லது தானா என்று நினைத்துப் பார்! முல்லை இளங்குமரனுடைய அன்பைத் தன்னுடைய எல்லைக்குக்கொண்டு வந்து விட முயல்கிறாள். அதே முயற்சியைச் சுரமஞ்சரியும் செய்கிறாள். பரந்த அருளாளராக உயர்ந்து விட்டவரைத் தங்களுடைய அன்பின் குறுகிய எல்லைக்குள் சிறை செய்துவிட முயல்கிற இவர்கள் இருவரில் யாருக்கு வெற்றி கிடைக்குமென்றும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை பதுமை!''

''சுரமஞ்சரி என்பது யார்? உங்களுக்கு மணிமாலை பரிசளித்ததாகச் சொல்வீர்களே; அந்தப் பெண்ணா?''

''அவளேதான்! அவளால் தான் இளங்குமரன் என்னும் இந்த அற்புத மனிதரை நான் என்னுடைய வாழ்க்கை வீதியில் சந்திக்க நேர்ந்தது. இந்திர விழாக் கூட்டத்தில் தூரிகையும் கையுமாகத் திரிந்து கொண்டிருந்த என்னைக் கூப்பிட்டு நாளங்காடியில் அவருடைய ஓவியத்தை வரைந்து தரச் சொல்லிக் கேட்டது அவள் தான். அவருடைய அழகிய சித்திரத்தை என்னுடைய, கைகளால் வரையத் தொடங்கிய நாளிலிருந்தே அவருடைய குணசித்திரத்தை என்னுடைய மனம் வரைந்து கொள்ளத் தொடங்கி விட்டது. செல்வத்தையும் சுக போக ஆடம்பரங்களையும் காட்டி அவற்றால் அவரைக் கவர முடியாது. செல்வத்தின் மதிப்பு மிகுதியானால் அதைப் புறக்கணிக்கிற மனத்தின் மதிப்பு அதைவிட அதிகமென்று நினைக்கிறவர்

அவர். மதிப்பு நிறைந்த பொருளைக் கூட மதிக்காமல் நிமிர்ந்து நிற்கிறவனுடைய சொந்த மதிப்பை எப்படி அளக்க முடியும்? பதுமை! அவருடைய மதிப்பை அளக்க முடியாமல் தான் அந்தப் பட்டினப்பாக்கத்துப் பெண் அவருக்கு மனம் தோற்றாள். பிறருடைய தோல்வியை ஒப்புக் கொண்டு தான் பெருமிதம் அடைகிறவன் வீரன். அவரோ 'சுரமஞ்சரி' தனக்குத் தோற்று விட்டாள் என்பதை ஒப்பி அவளுடைய தோல்வியைத் தம்முடைய வெற்றியாகக் கூடக் கொண்டாடாமல் அலட்சியம் செய்கிறார். 'தன் தோல்வியை —தன் மனத்தின் நெகிழ்ச்சியை அவர் அங்கீகாரம் செய்து கொள்ள வேண்டும்' —என்பதுதான் இப்போது சுரமஞ்சரியின் தவிப்பு. அவரோ நாளங்காடியில் பலப்பல அறிஞர்களின் தோல்வியை ஒப்புக் கொள்கிறார். பிறருடைய அறிவின் தோல்வியை ஒப்புக் கொள்கிறவர் பிறருடைய அன்பின் தோல்வியை ஒப்புக் கொள்ளத் தயங்குகிறார், பதுமை!'' —

''விசித்திரமான உண்மையாயிருக்கிறதே?''

''உண்மை விசித்திரமானதாயில்லை! விசித்திரம்தான்உண்மையாயிருக்கிறது'' என்று மூன்றாவது குரல் ஒன்று ஒலித்ததைக் கேட்டவுடன் மணிமார்பனும் அவன் மனைவி பதுமையும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள். பாய்மரத்தின் மறுபுறத்திலிருந்து சிரித்தபடியே இளங்குமரன் அவர்களுக்கு முன்னால் தோன்றினான்.

—அவர் அங்கே இல்லை என்று நினைத்துக்கொண்டு தான் பேசியவற்றையெல்லாம் அவரும் கேட்டிருக்கிறார் என்று தனக்கே புரிந்து விட்ட அந்த விநாடியில் மணிமார்பனுடைய மனைவி சொல்லி லடங்காத அளவு நாணமும், கூச்சமும் அடைந்தாள். அவளுடைய கண்கள் இளங்குமரனை நேருக்கு நேர் எதிரே பார்ப்பதற்குக் கூசின. மலையுச்சியைக் கடந்து மேலே பறந்து விடலாம் என்று முயன்ற சிட்டுக் குருவி அந்த மலையுச்சியின் உயரம் மேலும் மேலும் உயர்ந்து கொண்டு போவதைக் கண்டு அயர்ந்தாற் போலிருந்தது பதுமையின் நிலை.

''சகோதரி! உங்கள் பேருக்கு ஏற்றாற்போல நீங்கள் பேசாமலே இருக்கிறீர்களே என்று நேற்று வரை சிந்தித்துக் கொண்டிருந்தேன். இன்று வட்டியும், முதலுமாகச் சேர்த்து உங்கள் கணவரிடம் பேசித் தீர்த்து விட்டீர்கள்'' என்று இளங்குமரன் முதன்முதலாக மணிமார்பனுடைய மனைவியை நோக்கிப் பேசினான். அவள் பதில் சொல்லவில்லை. அந்தக் குரலின் ஒலியில் பயந்து தயங்கி நின்றாள்.

''பேர்தான் பதுமை! இந்தச் சொல்லரசியின் வார்த்தைகளுக்கு இவள் கணவனாகிய நானேஅவ்வப்போது பதில் கூறத் திணறிப் போகிறேன் ஐயா'' என்று மணிமார்பன் தான் சிரித்தவாறே இளங்குமரனுக்குப் பதில் கூறினான். இதைக் கேட்டு இளங்குமரன் புன்னகைபுரிந்தான்.

''நான்...ஏதாவது....தப்பாகப் பேசியிருந்தால்.. பொறுத்தருளி என்னைமன்னிக்க வேண்டும்.....'' என்று தயங்கித் தயங்கி ஒவ்வொரு வார்த்தையாகக் குவிந்த தலை நிமிராமலே சொன்னாள் பதுமை.

''தப்பாகப் பேசியிருப்போமோ என்று இப்போது நீங்





தன் நினைத்துப் பயப்படுவது தான் பெரிய தப்பு. சகோதரி! உங்களுடைய சில கேள்விகளுக்கு உங்கள் கணவரே பதில் கூறத் தினைறியதையும் நான் கவனித்தேன். நான் முல்லையிடம் கப்பலேறு முன்பு சொல்லி விடைபெற்றுக் கொள்ளாதது மூன்று பேருடைய மனங்களைத் துன்புறுத்தியிருக்கிறதென்று எனக்கே இப்போது தெரிகிறது. முல்லை துன்புற்றதைத்தவிர நீங்கள் வேறு இதற்காக மனம் வருந்தியிருக்கிறீர்கள் போலும். முல்லையின் தந்தையும் மனம் வருந்தியிருக்கிறார். அருளாளன் அன்பில்லாதவனுகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. அருளாளனுடைய அன்புக்குக் காரணமும், விளைவும், தனியாக இல்லை என்பதுதான் முக்கியம். நான் சொல்லி விடைபெற்றுக் கொள்ளாததை எண்ணி முல்லை வருந்தியிருப்பாளானால் அதுவும் அறியாமைதான்''—என்று இளங்குமரன் கூறிக் கொண்டே வந்த போது பதுமையிடமிருந்து நடுவே சில சொற்கள் ஒலித்தன.

''அன்பைத் தவிர வேறெதையும் அறியாமல் இருப்பதனால்தான் பெண்களுக்கு அறியாமையையும் ஒரு குணமாகச் சொல்லி விட்டார்கள். மற்றவற்றை அறியாமலிருப்பது என்ற பேதைமையைப் போர்வையாகப் போர்த்தி எங்கள் அன்பாகிய அறிவை நாங்கள் காப்பாற்றிக் கொள்கிறோம்.''

''ஏதேது? நீ இவருக்கே தத்துவம் சொல்லிக் கொடுப்பாய் போலிருக்கிறதே, பதுமை?'' - என்று தன் மனைவியைக் கடிந்து கொள்வதுபோலக் குறுக்கிட்டான் மணிமார்பன்.

''உலகத்தில் எந்தத் தத்துவத்தையும் யாரும் முடித்து வைத்து விட்டுப்

போய் விடவில்லை மணிமார்பா! உன்னுடைய மனைவியின் பேச்சிலிருந்து நான் புதிதாக ஏதாவது தெரிந்து கொள்ள முடியுமானால் அதுவும் நான் அவசியமாகக் கற்றுக் கொள்ள வேண்டிய தத்துவம்தான். என்னையறியாமலே நான் பிறரைப் புண்படுத்தி விடுகிற சந்தர்ப்பங்கள் நேரிடாமல் எனது சான்றாண்மையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்று தான் நானும் ஆசைப் படுகிறேன். பிறர் கவனத்தை அவசியமின்றிக் கவர்ந்து நம் புறமாகத் திருப்ப வேண்டாமென்று நாம் மௌனமாயிருந்து விடுவதே சில சமயங்களில் பிறரைத் துன்புறுத்தி விடுகிறது. அதற்கென்ன செய்யலாம்?'' —என்று இளங்குமரன் பேசிக் கொண்டிருந்தபோது ஏதோ காரியமாகக் கப்பலின் கீழ்த் தட்டுக்குப் போயிருந்த வளநாடுடையார் மரப்படிகளில் பலத்த ஓசையெழுப்பிக் கொண்டு மேலே ஏறி அதிர நடந்து வந்தார்.

அவர் மேலே வந்த விதமும் அவர் கண்ணைப் பார்த்த பார்வையும் அவசரத்தையும், பரபரப்பையும் மூட்டுவனவாயிருந்தன.

''அதோ பின்னால் நம்மைத் துரத்திக் கொண்டு வருவது போல் தொடர்ந்து வரும் அந்தப் படகைப் பார்த்தாயா, தம்பீ? முதலில் யாரோ எங்கோ படகுப் பயணம் செய்கிறார்கள் என்றெண்ணி நானே அசிரத்தையாகத்தான் இருந்தேன். அந்தப் படகில் இருப்பவர்களில் ஒருவர் அடிக்கடி ஊன்றுகோலை நம்முடைய இந்தக் கப்பல் செல்லும் திசையில் நீட்டி மற்றவர்களிடம் ஏதோ சொல்வதையும் அவர்கள் அதைக் கேட்டுப் படகின் வேகத்தை மிகுதிப் படுத்துவதையும் அந்தப் படகு நம்மை நெருங்குவதையும் கூர்ந்து கவனித்த பின்புதான் எனக்கே சந்தேகம் ஏற்பட்டது'' என்று சொல்லிக்கொண்டே கரைப் பக்கமாகக் கையைக் காட்டினார் வளநாடுடையார். மணிமார்பனும், இளங்குமரனும் அவர் காட்டிய திசையில் விரைந்து திரும்பிப் பார்த்தார்கள். உண்மைதான்! பின்னால் வந்து கொண்டிருந்த படகு துரத்துவதைப் போலத்தான் நெருங்கிப் பாய்ந்து வந்து கொண்டிருந்தது.

''நீ கீழே போய் விடு அம்மா!'' என்று வளநாடுடையார் மணிமார்பனுடைய மனைவி பதுமையைத் துரிதப் படுத்திக் கீழே அனுப்பி விட்டுக் கணத்துக்குக் கணம் நெருங்கும் படகைக் கவனிக்கலானார். படகு அதன் உள்ளே அமர்ந்திருக்கிறவர்களின் முகம் நன்றுகத் தெரிகிற அளவு நெருங்கி விட்டது. மணிமார்பனுடைய பார்வை விரைந்து சென்று அந்தப் படகில் சந்தித்த முதல் முகத்தில் ஒரே கண்தான் இருந்தது. பார்த்த அவசரத்திலும், பார்க்கப் பட்ட முகம் உண்டாக்கிய பரபரப்பிலும் ஒரு கண் இருந்தது தெரிந்ததா? அல்லது ஒரு கண் இல்லாதது தெரிந்ததா என்று உணர முடியவில்லை. ஏற்கெனவே பழகிய அந்த முகத்தின் பயங்கரம் தெரிந்தது. ஒரே கண் மட்டும் இருந்ததனாலோ அல்லது ஒரு கண் இல்லாமையினாலோ படகிலிருந்தவர்களின் தோற்றத்தில் பளீரென்று பார்வையில் பதிந்த முகம் நகைவேழம்பருடையதாகத்தான் இருந்தது. அவரை இளங்குமரனும் பார்த்தான்.

''ஐயா! இவன் நல்ல எண்ணத்தோடு வரவில்லை...இந்தப் பாவி பின் தொடர்வதில் ஏதோ சூழ்ச்சி யிருக்கிறது....'' என்று பயத்தில் சொற்களைக் குழறினான் மணிமார்பன். தன்னுடைய வாழ்வின் எங்கோ ஒரு மூலையில் பழைய நாட்கள் சிலவற்றில் அந்த ஒற்றைக் கண் கொலைகாரனிடம் அகப்பட்டுக் கொண்டு தான் பட்ட வேதனைகள் இந்த விநாடியில் மணிமார்பனுக்கு நினைவு வந்து விட்டன போலும்.

''பயப்படாதே! படகில் வருகிறவன் எமனாக இருந்தாலும் அவன் உயிருக்குத்தான் ஆபத்து. நாம் மூன்று பேர் — கப்பல் ஊழியர்கள் — எல்லாருமாகச் சேர்ந்தால் அந்தப் படகைப் பொடிப் பொடியாகச் செய்து கடலில் கரைத்து விடலாம் அப்பனே!'' என்று சொல்லியபடி கையில் வேலை எடுத்துக் குறி பார்க்கத் தொடங்கி விட்டார் வளநாடுடையார். மணிமார்பனும் ஒரு வேலை எடுத்துக்கொண்டான். இளங்குமரன் மட்டும் கைகட்டி நின்றவாறே முகத்தில் மெல்லிய நகை மலர இருந்தான்.

''என்ன ஐயா நிற்கிறீர்கள்?...நீங்களும்...?'' என்று சொற்களைத் தொடங்கிய மணிமார்பன் இளங்குமரனுடைய முகபாவத்தை நோக்கி விட்டுப் பேச்சை நிறுத்திக் கொண்டு விட்டான்.

''மணிமார்பா! இந்த விநாடிகள் தான் எனக்கு மெய்யான சோதனை. 'நான் அருளாளனாக இருப்பதா? அருள் என்ற விரிந்த எல்லையிலிருந்து என்னைக் குறைத்துக் கொண்டு அன்புடையவர்களுக்கு அன்பும் விரோதிகளுக்கு விரோதமும் காட்டுகிற வெறும் மனிதனாகக் கீழே இறங்கி விடுவதா?' என்று சிந்தித்துக் கொண்டிருக்கிறேன் நான்'' என்றான் இளங்குமரன். (தொடரும்)

# வெள்ளைச்சங்கு

க. பஞ்சாபகேசன்



அந்த ஒரு குழாயைச் சுற்றி நூறு குடங்கள் 'எஸ்' வடிவில் அழகாக 'க்யூ' வைத்து நெளிந்து நின்றன. சிறியதும் பெரியதுமாய், பளபளப்பும் அழுகையுமாய், வெண்கலமும், மட்கலமுமாய், ஊடே ஈயமும் எவர்சில்வருமாய் வரிசை வைத்து நின்ற அந்த வெறுமைப் பாத்திரங்கள் குழாய் எப்போது வாய் திறக்கும் என்று எதிர்பார்த்திருந்தன.

அப்போது இரவு மணி பத்து. என் மனைவியும் நானும் சினிமாக் கொட்டகையிலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தோம். சிறிது தூரத்தில் இருந்த எங்கள் காலனிக்கு வர ஊரின் சந்துக்களையும் தெருவையும் கடந்துதான் வர வேண்டும்.

குழாய்க்கு எதிரே அந்தக் காட்சியை அப்பட்டமாகக் காட்டிக் கொண்டு, ஒன்றுமே பேசாமல் வாய் திறவாமல் அழுத்தமாகப் புது மருமகள் நிற்பது போல் நின்றிருந்த அந்தக் குழாயை உயிருள்ள ஒரு சடப்பொருளாகக் காட்டிக் கொண்டு நின்றது தெரு விளக்கு.

மௌனம் பூத்த குழாயையும், அது சொரியப் போகும் புனித கங்கைக்காகத் தவமிருந்த பாத்திரக் காட்சியையும் கண்டுகொண்டு, நாங்கள் குழாயடியைத் தாண்டியபோது என் மனைவி மீனு என் கரத்தை மெதுவாகப் பற்றியபடி, "வேடிக்கை பார்த்தீர்களா? எங்கெங்கோ வெள்ளம் பாய்கிறது; இனி ஜன்ம ஜன்மாந்தரத்துக்குத் தண்ணீரே வேண்டாம் என்று கண்ணீர் சொரிகிறது ஜனங்கள். இங்கே காலையில் நாலு மணிக்கு வாய் திறக்கப் போகிற குழாய்க்காக இப்போதிருந்தே 'க்யூ' வரிசை!" என்றாள். உண்மையிலேயே அவள் மனம் வருத்தப்பட்டிருப்பாள் போலிருக்கிறது. பேச்சில் தொண்டை வறட்சி நன்கு புலப்பட்டது.

"சோடா சாப்பிடுகிறாயா?" என்றேன் நான்.

"நன்றாயிருக்கிறது விளையாட்டு. உங்களுடைய நெஞ்சில் கொஞ்சமும் ஈரமில்லையா? ஏழைகள் ஒருசொட்டுத் தண்ணீருக்கு இங்கே எத்தனை கஷ்டப்படுகிறார்கள் பாருங்கள்... அங்கே காலனியில் நாம் கொழிக்கிறோம், நீர் மூழ்கி யானைகளைப் போல. இந்த அழகில் இன்று காலையில், 'ஒரு குடம் தண்ணீர் பிடித்துக் கொள்ள விடுங்க தாயே' என்று வந்த பெண்ணை விரட்டினீர்கள்" என்று அவள் பேசிக் கொண்டே போக, அந்தத் தொழில் நகரமும், காலனியும் நெருங்கி வந்து கொண்டிருந்தன.

பளீரென்ற விளக்கொளியில் மூழ்கியிருந்தது தொழில் நகரம். வறண்ட பாலைக்கு நடுவே எழுந்த தொழிற்சாலை சுண்ணாம்புக் கல்லையும், களிமண்ணையும் பதப்படுத்தி, சிமிட்டியாக்கி, அதை ஊரிலும் உலகத்திலும் மயன் அரண்மனைகளாக்கித் தொழிலாளர் சமுதாயத்தையும் தன்னையும் வளமாக்கிக் கொண்டிருந்தது அந்நகரம்.

தொழிற்சாலைக்கு வேண்டிய தண்ணீரைப் பகீரதன் கங்கையைக் கொணர்ந்தது மாதிரி அங்கே யந்திரங்களுக்கும் குடியிருப்புக் காலனிக்கும் கொண்டு வந்திருந்தார்கள்.

காலனியில் எங்கள் வீடு சிறிய வீடுதான். நான் வகிக்கும் உத்தியோகமும் சிறியதுதான். ஆனால் ஒரு பெருமை: ஊரில் தண்ணீர் தண்ணீர் என்று அவதிப்படும் போது எங்கள் வீட்டில் குழாய்க்கு உறக்கமில்லை; அயர்வுமில்லை. 'இருபத்தி நாலு மணி நேரமும் என்னமாய் ஸ்படிக நீர் வருகிறது' என்று என் மனைவியின் வார்த்தையிலும் இந்தப் பெருமையைக் காணலாம்.

வீட்டுக்குத் திரும்பியபோது இரவு மணி பத்தரை. கங்கை நதி பாயும் நாட்டில் என்னவெல்லாம் நடைபெறுகிறது என்ற படத்தைத்தான் பார்த்து விட்டு வந்தோம். முதலில் தண்ணீர்ப் பிரச்னையைப் பற்றிப் பேசியவள், பிறகு புண்ணிய நதியான கங்கை நதி பாயும் நாட்டிலா இப்படித் திருட்டும் புரட்டும் நடக்க வேண்டும் என்று அங்கலாய்த்து, அடுத்தபடியாக அன்று காலை நடந்திருந்த சம்பவத்தையும் எனக்குச் சிறிது ஞாபகமூட்டி விட்டு, திடீரென்று இருந்தாற்போலிருந்து தன்னையறியாமல் நித்திரை போய் விட்டாள். கைக் குழந்தை மாதிரி இது அவளுக்கு ஒரு பழக்கம், வரப்பிரசாதம் என்றும் சொல்லுவேன்.



''ஏண்டி! எல்லோரும் ஹாபியாகக் கிளி, பூனை, என்று வளர்க்கிறார்களே! அதுபோல் நீ எதையாவது வளர்க்கிறாயோ?''
''நான்தான் கல்யாணம் பண்ணிண்டுட்டேனே!''

எனக்குத் தூக்கம் சுலபத்தில் வருவதில்லை. கோயில் மாடு மாதிரி வேலை கெட்ட வேளையில் உட்கார்ந்து அசை போடும் பழக்கம். எண்ணங்களும், அன்றையச் சம்பவங்களும் நெஞ்சில் அசை போட ஆரம்பித்தன. மீனுவைத் திரும்பிப் பார்த்தேன். முல்லைப் பூ உறங்குவது மாதிரி இருந்தது; எண்ணத்தைத் தூண்டி விட்டுத் தூங்கும் குறும்பு இருந்தது.

அன்று காலையில் வாசல் வராந்தாவில் உட்கார்ந்து கொண்டு ஏதோ படித்துக் கொண்டிருந்தேன். வாசற்கதவு சாத்தியிருந்தது. யாரோ கதவை மெதுவாகத் தட்டினார்கள். கூடவே வளையல் ஒலி குடத்துடன் உரசும் சத்தமும் கேட்டது. நான் உடனே ஊகித்துக் கொண்டேன்: 'அம்மா, குடம் தண்ணி புடிச்சுக்கட்டுமா? எங்க கல்லக்குடிச் சீமை தண்ணிப் பஞ்சத்துக்காகவே பிறந்தது அம்மா' என்ற குரலாகத்தான் இருக்க வேண்டும் அது என்று.

''யாரது'' என்று கேட்டுக்கொண்டே மீனு வாசற் கதவைத் திறக்க வந்தாள்.

''வேண்டாம், திறக்காதே'' என்று நான் ஆணையிடவும் வெளியே குரல் துல்லியமாகக் கேட்கவும் சரியாக இருந்தது.

''நான்தான் தாயே, ராமக்கா! ஐயா இல்லாத சமயமா வரட்டா? ஒரே ஒரு குடம் தண்ணி போதும் தாயே! ஊட்டிலே மாப்பிள்ளைப் பிள்ளையாண்டான் வந்திருக்குது. 'உங்க ஊருக்கு உப்புத் தண்ணி குடிக்கவா வந்திருக்கேன்'னு சீறுது. அது....''

மெல்ல அழுத்தமான குரலில் இரைந்தேன் நான்: ''ஏய், மீனு! சொன்னால் கேட்கமாட்டாய்? நீ குழந்தையா? காலனியில் நமக்கு ஒரு வீடு கொடுக்க எத்தனை தபசு பண்ணினோம்?''

''ஆமாம்'' என்றாள் அவள்.

''எத்தனை வருஷத் தபசு அது?''

''நாலு வருசத் தபசு அது!''

''இன்னும் எட்டு பத்து என்று தவமிருக்கிறவர்களும் இருக்கிறார்கள்... நமக்கு வீடு கொடுத்திருப்பது தண்ணீர் தருமம் செய்வதற்காக அல்ல.''

''அது ரொம்பப் புண்ணிய காரியம். தெரியுமா?''

''சீ, அசடு! உலகம் தெரியாமல் பேசுகிறாய்? இந்தப் 'பிளாக்'கில் வேறு யாராவது இப்படித் தானம் செய்கிறார்களா பார்த்தாயா? எங்கேயோ கொள்ளிடத்திலிருந்து வருகிறது இந்தத் தண்ணீர், எத்தனையோ லட்சக்கணக்கான ரூபாய் செலவில். ஊரில் தண்ணீர்ப் பஞ்சமும் நீ அடையப் போகும் புண்ணியமும் காலனி வாழ்க்கைக்கு ஒத்து வராது. விட்டு விடு, இந்தப் பழக்கத்தை!'' என்று சற்று இரைந்தே சொன்னேன்.

வெளியே அந்த ராமக்காவுக்கும் கேட்டிருக்க வேண்டும். ''நான் வரேன் அம்மா....எட்டு மணி சங்கு ஊதினப்புறம் சாமி மில்லுக்குப் போய் விடுவாரு. நான் பிறகு வாரேன், அம்மா. வரும் போது வெள்ளைச் சங்கு கொண்டு வாரேன்....''

ராமக்காவின் வளையல் வெண்கலக் குடத்தில் தேய்ந்த ஒலி தேய்ந்தோய்ந்த பிறகு, மீனுவின் குறும்பும், கோபமும் வழியும் முகத்தை நோக்கிக் கொண்டு கேட்டேன்:

''வெள்ளைச் சங்கா? என்ன அது?''

''அவளை விரட்டிய பிறகு அதைப் பற்றியெல்லாம் உங்களுக்கு என்ன கேள்வி வேண்டிக் கிடக்கிறது?''

''யார் இந்த ராமக்கா?''

''கல்லக்குடியில் யாரோ ஏழைக் குடும்பம். அந்தப் பெண்ணின் அண்ணன் இங்கே சிமிட்டி மில்லில் தினக்கூலிக்கு வேலையில் இருக்கிறானாம். சிறு பெண். பதினெட்டு வயசிருக்கலாம். களையான முகம். தண்ணீரே கிடைக்கவில்லை என்று தினம் ஒரு குடம் நல்ல தண்ணீர் வாங்கிக் கொண்டு போக வருகிறது. ஒரு அதிசயம் தெரியுமா உங்களுக்கு? நேற்றைக்குச் சொன்னாள்



ராமக்கா. அவளிடம் ஒரு வெள்ளைச் சங்கு இருக்கிறதாம். அதை அவள் பாட்டி தன் பேத்தியிடம் தந்து விட்டுக் கண்ணை மூடினாளாம். அதை எந்தப் பெண் வைத்திருக்கிறாளோ, அவள் மணமாகாதவளானால் சீக்கிரமே மணமாகுமாம்; மணமாகியும் குழந்தைப் பேறு இல்லாதவளுக்குக் குழந்தை பிறந்து விடுமாம்....''

''சரிதான். தினசரி ஒரு குடம் தண்ணீருக்காக இவள் எத்தனை வீட்டில் இம்மாதிரி சங்குகளைக் கொடுத்திருக்கிறாளோ....?'' என்றேன் நான் சூடாக.

**மீ**ண்டும் மீனாவை அருகில் நோக்கினேன். புன்னகை முகத்தோடு உறங்குகிறாள். அழகிய இமைகளுடன் சங்குகளைப் போல் மூடியவிழிகளில் ஏதோ ஓர் ஆர்வம். நான் ஆபீஸ் போன பிறகு ராமக்கா ஒரு குடம் தண்ணீருக்காக மீண்டும் வந்தாளா? என் பக்கத்திலே உறங்கும் இந்தக் களங்கமற்ற பிறவிக்கு ஒரு வெள்ளைச் சங்கு தந்து விட்டுச் சென்றிருக்கிறாளா?

பிறர் துயரம் இந்தப் பெண்ணுக்குப் பொறுப்பதில்லை. பசி என்று கேட்டு வரும் பிச்சைக்காரனுக்குச் சோறு இடுவதுடன் நில்லாது. ஏன் சில பேர் உலகத்தில் பிச்சை எடுக்க வேண்டும் என்ற சர்ச்சையில் பிரச்னையாக நிற்பாள் இவள். நடுக்கும் குளிரில் கோவணம் கட்டித் திரியும் ஏழைச் சிறுவர்களுக்கு ஒன்றுமிராது; இது இவளுக்கு ஏனென்றும் எப்படி என்றும் இருக்கும்.

இந்த இவளுடைய கருணைப் பிரச்னை இப்போது தண்ணீர்ப் பிரச்னையாக வந்து நின்றிருக்கிறது.

இனியும் உறுதியாகத் தூக்கம் வராது என்று நம்பின நான் படுக்கையிலிருந்து எழுந்து ஜன்னலண்டை வந்து நின்று கொண்டு வெளியே நோக்கினேன். மிருதுவான தென்றல் வந்து உடம்புக்கு இதம் தந்தது. இரவு ஒன்றரை மணிச் சங்கு தொழிற்சாலையில் தீவிரமாக ஊதிக் கொண்டிருந்தது. இதோ இரவு 'ஷிப்டு' முடிந்த தொழிலாளிகள் சள சள வென்று பேசிக் கொண்டு செல்லும்

பண்டிட் டி.கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

ஆரோக்யத்துக்கும் பலத்துக்கும்

ஆயுர்வேதாஸ்ரமம் (பிரைவேட்) லிட்.
மதராஸ்-17

## நினைவில் இருக்க வேண்டிய பெயர்

PANDYAN INSURANCE COMPANY LIMITED

பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
3 அமதாபாத், கோயமுத்தூர், கொச்சி

வெள்ளை ஆயிண்ட்மெண்ட்

# பி-டெக்ஸ்

படர்தாமரை, சொறிசிரங்கு, ரத்தக்கட்டி, பருக்கள், சருமத்தில் வெடிப்பு கை கால்களில் குளிர் வெடிப்புகள் மிருகங்களுக்கு ஏற்படும் புண்கள் காயங்கள் முதலியவைகளுக்கு நிச்சய நிவாரணம்



பி-டெக்ஸ் பம்பாய் 3

கலகலப்பான ஒலி கேட்கத் தொடங்கி விடும், இன்னும் சற்று நேரத்துக்குள்.

என் கவனம் இதற்கும் மேலே ஜன்னலுக்கு வெளியே, கீழே தெருத் தரையை நோக்கியது. நெஞ்சு 'திக்' கென்றது. தெரு நடுவில் 'குபு குபு' வென்று நீர் பொங்கிப் போய்க் கொண்டிருந்தது. எங்கேயிருந்து வருகிறது இத்தனை நீரும்? இந்தப் பாலைவனத்திலே திடீரென்று நீரூற்றுத் தோன்றி விட்டதா?

நீர் வந்த திசையிலே கண்கள் சென்றன. எதிர்ச்சாரியில் 'ஆபீசர் குவார்ட்டர்ஸ்'கள். நல்ல மாடிக் கட்டடங்கள். அறைக்கு ஒரு குழாயும், மின் விசிறியும், 'பர்னிச்சருமாக' வசதிக்குக் குறைவில்லை. அங்கே எதிர் வீட்டுப் பின் பக்கமிருந்த ஜலதாரை வழியாகப் பொங்கி வந்து தெருவை நனைத்துக் கொண்டு கங்கையாகப் பெருக்கெடுக்கிறது தண்ணீர். எதிர் வீட்டு அதிகாரி வீட்டில் யாருமில்லை. அன்று காலைதான் போனவர்கள். வீட்டுக் குழாயைத் திறந்து விட்டு மறதியாகப் போய் விட்டார்கள் போலிருக்கிறது. அவர்கள் வைத்திருக்கக்கூடிய ராட்சத சிமிட்டித் தொட்டியும் நிறைந்து வழிந்து, இப்படித் தெருவில் நீர்ப் பின்னலிடவும் தொடங்கி விட்டது.

அந்த நீர்ப்பின்னலுக்கு ஒரு சக்தி ஏற்பட்டு, அது ஐஸ்கட்டியைப் போல் ஜில்லிப்படைந்து, அது ஒரு நீர்ச் சாட்டையாக மாறி என் நெஞ்சத்தைச் சாடுவது போலிருந்தது. மனத்தில் ஒரு வறட்சி. உட்புலனில் ஒரு குழாயைச் சுற்றிச் சொட்டுத் தண்ணீருக்காகப் பாத்திரங்களுடன் மனித உள்ளங்களும் போரிடும் ஒலி.....இத்தனை தண்ணீர்த் தாகமா பூமித் தாய்க்கு?

இரவு 'ஷிப்டு' முடிந்து சென்ற இரு தொழிலாளிகள் பேசிக் கொண்டார்கள்:

''பார்த்தியா தம்பி, தெருவிலே கங்கை? நாம ஒரு குடம் தண்ணிக்காக எத்தினி கஷ்டப்படறோம்?''

''உனக்குத் தெரியுமா அண்ணே? என் பொஞ்சாதி ரெண்டாவது ஆட்டம் சினிமாவுக்குப் போயிருக்குது. படம் முடிஞ்சதும் நேரே கல்லக்குடி சினிமாக் கொட்டாயித்தெரு குனாயடியிலே குடம் தண்ணிக்குக் காவல் இருக்க வேண்டியதுதான்...விடியக் கருக்க நாலு மணிக்குத்தானே தண்ணி வருது குனாயிலே! இங்கே என்னன்ன....''

"பூமி குளிக்குதையா தண்ணியிலே... ஒரு கை குடிக்க முடியுமா? வெட்டிப் பேச்சு...வா, போகலாம்.''

குரல்கள் ஓய்ந்து தேய்ந்தன.



நரி: நீ ரொம்ப நன்னாப் பாடுவாயாமே! எங்க தாத்தா சொல்லியிருக்கார்....எங்கே ஒரு பாட்டுப் பாடு!

காக்கை: இப்ப நன்னாப் பாட வராது. எனக்கு வாயில் வடை வைத்துக் கொண்டிருக்கும் போது தான் நன்னாப் பாடுவேன்!

ஜன்னலிலிருந்து விடுபட்டுப் படுக்கையண்டை வந்தேன். இப்போது நிம்மதியாகத் தூங்கும் அவளுடைய முகம், நேர்த்தியான சங்குப் பூவை ஞாபகப் படுத்திற்று. சிலருக்குக் கருணை உள்ளம் இயற்கையிலேயே அமைந்து விடுகிறது. சிலருக்குச் சந்தர்ப்பங்கள் கருணை உள்ளத்தை ஏற்படுத்திக் கொடுக்கின்றன.

அன்று காலையில் ராமக்கா மறுபடியும் ஒரு குடம் தண்ணீருக்காக வந்திருப்பாளா? வெள்ளைச் சங்கு கொண்டு வந்து தந்திருப்பாளா?

மீனு ஆசையாக ஒரு சிறு சந்தப் பேழை வாங்கி வைத்திருந்தாள். அதில் அவளது ஆசைப் பொருள்கள் யாவும் இருக்கும்.

மெள்ள நடந்து சென்று பெரிய பெட்டியைத் திறந்தேன். அதற்குள்ளிருந்த பெரிய பேழையை எடுத்தேன். திறந்தேன். .. என்ன அதிசயம்! தூய வெண்ணிறமுள்ள, கைப்பிடி அளவு இருந்த சங்கு புன்முறுவலுடன் உறங்கிக் கொண்டிருந்தது!

நான் தொழிற்சாலைக்குச் சென்ற பிறகு ராமக்கா வந்திருக்கிறாள். ஒரு குடம் தண்ணீர் எங்கள் வீட்டுக் குழாயில் எடுத்துச் சென்றிருக்கிறாள். இந்த வெள்ளைச் சங்கை மீனுவிடம் கொடுத்திருக்கிறாள்...

மனத்தில் ஒரு நிம்மதி. இந்த மட்டும் ஒரு குடம் தண்ணீர் எடுத்துச் சென்றிருந்தாளே அவள்....திடீரென்று என் தோள் மேல் ஸ்பரிச உணர்வு. திரும்பி

னேன். மீனு நின்று கொண்டிருந்தாள்.

''என்ன மீனு தூங்கவில்லையா?'' என்று கேட்டேன்.

''சினிமாப் பார்த்து விட்டு நீங்கள் ஏன் இப்படி இராக் கண் விழிக்கிறீர்கள்?'' என்றாள்.

''இது....''

''சங்குதான். ராமக்கா கொடுத்தாள். எத்தனை அழகாய், வெளுப்பாய் இருக்கிறது, பார்த்தீர்களா?''

உண்மை தான். நல்ல மனிதரின் உள்ளத்தைப் போல் வெண்மையாக இருந்தது அந்தச் சங்கு.

''தண்ணீர் எடுத்துப் போனாளா?''

''ஏன், எடுத்துப் போகக் கூடாதா?''

''கூடாது என்று சொல்லவில்லையே நான். இனி அவள் வந்தால் யோசிக்காமல் தண்ணீர்த் தானம் நடக்கட்டும்!''

''ஏது, உங்களுக்கு இத்தனை ஜீவ காருண்யம்! பயப்படாதீர்கள்! உங்கள் காலனி அந்தஸ்து கெட்டு விடாது. இனி ராமக்கா வரமாட்டாள்...''

''வரமாட்டாளா? ஏன்....''

''அவளுக்குக் கல்யாணம் லால்குடியிலே! மாலையில் ரயிலேறி யிருப்பார்கள் அவர்கள்... அதனால்தான் காலையில் இந்தச் சங்கை என்னிடம் கொடுத்தாள் அவள். சரி, மணி இரண்டாகப் போகிறது. நன்றாய்க் கண் விழித்தீர்கள்!''



தகப்பனார்: நீ அடிக்கடி சினிமா பார்ப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நீ நன்றாகப் 'படித்துப் பெரியவனாகிச் சம்பாதித்த பிறகு தான் சினிமாப் பார்க்கணும்!

பையன்: அப்ப, நடிக நடிகைகள் எல்லோரும் கிழவர் கிழவிகளாக ஆகி விடுவார்களேயப்பா! பார்க்கப் பிடிக்காதே!

படுக்கையில் படுத்த பிறகு — மீனுவின் குரல் என் காதில் ஒலித்தது. ''கடற்கரையிலே கிடைக்கும் சங்கு இந்தக் கட்டாந்தரை ஊரிலே இந்தப் பெண்ணுக்குக் கிடைத்தது எப்படி?''

''அவள் பாட்டி கொடுத்தாள் என்றுதான் சொன்னாளே மீனு.''

''பாட்டிக்குக் கிடைத்தது எப்படி?''

''சரிதான். நீ நன்றாகத் தூங்கி விழித்திருக்கிறாய், பேசுகிறாய்!'' என்றேன்.

''ஒரே ஒரு பேச்சுக் கேளுங்கள்: இனி ஒரு குடம் தண்ணீருக்காக யார்தான் நம் வீட்டுக்கு வரப் போகிறார்கள்? உபயோகமுள்ள அந்த ஒரு குடம் தண்ணீரை அளிக்க முடியாத நாம், இனி உபயோகிக்கப் போகும் நீரெல்லாம் வீண் விரயம் செய்வதைப் போல் தான்!'' என்றாள் மீனு.

எத்தனை அரிய உண்மை. அத்தனை பெரிய தொழிற்சாலையும் அத்தனை பெரிய காலனியும் உபயோகிக்கும் நீரெல்லாம் அந்த ஒரு குடம் தண்ணீர் அளிக்க முடியாது போனால் வீணுக்கு இறைத்தது தானே?

தந்தப் பேழைக்குள் உறங்கும் வெள்ளைச் சங்கின் நிர்மலமான வெண்மைப் புன்னகை மனித மனத்தின் அலங்கோலமான வண்ணத்தைப் பார்த்து அனுதாபப் படுவதாகவே இருந்தது.



# ரீடா கூந்தலைப் பாதுகாக்கும்



தொல்லைகளைத் துரிதமாகவும்
திறமையாகவும் நீக்குகிறது.

ரீடாவை உபயோகித்து மயிர்க்கால்களுக்குப போஷாக்குத் தருவதால் உங்கள் கூந்தல் நீண்டு வளர்ந்து மிருதுவாகவும் பளபளப்பான கருமை நிறத்துடனும் காணப்படும். இதிலுள்ள மருந்துச்சத்துக்கள், மயிர் கொட்டுதலை நிறுத்தி, பொடுகைபபோக்கி, நரைக்காமல் பாதுகாக்கும். புட்டியிலுள்ள ரீடாவைத் தேங்காய் எண்ணெய், கடுகு அல்லது நல்லெண்ணெயில் கலந்து எப்போதும் உபயோகியுங்கள். காரிருள் போன்ற கருங்கூந்தல் அழகை நிச்சயம் நீங்கள் பெறலாம். ரீடாவை உபயோகிப்பதுடன் உங்கள் நண்பர்களுக்கும் சிபாரிசு செய்யுங்கள்.



# ரீடா

கவர்ச்சி தரும் கூந்தலின் ரகசியம்

[illegible] கம்பெனி, சென்னை-1.

R.G TM






## பாங்க் தொழில்

நாட்டின் செல்வத்தைப் பெருக்குகிறது



பஞ்சாப் நேஷனல் பாங்க் நாட்டின் தொழிலுக்கும், விவசாயத்திற்கும், வாணிபத்திற்கும் பணி யாற்றுகிறது



எல்லாவித பாங்க் பணிகளும் அளிக்கிறது.



## தி பஞ்சாப் நேஷனல் பாங்க் லிட்.

ஸ்தாபிதம் 1895

தலைமைக் காரியாலயம்: புது டில்லி.



# புலியும் காட்டெருமையும்

பிலோ இருதயநாத்

ஆனைமலையில் யசோதரன் என்னும் ஒரு வழிகாட்டி யிருக்கிறான். அவனைப்பற்றி அறியாதவர்களே கிடையாது. ''ஒரு வழிகாட்டி தேவை'' என்று யாரையாவது கேட்டால் உடனே, ''யசோதரன்தான் உங்களுக்குச் சரியானவன்'' என்று கூறுவார்கள். நான் ஆனைமலைக்கு ஆராய்ச்சி விஷயமாகப் போயிருந்தபோது எனக்கும் யசோதரன் வழிகாட்டியாக வாய்த்தான்.

யசோதரன் ஒரு நாள் காட்டெருமைகளைப் பற்றிப் பல ரசமான விஷயங்களைக் கூறினான். அவனுடன் காட்டெருமைகளைக் காண்பதற்காகச் சென்றேன். காட்டினுள் வெகு தூரம் போகவில்லை. சூரியன் மலை வாயில் விழும் சமயத்தில் காட்டெருமைகள் வாழும் வழியில், ஒரு பெரிய மரத்தின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டோம். அப்போது மாலை சுமார் ஆறு மணி இருக்கும். ஒரு காட்டெருமைகளின் கூட்டம் வந்தது. ''காட்டெருமைகள் மேய்ச்சலின்போது மட்டும்தான் கூட்டமாகத் திரியும். ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குச் செல்ல வேண்டுமானால், எறும்புகளைப்போல் சாரி சாரியாகத்தான் செல்லும்'' என்று கூறினான் யசோதரன்.

காட்டெருமைகளின் கூட்டத்துக்கு முன்னால் தலைமை தாங்கிச் சென்ற எருமை உருவத்தில் மிகப் பெரியது. கம்பீரமாகச் சென்றது. அதன் பின்னால் பெண் காட்டெருமைகளும், அவற்றுக்குப் பிறகு கன்றுகளும், கன்றுகளுக்குப் பிறகு தாய் எருமைகளும், கடைசியாக மற்ற ஆண் எருமைகளும் ஒன்றன்பின் ஒன்றாகவும், வரிசையாகவும் போகும் காட்சியைக் காண மிகவும் வியப்பாக இருந்தது. இப்படி இந்தக் காட்சியைத் திறந்த வாய் மூடாமல் பார்த்துக் கொண்டிருக்கும் போது யசோதரன் கேட்டான்: ''புலியை எதிர்த்துக் காட்டெருமை போரிடுவதைப் பார்த்திருக்கிறீர்களா?'' என்று.

''நான் காட்டெருமைகளையே இப்போது தானே பார்க்கிறேன்! புலியோடு போராடும் காட்சியை நீ பார்த்திருக்கிறாயா?'' என்றேன்.

யசோதரன் உடனே தான் கண்ட அந்தக் காட்சியை விவரிக்க ஆரம்பித்தான்:

'' ஒரு சமயம் நான் காட்டெருமைகளின் கூட்டத்தைக் கண்காணித்துக் கொண்டிருக்கும் போது ஒரு புலி எங்கிருந்தோ திடீரென்று வந்து ஓர் எருமையின் கணுக்கால் நரம்பைக் கடித்துக் குதறிவிட்டு ஓடிப் போய்ப் பதுங்கிக் கொண்டது. நான் என்னதான் நடக்கிறது என்பதை அறிய மரத்துக்கு மரம் தாவியபடி எருமைக் கூட்டத்தைத் தொடர்ந்து சென்றேன்.

''தந்திரக்காரப் புலிக்கு, தன்னை எருமைகள் ஒன்று சேர்ந்தால் தொலைத்து விடும் என்று தெரியும். ஏன், ஒரு தனி எருமையோடுகூட அதனால் சமாளித்து நிற்க முடியாது. இதனால் தான் ஓர் எருமை மீது திடீரென்று பாய்ந்து படுகாயப்படுத்தி விட்டுப் பதுங்கிப் பதுங்கிச் சென்று, அவை வரும் வழியிலுள்ள ஒரு பாறையின் மறைவில் போய் ஒளிந்து காத்திருந்தது. காட்டெருமைகளின் வரிசை அந்தப் பாறையைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தது. அவை சாரி சாரியாகப் போவதைத் தன் நெருப்புக் கண்களால் பார்த்துக் கொண்டு அப்படியே பாறையோடு பாறையாகப் படுத்திருந்தது புலி.

''புலி தாக்கியதனால் காயமடைந்த எருமை, நரம்பு அறுந்து குருதி ஒழுக ஒரு காலை இழுத்து இழுத்து வரிசையின் கடைசியில் மெதுவாக வந்து கொண்டிருந்தது. இதைத்தான் புலியும் எதிர்பார்த்தது. உடனே அதன் மீது பாய்ந்து மற்றொரு காலையும் கடித்துக் குதறி, அதனால் இனி நடக்க முடியாதபடி செய்தது. எருமைகளின் கூட்டத்திலிருந்து இதைப் பிரிக்க வேண்டும் என்பதுதான் புலியின் நோக்கம். காயம்பட்ட எருமைக்கு உதவ மற்ற எருமைகள் வராது. இனி இந்த எருமையினால் வேகமாக ஓடவும் முடியாது. அப்படியே ஓடினாலும்கூட அதன் ரத்தத்தை முகர்ந்தபடியே அதைப் பின்தொடர்ந்து செல்லும் புலி. ரத்தப் போக்கினால் பலவீனமடைந்த எருது எப்படியும் புலிக்கு இரையாக வேண்டியதுதான்.

''தள்ளாடியபடி நடை போடும் எருமையைப் புலி முன்னால் சென்று தாக்க ஆரம்பித்தது. அப்போதுதான் அந்தக் கேவலமான நிலையிலும் எருமையின் ஆக்ரோஷத்தைக் கண்டேன். உயிர் ஓய்ந்து கொண்டிருக்கும் போதும் தன் உடல் வலுவையெல்லாம் ஒன்று திரட்டிப் புலியோடு போராடி அதன் உடலில் தன் கொம்பினால் பல காயங்களைச் செய்த பிறகே உயிர்விட்டது எருது'' என்று தன் கதையை முடித்தான் யசோதரன்.

காட்டெருமைகளின் வரிசையும் நாங்கள் உட்கார்ந்திருக்கும் மரத்தைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தது. கடைசியில் ஏதாவதொரு எருமை நொண்டியபடி பின் தங்கி வருகிறதா என்று பார்த்தேன். இல்லை. 'நல்ல வேளை! இன்றைக்கு இந்த எருமைக் கூட்டம் புலியின் பார்வையில் படவில்லை போலிருக்கிறது' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டேன். எருமையும் புலியும் போரிடுவதைக் காண ஆசையாக இருந்தாலும் புலியை நினைத்தபோது என் உடல் வியர்வையில் நனைந்து போயிற்று.

# தூக்குத் தண்டனை

வட அலபாமாவில் ரயில் பாலம் ஒன்றில் ஒரு மனிதர் நின்றார். இருபது அடிக்குக் கீழே விரைந்தோடிய தண்ணீரை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். அவரது கைகள் முதுகுப்புறமாக இருந்தன: மணிக்கட்டுக்களைச் சேர்த்துக் கயிற்றினால் கட்டியிருந்தார்கள். இன்னொரு கயிறு அவரது கழுத்தை நெருக்கமாகச் சுற்றிக் கொண்டிருந்தது. இந்தக் கயிற்றை அவரது தலைக்கு மேல் இருந்த ஒரு பெரிய குறுக்குச் சட்டத்துடன் பிணைத்திருந்தார்கள். கயிற்றின் உபயோகப்படாத பகுதி அவர் முழங்கால்கள்வரை தொங்கியது. ரயில் பாதையின் இரும்புத் தண்டவாளங்களுக்கு ஆதாரமாக உள்ள 'ஸ்லீப்பர்' கட்டைகளின் மேல் வைக்கப்பட்டிருந்த சில பலகைகள் தூக்கு தண்டனை பெற்றவருக்கும் அந்தத் தண்டனையை நிறைவேற்றப் போகிறவர்களுக்கும் – இரு வீரர்கள் அவர்களின் தலைவருடைய ஒரு சார்ஜண்டு ஆகியோர்—காலூன்ற உதவின. அதே தாற்காலிக மேடையில் கொஞ்சம் தள்ளி, தம் அந்தஸ்துக்குரிய உடையணிந்த அதிகாரி ஒருவர் ஆயுதபாணியாக நின்றார். இவர் ஒரு காப்டன். பாலத்தின் இரு கோடிகளிலும் காவலர்கள் இருவர் துப்பாக்கிகளைத் தாங்கி நின்றனர். இடக்கரத்தில் துப்பாக்கியின் அடிப்பாகத்தை ஏந்தித் தோள்பட்டைக்கு நேராகச் செங்குத்தாக இருக்குமாறு அவர்கள் அதனைப் பற்றி விரைப்பாக நின்ற பாணி இயல்பானதல்ல. பாலத்தின் மத்தியில் என்ன நடக்கிறது என்பதை அறிந்து கொள்வது இக்காவலர்களின் கடமையாகத் தோன்றவில்லை. பாலத்தில் அமைந்திருந்த நடைபாதையின் இரு கோடிகளிலும் அவர்கள் வழியை மறித்துக் கொண்டிருந்தனர்; அவ்வளவே. காவலாளிகளில் ஒருவனுக்கு அப்பால் யாரும் தென்படவில்லை. ரயில் பாதை ஒரு காட்டுக்குள் நேராக நூறு கெஜதூரம் ஓடியது. பின்பு வளைந்து சென்று கண்களுக்குப் புலனாகாமல் மறைந்து விட்டது. தொலைவில் ஒரு காவல் நிலையம் இருந்ததென்பதில் சந்தேகமில்லை. ஆற்றின் மறு கரை ஒரு திறந்த வெளி. இலேசாக மேடிட்ட ஒரு பூமி. மேட்டின் உச்சியில் அடி மரங்களை வரிசையாக நட்டுப் பாதுகாப்புக்கென்று ஒரு தடுப்பு ஏற்படுத்தியிருந்தார்கள். துப்பாக்கிகள் நுழைவதற்கு அதில் துவாரங்கள் இருந்தன. மத்தியில் ஒரு பலகணி. அதன் வழியாக வெளியே துருத்திக் கொண்டிருந்த பித்தளை பீரங்கி ஒன்றின் வாய் பாலத்தைக் குறி பார்த்த வண்ணம் இருந்தது. இந்த மரக் கோட்டைக்கும் பாலத்துக்கும் மத்தியில், மேட்டுப் பாங்கான பூமியிலிருந்து பாதி தூரத்தில், பார்வையாளர்கள் அணிவகுத்து நின்றனர். அவர்கள் காலாட்படையின் ஒரு பகுதியினர். இந்த அணிவகுப்புக்கு வலப்புறத்தில் ஒரு லெப்டினண்ட் நின்றார். அவர் தமது வலக் கரத்தில் பற்றியிருந்த வாளின் கூர்முனை தரையில் ஊன்றியபடி இருந்தது. அவரது இடது கை வலக் கரத்தின் மீது ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது. பாலத்தின் மத்தியிலிருந்த நால்வரைத் தவிர வேறு யாரும் அசையவில்லை. பட்டாளம் பாலத்தை வைத்தகண் வாங்காமல் பார்த்தபடி நின்றது. ஆற்றின் கரைகளை நோக்கி நின்ற இரு காவலர்களும் பாலத்தை அழகுசெய்யும் சிலைகள்போல் தோன்றினர். காப்டன் கைகளைக் கட்டியவாறே மௌனமாகத் தன் கீழ் அதிகாரி செய்யும் காரியத்தை மேற்பார்வையிட்டவண்ணம் நின்றார். மரணம் ஒரு வீரத் தலைவனைப் போன்றது. முன்னறிவிப்புடன் அது வரும்போது முறைப்படி மரியாதை காட்டிச் சம்பிரதாயச் சடங்குகளுடன் அதனை வரவேற்க வேண்டும். மரணத்துடன் நெருங்கிப் பழகுபவர்களான ராணுவத்தினரும்கூட அவர்களது நெறிப்படி மௌனமாக ஆடாமல்அசையாமல் நின்று அதற்கு மதிப்புத் தரவேண்டியதுதான்!

தூக்கிலிடப்படும் மனிதருக்கு ஏறக்குறைய முப்பத்தைந்து வயதிருக்கும். அவர் ராணுவத்தைச் சேர்ந்தவரல்ல. அவரது தோற்றத்தைக் கொண்டு தீர்மானிப்பதாயிருந்தால் அவரை ஒரு விவசாயி என்று கூறலாம். எடுப்பான தோற்றம் – கூரிய மூக்கு, உறுதியான உதடுகள், விசாலமான நெற்றி, அங்கிருந்து நேராகப் பின்னோக்கிச் சீவப்பட்டிருந்த நீண்ட தலைமுடி. மீசை வைத்திருந்தார். கூரான தாடி, கருமையான பெரிய விழிகள். கருக்குக் கயிற்றில்



அம்புரோஸ் பியர்ஸ்

கழுத்தைக் கொடுத்த ஒருவனிடம் யாரும் எதிர்பார்க்க முடியாத ஒரு கனிவை அவர் கண்கள் காட்டின. இந்த மனிதர் படு கொலை செய்தவரல்ல என்பது வெளிப்படை. ராணுவத்தின் தாராளமான சட்டதிட்டங்கள் பலரைத் தூக்கிலிடுவதற்கு இடமளிக்கின்றன. கண்ணியமான மனிதர்களும் கூட இதற்கு விலக்கல்ல.

தூக்கிலிடுவதற்கான ஆயத்தங்கள் முற்றுப் பெற்றுவிட்டன. ஏற்பாடுகள் எளிமையானவையாகத் தோன்றினாலும் சக்தி வாய்ந்தவை என்று எண்ணமிட்டார் தண்டனைக் குள்ளானவர். அவரது கண்களையோ முகத்தையோ அவர்கள் துணியினால் கட்டி வைக்கவில்லை. வெறி பிடித்துச் சுழன்றோடும் ஆற்று நீரின் மீது அவர் பார்வை படர்ந்தது. அதில் நர்த்தனமாடி மிதந்து சென்ற ஒரு மரத் துண்டு அவர் கவனத்தைக் கவர்ந்தது. அது தான் எவ்வளவு மெல்ல நகருவது போலத் தோன்றுகிறது! நிதானமாகப் பாயும் சோம்பேறி ஆறு அது!

வானத்திலிருந்து கீழே இறங்கிப் பூமியையே தன் வாசஸ்தலமாக்கிக் கொண்டு விட்டது போன்ற உதய சூரியனின் கிரணங்கள், தொடத் தங்கமாக மாறிய நீர், சற்றுத் தூரத்தில் ஆற்றின் கரையில் பலத்த யோசனையில் ஆழ்ந்திருப்பது போலக் கவிந்த மூடு பனி, கோட்டை, சிப்பாய்கள், மிதந்து சென்ற மரத் துண்டு எல்லாமே அவர் கவனத்தைக் கவர்ந்து மனத்தை அலைக் கழித்து விட்டன. இதற்கு மேலும் இடம் தராமல் தம்

"மனைவியையும் குழந்தைகளையும் சுற்றியே தம் இறுதி எண்ணங்களை ஒருநிலைப்படுத்தும் நோக்கத்துடன் அவர் இமைகளை மூடிக்கொண்டார். கண்ணுக்குக் கண்ணானவர்களைப் பற்றிய சிந்தனையைத் துளைத்துக் கொண்டு ஓர் ஒலி கேட்டது. அவரால் அதை அசட்டை செய்யவும் முடியவில்லை; புரிந்து கொள்ளவும் இயலவில்லை. தெளிவான கூரிய ஒலி அது. கருமான் சம்மட்டி கொண்டு அடிக்கும் போது எழும் ஓர் உலோக ஓசையைப் போலவே அலை அலையாகக் கிளம்பிச் செவிகளில் ரீங்காரமிடும் தன்மையை இந்த ஒலியும் பெற்றிருந்தது. அது என்ன ஒலி என்று வியப்புடன் யோசித்தார். அளவிட முடியாத தொலைவிலிருந்து அது வருகிறதா? அல்லது மிக அருகிலிருந்துதான் கேட்கிறதா? இரண்டுமேதான் என்று தோன்றியது! மீண்டும் மீண்டும் அதனைத் தப்பாமல் கேட்க முடிந்தது. ஆனால் சாவுமணி போல் நிதான



# கல்கி

## சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. ந.பை | ஆறு மாதம் ரூ. ந.பை |
|---|---|---|
| இந்தியா இலங்கை | 15—00 | 7—50 |
| பர்மா மலேயா வெளி நாடுகள் | 18—00 | 9—00 |

தனிப் பிரதி விலை 30 நயா பைசா

சந்தா தொகை முன்னதாக அனுப்பப்பட வேண்டும். வி.பி.பி. கிடையாது இலங்கை நேயர்கள் மட்டும் வி.பி.பி. மூலம் சந்தா தொகையைச் செலுத்தலாம்.

மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10


மாகத் தாமதித்து ஒலித்தது. பொறுமையின்றி அவர் ஒவ்வொரு முறையும் அது ஒலிக்கக் காத்திருந்தார். இனம் புரியாத ஒரு பயமும் அவரைச் சூழ்ந்தது. அந்த ஓசைகளுக்கிடையே நிலவிய மௌனமான இடைவெளிகளின் நேரம் படிப்படியாக நீண்டுகொண்டே போயிற்று. இந்தக் காலதாமதம் பைத்தியம் பிடிக்கச் செய்துவிடும் போல் இருந்தது. இடைவெளி நீளநீள ஒலியின் வலிமையும் கூர்மையும் பெருகிற்று. கத்தியைக் கொண்டு குத்துவதுபோல் அவ்வொலிகள் அவர் காதுகளைத் துளைத்தன. வீரிட்டு அலறி விடுவோமோ என்று அவர் அஞ்சினார். அவர் கேட்ட அந்த ஒலி—அவர் கடிகாரம் இயங்கும் போது எழும் ஓசை!

கண்களைத் திறந்து, மீண்டும் கீழே ஓடும் தண்ணீரைப் பார்த்தார். 'என் கைகளை மட்டும் விடுவித்துக்கொள்ள முடியுமானால் கழுத்துச் சுருக்கைக் கழற்றித் தூக்கி எறிந்து விட்டு ஆற்றில் குதித்து விடலாம். நீரில் மூழ்கி நீந்துவதன் மூலம் துப்பாக்கிக் குண்டுகளிலிருந்து தப்ப முடியும். விரைவாக நீந்திக் கரை ஏறி, காட்டுக்குள் புகுந்து ஓடி வீட்டை அடைந்து விடலாம். நல்லவேளையாக என் வீடு இன்னும் இவர்களது முன்னணிப் படைகளுக்கும் அப்பால்தான் இருக்கிறது. ஆக்கிரமிப்பாளர்கள் அதிகபட்சம் முன்னேறியுள்ள இடத்திலிருந்து என் மனைவியும் சின்னஞ்சிறு குழந்தைகளும் தொலைவிலேயே இருக்கின்றனர்—இவ்வாறு எண்ணமிட்டது அவர் மனம்.

வார்த்தைகளில் வடித்துக் கூற வேண்டியிருக்கும் இந்தச் சிந்தனைகள் மரணத்தின் வாயிலில் நின்ற அவர் மூளையில் உதயமாகவில்லை; பளிச்சிட்டன. அதே சமயத்தில் காப்டன் தண்டனையை நிறைவேற்றுமாறு ஸார்ஜண்டை நோக்கித் தலையசைத்துச் சமிக்ஞை செய்தார்.

பேட்டன் பார்க்கர் வசதியான வாழ்க்கை நடத்தும் ஒரு விவசாயி. அலபாமாவில் மரியாதைக்குரிய பழைமையான குடும்பம் ஒன்றைச் சேர்ந்தவர். பல அடிமைகளுக்கு எஜமானராக இருந்ததாலும், அடிமைகளை அடக்கி ஆண்ட மற்ற முதலாளிகளைப் போலத் தாமும் ஓர் அரசியல்வாதியாக விளங்கியதாலும் ஐக்ய அமெரிக்காவை விட்டுத் தாம் வாழும் தென் பகுதி தனியே பிரிந்து விடுவதை அவர் விரும்பியது இயல்புதான். தென்னகத்தின் இலட்சியங்களில் அவர் ஆழ்ந்த பற்றுதல் கொண்டிருந்தார். அத்தியாவசியமான சில சூழ்நிலைகள் காரணமாக — அவற்றை இங்கே விவரிக்கத் தேவையில்லை — காரின்த் நகர வீழ்ச்சியுடன் முடிவடைந்த யுத்தங்களில் அவர் பங்கு கொள்ள வில்லை. விபரீதமான விளைவுகளுக்கு உள்ளானபோதிலும் வீரப் போர் புரிந்த பட்டாளத்தில் ஒருவராக அவர் பணியாற்ற முடியவில்லை. அவமானத்துக்குரிய இந்தக் கட்டுப்பாடு அவரைத் துடிதுடிக்கச் செய்தது. பொங்கி எழும் வீர உணர்ச்சிகளுக்கு ஒரு வடிகால் இல்லாது அவர் ஏங்கினார். ராணுவ வீரனுடைய வாழ்க்கையைத் தாமும் அனுபவிக்கும் சந்தர்ப்பம் வரும் என்று நம்பியிருந்தார். யுத்த சமயங்களில் எல்லாருக்கும் கிட்டக்கூடிய வாய்ப்புத்தானே அது? இதற்கிடையில் தம்மால் இயன்றதை அவர் செய்து கொண்டிருந்தார். தென்னகத்துக்கு உதவும் பொருட்டு அவர் எந்தப் பணியையும், அது எவ்வளவுதான் அவரைச் சிறுமைப்படுத்துவதாக இருந்தபோதிலும் செய்யத் தயங்கியதில்லை. ராணுவத்தில் சேராத, ஆனால் வீர உள்ளம் படைத்த ஒருவனது பண்புக்கு ஏற்றதாக இருந்த எந்தச் சிரச் செயலையும், அது எவ்வளவு ஆபத்தான காரியமாக இருந்தாலும் சரி, அவர் மேற்கொள்ளத் தயங்கியதில்லை.

ஒரு நாள் மாலை. தங்கள் நிலத்தின் நுழைவாயிலில், ஒழுங்கில்லாமல் தாறுமாறாகத் தயாரிக்கப்பட்டிருந்த விசுப்பலகையொன்றில் பார்க்கரும் அவர் மனைவியும் அமர்ந்திருந்தனர். சாம்பல் நிறத்தில் ராணுவ உடுப்பு அணிந்த குதிரைவீரன் ஒருவன் வாயிலை அணுகிக் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டான். வெண்மையான தன் கரங்களாலேயே அவனுக்கு உதவுவதில் பார்க்கரின் மனைவிக்குப் பெரு மகிழ்ச்சி.

அவள் தண்ணீர் கொண்டு வரப் போயிருக்கையில் அவள் கணவர், புழுதி படிந்த அந்தக் குதிரை வீரனை நெருங்கிப் போர் முனைச் செய்திகள் பற்றி ஆவலுடன் கேட்டார்.

''யாங்கிகள் இருப்புப் பாதைகளைப் பழுது பார்த்துக் கொண்டிருக்கின்றனர். மேற்கொண்டு முன்னேறவும் ஆயத்தம் செய்து வருகிறார்கள். அவர்கள் 'அவுல்கிரீக்' பாலத்தை அடைந்து விட்டனர். அதைச் செப்பனிட்டு வடகரையில் தற்காப்புக்காக மரக் கோட்டை ஒன்றும் அமைத்துள்ளனர். தளபதி ஓர் உத்தரவு பிறப்பித்துள்ளார். எல்லா இடங்களிலும் அது ஒட்டப்பட்டுள்ளது. 'இருப்புப் பாதைகளிலோ, பாலங்களிலோ, புகைவண்டிகளிலோ அல்லது அவை புகுந்து செல்லும் குகைப் பாதைகளிலோ யாரேனும் விஷமம் செய்கை



# புது உருப்புகள் வாங்கும் செலவைக் குறையுங்கள். தேய்ந்துபோன உருப்புகளை டிவிஎஸ் புதுப்பிக்கட்டும்





## புதுப்பிக்கும் செலவு புதிய விலையில் மூன்றில் ஒரு பாகத்திலும் குறைவு

ஓயாமல் வேலை செய்வதால், உருப்புகள் தேய்ந்து போகும், தேய்ந்துபோன உருப்புகளை டிவிஎஸ் புதுப்பிக்கட்டும். அவை புதிய உருப்புகளைப் போலவே உழைக்கும்.

டிவிஎஸ்ஸில் கீழ்க்காணும் தேய்ந்து போன உருப்புகளை புதுப்பித்துப் புத்துயிர் அளிக்கின்றனர்.

மெயின் ஆக்ஸில் • ஹாங்கர்ஸ்
ஸ்டப் ஆக்ஸில் • ஷாக்கிள்ஸ்
ஹப் • கிளட்ச் பிரஷர் பிளேட்
புரொபெல்லர் ஷாப்ட் — யோக்

JWT/TVS-RC-1443a

டிவிஎஸ்ஸில் புதுப்பித்தால் புதிய உருப்பு வாங்கும் செலவு குறைகிறது. பஸ், லாரி, கார் நிற்காமல் ஓடிக்கொண்டிருக்கும்— வருமானம் பாதிக்கப்படாது



**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்**
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர்

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**
மதராஸ் — பெங்களூர் — செகந்திராபாத்

# உங்கள் வீட்டில் வலியின் தொல்லை இல்லாமல் செய்ய...




# ஸாரிடான்

## உபயோகியுங்கள்

தலைவலி, உடம்புவலி, பல்வலி, ஜுரம் போன்ற உணர்ச்சி, தேக அசௌக்கியம் முதலானவைகளால் உங்கள் குடும்பத்தினர் வருந்தினால் அவர்களுக்கு ஸாரிடான் கொடுங்கள். விரைவில் சிறிதும் அபாயமின்றி நிச்சயமாக நிவாரணமளிக்கும். அத்துடன் ஸாரிடான் தெம்பையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும்! பெரியவர்களுக்கு ஒரு ஸாரிடான் வில்லை ஒரு பூர்த்தியான டோஸ். குழந்தைகளுக்கு ¼ முதல் ½ வில்லை வரை போதுமானது.







**ஒரே வில்லை போதும்**

ஒரு வில்லை 13 நயா பைசா

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்டிரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

JWT-VT-2008

யில் கைது செய்யப்பட்டால் சம்பிரதாயமான நீதி விசாரணைகள் ஏதுமின்றித் தூக்கிலிடப்படுவார்கள்' என்று உத்தரவு அறிவிக்கிறது. நானே அந்த உத்தரவைப் பார்த்தேன்.''

''அவுல் கிரீக் பாலம் எவ்வளவு தூரம் இருக்கும்?'' என்று பார்க்கர் கேட்டார்.

''ஏறத் தாழ முப்பது மைல்கள்.''

''ஆற்றின் இந்தப் பக்கத்தில் பட்டாளமேதுமில்லையா?''

''அரை மைல் தொலைவில் ரயில் பாதையை ஒட்டினாற் போல் ஒரு ரோந்து நிலையம். பாலத்தின் இந்தக் கோடியில் ஒரே ஒரு காவலாளி. அவ்வளவுதான்.''

''தூக்கு தண்டனையைப் பற்றி நன்கு அறிந்த ஒரு மனிதன், ரோந்து நிலையத்தில் சிக்கிவிடாமல் நழுவிச் சென்று, காவலாளியையும் சமாளித்து விட்டானானால், அவன் என்ன சாதிக்க முடியும்?'' என்று புன்முறுவல் பூத்த வண்ணம் பார்க்கர் கேட்டார்.

வீரன் யோசித்தான். ''ஒரு மாதத்துக்கு முன்பு அங்கு நான் போயிருந்தேன். மாரிக் காலத்து வெள்ளம் ஏராளமான கள்ளிகளை அடித்துக் கொண்டு வர, பாலத்தின் இந்தக் கோடியிலுள்ள மரத் தூண்களில் அவை சிக்கிக் குவிந்திருக்கின்றன. வெள்ளம் வடிந்து விட்டபடியால் இப்போது நன்கு உலர்ந்திருக்கின்றன. காய்ந்த சணல் நாரைப் போல் எரியும்.''

இந்தச் சமயத்தில் பார்க்கரின் மனைவி கொண்டு வந்து கொடுத்த தண்ணீரை வீரன் குடித்தான். சம்பிரதாயமான முறையில் அவளுக்கு நன்றி செலுத்தினான். அவன் கணவனையும் தலைகுனிந்து வணங்கினான். குதிரையில் ஏறிச் சென்று விட்டான். ஒரு மணி நேரம் கழித்து, இருட்டிய பின்னர் அவன் மீண்டும் அந்தத் தோட்டத்தைக் கடந்து சென்றான். வடக்கே, தான் வந்த திசையை நோக்கித் திரும்பிப் போனான்.

அவன் ஒரு மத்திய அரசாங்க ஒற்றன்.

* * *

**பா**லத்திலிருந்து பேட்டன் பார்க்கர் கீழ் நோக்கி விழுகையில் நினைவிழந்ததுடன் இறந்து விட்ட ஒருவரைப் போல்தான் இருந்தார். தொண்டையில் ஏதோ கடுமையாக அழுத்தி வலி உண்டாக்கியதால் இந்நிலையிலிருந்து விழிப்புற்ற போது பல யுகங்களாகி விட்டாற் போல அவருக்குத் தோன்றியது. தொடர்ந்து மூச்சுத் திணறும் உணர்ச்சியும் ஏற்பட்டது. கழுத்தில் வலி உருவாகி உடலிலும் உறுப்புக்களிலும் இருந்த நரம்புகள் அனைத்தின் வழியாகவும் கீழ் நோக்கிப் பாய்ந்து தெறிப்பதாகப் பட்டது. வலி குறிப்பிட்ட சில பாதைகளில் பரவியதுடன் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத ஒரு வேகத்தில் அவை திரும்பத் திரும்பத் தாக்குவது போலும் இருந்தது. சகிக்க முடியாத அளவுக்குத் தம்மை உஷ்ணிக்கச் செய்யும் கொழுந்து விடும் நெருப்பு ஆறுகளாக அவை அவருக்குத் தோன்றின.

சிந்திக்கும் ஆற்றல் அவருக்குத் திரும்பியது. கயிறு அறுந்து தாம் ஆற்றில் விழுந்து விட்டது அவருக்குத் தெரியும். மேற்கொண்டு அவருடைய கழுத்து நெரியவில்லை என்றாலும் கழுத்தைச் சுற்றியிருந்த சுருக்கு ஏற்கனவே அவரை மூச்சுத் திணற வைத்துக் கொண்டுதானிருந்தது. சுவாசப் பைக்குள் தண்ணீர் புகுந்து விடாமல் தடுத்ததும் அதுதான். தூக்கிலிடப் படுபவன் ஆற்றின் அடிவாரத்தில் சாவானேன்? இந்த எண்ணம் நகைப்புக்கு இடமளிப்பதாகப் பட்டது அவருக்கு.



கண்களைத் திறந்தார். தமக்கு மேலே ஒளிக் கீற்று ஒன்றினைக் கண்டார். ஆனால் எட்டாத தொலைவில் அல்லவா இருக்கிறது அது! அந்த ஒளி மங்கி மங்கிக் கடைசியில் மின்னி மறையும் ஒரு மெல்லிய ரேகையாகி விட்டதிலிருந்து தாம் இன்னமும் மூழ்கிக் கொண்டிருப்பதை அறிந்தார். பின்னர் ஒளி வளர்ந்து பிரகாசமடைந்தது. தாம் முன்னைக்கு இப்போது ரொம்பவும் சௌகரியமாக இருப்பது அவருக்குத் தெரிந்தது. 'தூக்கிலிடப்பட்டுப் பின்னர் நீரில் மூழ்குவது கூட அவ்வளவு மோசமில்லை; ஆனால் நான் வெடிகுண்டுக்கு இரையாவதை விரும்பவில்லை. அதற்கு இடமளித்துவிட மாட்டேன். அது நியாயமாகாது!' என்று அவர் நினைக்கலானார்.

மணிக்கட்டில் ஏற்பட்ட குத்தும் வலிதான் கரங்களை விடுவித்துக்கொள்ளத் தாம் முயன்று கொண்டிருப்பதை அவருக்கு அறிவித்ததேயன்றி அதற்காகப் பிரயத்தனப்படுவதாக உணர்வேதும் அவருக்கில்லை. செப்பிடு வித்தைக்காரனின் சாதனையைச் சோம்பேறி ஒருவன் விளைவுகளில் அக்கறையின்றிப் பார்ப்பது போல் அந்தப் போராட்டத்தை அவர் கவனித்தார். என்ன அற்புதமான முயற்சி! என்ன அபாரமான அரக்க பலம்! சபாஷ்! கயிறு விலகி விழுந்தது. கரங்கள் பிரிந்து மேல் நோக்கி மிதந்தன. அதிகரித்துக் கொண்டே வரும் வெளிச்சத்தில் இரு புறங்களிலும் கைகளை இலேசாகப் பார்க்க முடிந்தது. முதலில் ஒரு கையும் அப்புறம் மற்றொன்றும் தம் கழுத்தைச் சுற்றியுள்ள சுருக்கின் மீது பாய்வதை அவர் புதியதோர் ஆர்வத்துடன் நோக்கினார். கயிற்றைப் பிய்த்து இழுத்த கரங்கள் வேகத்துடன் அதனை அப்பால் எறிந்தன. நீர்ப் பாம்பை ஒத்திருந்தன அதன் நெளிவுகள்.

''அதைத் திரும்பவும் மாட்டிவிடு! திரும்பவும் மாட்டிவிடு!'' - கழுத்திலிருந்த சுருக்கு அகற்றப்பட்டதைத் தொடர்ந்து அதுவரை அனுபவித்தே யிராத கடும் வலி ஏற்பட்டதனால் தம் கரங்களுக்கு இவ்வாறு உரக்கக் கட்டளை இட்டதாக அவர் நினைத்தார். சகிக்க முடியாத அளவுக்குக் கழுத்து

வலித்தது மூளை அனலாகக் கொதித்தது. அதுவரையில் சக்தியிழந்து இலேசாகப் படபடத்துக் கொண்டிருந்த இருதயம் ஒரே எட்டில் வாய் வழியே திமிறிக் கொண்டு வெளிவர முயன்றது. இறுக்கி முறுக்கப்பட்ட உடம்பு தாங்க முடியாத வேதனையைத் தந்தது.

ஆனால் அவர் வார்த்தைகளுக்குக் கீழ்ப்படியாத கரங்கள் அந்தக் கட்டளையை மதிக்கவில்லை. தண்ணீரைப் பலமாக அடித்தும் வேகமாகக் கீழ் நோக்கிச் செயல்பட்டும் அவரை மேலே உந்தித் தள்ளின. தண்ணீரை விட்டுத் தலை வெளிப்படுவதை உணர்ந்தார். சூரிய ஒளி கண்களைக் குருடாக்கியது. மார்பு இறுக்கமாக விம்மிப் புடைத்துக் கொண்டது. அதுவரை அவர் அனுபவித்த துன்பங்களுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போன்ற வலியுடன் நுரையீரல்கள் பெருமளவுக்குக் காற்றை விழுங்கின. வீரிட்டு அலறியபடியே அதனை உடனடியாக வெளியேற்றினார்.

ஐம்புலன்களும் இப்போது கட்டுக்கடங்கி நடந்தன. அதோடு வழக்கத்தைக் காட்டிலும் விழிப்போடிருந்து சிறப்பாகச் செயலாற்றின. தேகத்தின் இயல்பான இயக்கத்துக்கு ஏற்பட்ட இன்னல்களும் இடையூறுகளும் புலன்களைப் புதுப்பித்து உயரிய நிலைக்குக் கொணர்ந்திருந்தன. அதனால் முன்பு கவனித்தறியாத விஷயங்களெல்லாம்கூட இப்போது நன்றாகப் புலனாகிப் பதிந்தன. சிற்றலைகள் தமது முகத்தில் படுவதை அவர் அனுபவித்தார். அவை தட்டும் போது ஏற்படும் தனித்தனி ஒலிகளைக் கேட்டார். ஆற்றங்கரையிலிருந்த வனத்தைப் பார்த்தார். ஒவ்வொரு மரத்தையும் இலைகளையும் ஒவ்வோர் இலையிலுமுள்ள நரம்புகளையும் கண்டார். அவற்றின் மீதிருந்த பூச்சிகள்கூட அவர் கண்களுக்குத் தென்பட்டன. வெட்டுக்கிளிகளையும் மினுமினுப்பான மேனியுடன் கூடிய ஈக்களையும் துளிர் விடும் சிறு கிளைகளுக்கிடையில் வலை பின்னும் சாம்பல் நிறச் சிலந்திகளையும் பார்த்தார். புல்தரையில் கோடிக்கணக்கான இலைகளின் மேல் படிந்திருக்கும் எல்லாப் பனித் துளிகளிலும் வான வில்லின் வர்ண ஜாலங்களைக் கவனித்தார். ஆற்றின் சுழிப்புகளுக்கு மேல் நர்த்தனமாடும் கொசுக்களின் ரீங்காரம், தட்டாம் பூச்சிகள் இறக்கைகளை அடித்துக் கொள்ளும் ஒலி, நீர்ச் சிலந்திகளின் கால்கள் நீரை நீவும் போது எழும் மெல்லிய ஓசை - இந்த இன்னிசைகளை யெல்லாம் அவர் கேட்க முடிந்தது. பார்த்துக் கொண்டேயிருக்கையில் ஒரு மீன் நழுவிச் சென்றது. நீரைக் கிழித்துக் கொண்டு அது விரைந்த ஒலியை அவர் கேட்டார்.

ஆறு பாயும் திக்கைப் பார்க்க அவர் மேல் மட்டத்துக்கு வந்திருந்தார். விநாடிப் பொழுதில் அவர் கண்களுக்குப் புலப்பட்ட உலகம் அவரை மையப் புள்ளியாகக் கொண்டு மெல்லச் சுழலத் தொடங்கி விட்டதாகத் தோன்றியது. பாலத்தையும் கோட்டையையும் மரண தண்டனையை நிறைவேற்றும் பொருட்டுப் பாலத்தின் மீதிருந்த காப்டன், சார்ஜண்ட், இரு சிப்பாய்கள் ஆகிய ராணுவ வீரர்களையும் அவர் பார்த்தார். நீல வானத்துக்கு எதிராக அவர்கள் நிழலுருவங்களாகத் தெரிந்தார்கள். அவரைச் சுட்டிக்காட்டியும் கையை அசைத்து ஜாடை காட்டியும் அவர்கள் கூச்சல் போட்டார்கள். காப்டன் கைத் துப்பாக்கியை உருவியிருந்தார்; ஆனால் சுடவில்லை. மற்றவர்கள் நிராயுதபாணிகளாக நின்றார்கள். பூதாகாரமான உருவங்களாகத் தோன்றிய அவர்களது நடமாட்டம் அஷ்டகோணலாகவும் பயங்கரமாகவும் இருந்தது.

திடீரென்று கூரிய ஒலி ஒன்றைக் கேட்டார் அவர். தலையிலிருந்து சில அங்குல தூரத்துக்குள்ளாகப் பளிச்சென்று ஏதோ தண்ணீரைத் தாக்கி நீர்த் துளிகளை வாரி அடித்தது அவர் முகத்தில். இரண்டாவது தடவையும் அந்தச் சத்தம் கேட்டது. காவலாளிகளுள் ஒருவன் தனது தோளில் துப்பாக்கியைத் தாங்கி யிருப்பதையும் துப்பாக்கியின் வாயிலிருந்து நீல நிறப் புகை இலேசாகக் கிளம்புவதையும் அவர் கண்டார்.....

பார்க்கர் நீரில் மூழ்கினார். எவ்வளவு ஆழப் போக முடியுமோ அவ்வளவு ஆழ மூழ்கினார். நயாக்ரா அருவியின் முழக்கம் போல் தண்ணீர் அவர் காதுகளில் உறுமியது. அப்படியிருந்த போதிலும் இடியோசை போல் குண்டுமாரி பொழியும் ஓசை மங்கிக் கேட்டது. மீண்டும் மேல் பரப்பை நோக்கி அவர் எழும்புகையில் பளபளக்கும் உலோக குண்டுகள் ஆடியசைந்தவண்ணம் மெதுவாகக் கீழ் நோக்கிப் போய்க் கொண்டிருந்தன. அவற்றில் சில அவர் முகத்திலும் கையிலும் பட்டுப் பின்பு விழுந்தன. தொடர்ந்து கீழ் நோக்கிப் பயணமாயின. ஒன்று அவர் தோள் பட்டைக்கும் கழுத்துக்கும் இடையில் தங்கியது. அசௌகரியமான அளவுக்கு அது சூடாக இருந்ததால் அவர் அதை உடனே பிடுங்குவதைப் போல் எடுத்து எறிந்தார்.

மூச்சுவிடத் துடித்தவண்ணம் அவர் நீர் மட்டத்தை அடைந்தபோது தாம் நீண்ட நேரம் நீருக்குள்ளேயே இருந்து விட்டதை அறிந்தார். ஆறு பாயும் திசையில் கணிசமான அளவு முன்னேறிப் பத்திரமான இடத்துக்கு அருகில் வந்து விட்டிருப்பதைக் காண முடிந்தது. இப்போது நீரோட்டத்துடன் வெகு வேகமாக நீந்திக் கொண்டிருந்தார் அவர்.

திடீரென்று அவர் ஒரு சுழலில் சிக்கிப் பம்பரமாகச் சுழன்று கொண்டிருந்தார். தண்ணீர், ஆற்றங் கரைகள், காடு, வெகு தொலைவில் தென்பட்ட பாலம், கோட்டை, மனிதர்கள் எல்லாம் தெளிவாகப் புலப்படாத வகையில் ஒன்றோடொன்று இரண்டறக்கலந்துபோயின. சில விநாடிகளில் அவர் இடது பக்கம் ஆற்றங்கரையின் அடிவாரத்தில் தூக்கி எறியப்பட்டார். மணலில் விரல்களைப் புதைத்து அள்ளி அள்ளித் தம் மீதே போட்டுக் கொண்டதுடன் வாய் விட்டு அதனை வாழ்த்தினார். வைரங்களாகவும் மாணிக்கங்களாகவும் வைடூரியங்களாகவும் அவை காட்சியளித்தன........

பகல் பொழுது முழுதும் அவர் நடந்து கொண்டே யிருந்தார். அந்தக் காட்டுக்கு

முடிவே இராது போல் தோன்றியது: இத்தகையதொரு அத்துவானக் காட்டுப் பகுதியில் தாம் வாழ்ந்து வந்தது அன்று வரையில் அவருக்கே தெரியாது.

இருள் கவியும் நேரத்தில் அவர் களைத்துப் போனார். பாதங்கள் புண்ணாகி விட்டன. பசி வாட்டியது. மனைவியையும் மக்களையும் பற்றிய எண்ணமே அவரை வற்புறுத்தி நடக்க வைத்தது. கடைசியில் ஒரு சாலையைக் கண்டார். அது சரியான பாதைதான் என்பது அவருக்குத் தெரியும். நகரத்துச் சாலை போல் அகலமாகவும் நேராகவும் அது சென்றது. இருந்தும் யாருமே பிரயாணம் செய்யாத ஒரு பாதையாகத் தோன்றியது. அதன் பக்கங்களில் வயல்கள் ஏதும் இல்லை. வீடுகளோ, குடிசைகளோ ஒன்றையுமே காணோம். மானிடர்கள் வாழ்வதைக் குறிக்க ஒரு நாய் குரைக்கும் சத்தம்கூடக் கேட்கவில்லை. மரங்களின் கரிய உருவங்கள் சாலையின் இரு மருங்கிலும் இரு சுவர்களாகக் காட்சியளித்தன; அடிவானத்தில் ஒரு புள்ளியாக அவை முடிவுற்றன. காட்டினூடே இருந்த இந்த இடைவெளி வழியாக அவர் அண்ணாந்து பார்த்த போது, தலைக்கு மேலே, பழக்கமில்லாத பாணியில் பொன்னிறமான பெரிய பெரிய விண்மீன்கள் ஒளிர்வதைக் கண்டார். இதற்கு சூட்சுமமான முக்கியத்துவம் ஏதோ உண்டு என்று அவர் உறுதியாக நம்பினார். இரு புறத்திலும் உள்ள காடுகளை விநோதமான சத்தங்கள் நிரப்பின. அவற்றில் ஒரு தடவை, இரு முறை, மீண்டும் ஒரு முறை – புரியாத மொழியில் மென்குரலில் பேசப்படும் ஏதோ சில சொற்களைத் தெளிவாகக் கேட்டார்.

கழுத்து வலித்தது. கையால் தடவிப் பார்த்து, அது பெரிதும் வீங்கியிருந்ததைக் கண்டார். கயிறு புண்படுத்திய இடத்தில் கருமையான ஒரு வளையம் விழுந்திருப்பது அவருக்குத் தெரியும். கண்கள் பஞ்சடைந்தன. அவரால் இனிமேல் கண்களை மூட முடியாது. தாகத்தால் நாக்கு வறண்டு, வீங்கியிருந்தது. பற்களின் வழியாக நாக்கை வெளியே காற்றுக்குள் நீட்டி அதன் ஜுரத்தைச் சிறிது தணித்தார். நடமாட்டமில்லாத அந்தச் சாலையில் ஜமக்காளம் விரித்தாற் போல் எவ்வளவு மென்மையாகப் புல் படர்ந்திருக்கிறது! இதன் பிறகு தம் பாதங்களுக்கு அடியில் பாதையொன்று இருப்பதையே அவரால் உணர முடியவில்லை.

துன்பம் அநுபவித்தபோதிலும்கூட, நடக்கும் போதே அவர் தூங்கி விட்டிருக்கிறார் என்பதில் ஐயமில்லை. ஒருவேளை ஜன்னி கண்ட நிலையிலிருந்து அவர் விடுபட்டிருக்கலாம். ஏனெனில் இப்போது அவர் பார்ப்பது வேறொரு காட்சி. அவர் தம் இல்லத்தின் வாயிலில் நிற்கிறார். அவர் விட்டுச் சென்றது போலவே எல்லாம் இருந்தன. காலைச் சூரிய ஒளி எல்லாவற்றுக்கும் அழகூட்டிப் பொலியச் செய்தது. இரவு முழுவதும் அவர் பிரயாணம் செய்திருக்க வேண்டும். வாயில் கதவைத் தள்ளித் திறந்து, அகலமான வெள்ளை நடைபாதை வழியாக மேலே நகருகையில் பெண் ஒருத்தியின் உடை காற்றில் படபடக்கக் காண்கிறார். அன்றலர்ந்த மலர் போல் தண்ணென்று இனிமையாகக் காட்சி தரும் அவரது மனைவி அவரை எதிர்கொண்டு வரவேற்க வராந்தாவிலிருந்து கீழே இறங்குகிறாள். கீழ்ப்படியில் அவள் காத்து நிற்கிறாள்: சொல்லி முடியாத சந்தோஷத்தில் மலர்ந்த புன்னகை தோற்றத்தில் ஈடு இணையற்ற ஒயில்; கண்யம் இவற்றுடன் அவள் எவ்வளவு அழகாக இருக்கிறாள்! விரிந்த கரங்களுடன் அவர் அவளை நோக்கித் தாவுகிறார். அவளை அவர் அணைக்கப் போகும் தருணத்தில் கழுத்தின் பின்புறத்தில் கதிகலங்க வைக்கும் ஓர் அடி விழுவதை உணர்கிறார். கண்ணைக் குருடாக்கும் வெள்ளை ஒளி ஒன்று அவரைச் சுற்றி ஜகஜ்ஜோதியாக மின்னுகிறது. கூடவே பீரங்கி அதிர்வது போன்ற பேர் ஒலி. அப்புறம் ஒரே இருட்டு; மௌனம்!

பேட்டன் பார்க்கர் இறந்து விட்டார். அவரது உடல் பிளந்த கழுத்துடன் அவுல் கிரீக் பாலத்தின் உத்தரங்களுக்குக் கீழ் மெதுவாக ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கத்துக்கு அசைந்தாடிக் கொண்டிருந்தது.

** ** **

இக் கதை பிறந்த கதை: பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியில் அமெரிக்கா பிளவுபடத் தயாராக இருந்தது. வடக்கே தொழிற்சாலைகளும் வியாபாரமும் பெருகின. தெற்கே விவசாயம் தழைத்தது. நீக்ரோ அடிமைகளின் உழைப்பிலே அங்கு பருத்தி, தேயிலைத் தோட்டங்கள் செழித்தன. பருத்தியை விற்றுப் பணம் குவிக்கும் வடக்கத்திய வியாபாரிகளைக் கண்டு பொறுமல், தங்கள் பிற்போக்குக்குக் காரணம் வடக்கேயுள்ளோரின் ஆதிக்க வெறிதான் என்று குற்றம் சாட்டினர் தென்னக மக்கள். அடிமைகளை அடக்கி ஆளும் தென்னக மக்களின் மனப்பான்மையைக் கொண்டே அவர்களது பிற்போக்குப் புத்தியைக் கணிக்கலாம் என்றனர் வடக்கே இருந்தோர்.

இப்படியாக ஒரு குழப்பச் சூழ்நிலையே உருவாகி விட்டது. இரு பகுதி மக்களும் மனம் புகைந்தனர். என்ன செய்வது, ஏது செய்வது என்று தெரியாமல் தவித்தனர். இந்நிலையில் தங்களை அடிமைத்தளையிலிருந்து விடுவிக்க வந்த ஆண்டவனாகவே ஆப்ரஹாம் லிங்கன் காட்சி தந்தார், நீக்ரோக்களுக்கு.

அவர் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் தென் ராஜ்யங்கள் தனியே பிரிந்து போய் விடுமென்பது நிச்சயமாயிற்று. மத்திய ஆட்சியை விட்டு இப்படிப் பிரிந்து போகத் தென் பகுதி ராஜ்யங்களுக்குச் சட்டப்படி உரிமை இல்லை என்றார் ஜனாதிபதி லிங்கன். என்றும் போல இணைந்து வாழ அவர் விடுத்த அழைப்பைத் தென்னக மக்கள் லட்சியம் செய்யவில்லை.

அதன் பலன்...?

1861-ம் வருஷம் ஏப்ரல் 12ல் அன்று பீரங்கிகள் முழங்கின. அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் ஆரம்பமாகி விட்டது.

இந்த உள்நாட்டு யுத்தத்தின் போது நிகழ்ந்ததாக இச் சிறுகதையைப் புனைந்திருக்கிறார் உலகப் புகழ் பெற்ற அமெரிக்க எழுத்தாளர் அம்புரோஸ் பியர்ஸ்.

ஆஹா !
உங்கள் தோற்றம்
ஒப்பற்ற கவர்ச்சி
பெற்றிருக்கிறது !
காரணம் . . .



# மபத்லால் க்ரூப்

## ப்ரிண்டட் பாப்ளின்கள்

நியூ ஷர்ராக் (ஷர்ராக்), அஹமதாபாத். நியூ ஷர்ராக், நாதியாத்
ஸ்டாண்டர்ட், பம்பாய். ஸ்டாண்டர்ட் (நியூ சைனா), பம்பாய்.
ஸ்டாண்டர்ட், டிவால். ஸஸ்ஸூன், பம்பாய்.
ஸஸ்ஸூன் (நியூ யூனியன்), பம்பாய். சூரத் காட்டன், சூரத்.
மபத்லால் பைன், நவ்ஸாரி. ககல்பாய் ஜூட், கல்கத்தா.
இந்தியன் டைஸ்டப், பம்பாய்.



தங்க, வைர
நகைகளுக்கும்
வெள்ளிப்
பாத்திரங்களுக்கும்
நம்பிக்கையான
இடம்.

## நட்வர்லால் கோவிந்த்ஜி ஜவேரி

அம்ருத்லால் மேன்ஷன், லகம்ஸி நப்பூ ரோடு.
மாதுங்கா, பம்பாய்-19. டெலிபோன் : 61726

**எங்கள் ஏர்கண்டிஷன் ஷோருமிற்கு விஜயம் செய்யுங்கள்.**

NG-74

## நீங்கள் உறங்கும்போதே ஆஸ்தமா சளிகரைகிறது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைப்படுதல், ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப் பைகள் சுவாசக் குழாய்கள் மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

## எக்ஸிமா சொறி

உங்கள் சருமத்தில் சுமார் 5 கோடி மெல்லிய துவாரங்களும் மடிப்புகளும் உள்ளன. கிருமிகள் அவைகளில் மறைந்திருந்து, தாங்கமுடியாத அரிப்பு, வெடிப்பு,மேலாகப் பரவும் படை, தோல் உரிதல்,எரிச்சல், பருக்கள், படர்தாமரை காலில் அரிப்பு முதலிய உபாதைகளை உண்டுபண்ணுகின்றன. சாதாரண சிகிச்சைகள் தற்காலிகமான நிவாரணம் அளிக்கும். ஏனெனில், அதன் மூலம் உபாதைகளுக்கு மூலகாரணமான கிருமிகள் அழிவதில்லை. விஞ்ஞான முறையில் தயாரித்த இந்த மருந்து, நிக்ஸோடர்ம் (Nixoderm) துரிதமாக இந்தக் கிருமிகளைக் கொன்றுவிடுகிறது. மற்றும் உங்கள் சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் வசீகரமாகவும் இருக்கச் செய்கிறது. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். சரும உபாதைகளின் மூலகாரணமான கிருமிகளை நிக்ஸோடர்ம் நிச்சயமாக அழிக்குமென்ற பூரண நம்பிக்கையுடன் வாங்குங்கள்.

# படித்துப் பாருங்கள்



## லஹர் (ஹிந்தி மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகை, 'நவீன கதை மலர்' என்று ஒரு விசேஷ மலர் வெளியிட்டு இலக்கியத்துக்கு அரும் பெரும் தொண்டாற்றி யிருக்கிறது. ஹிந்திக் கதைகளோடு, தமிழ், தெலுங்கு, மலையாளம், மராட்டி, வங்காளி போன்ற மொழிகளின் சிறந்த சிறு கதைகளையும் தேர்ந்தெடுத்து மொழி பெயர்த்து வெளியிட்டிருப்பது குறிப்பிடத் தக்கதொரு விசேஷமாகும். நம் நாட்டு மொழிகள் ஒன்றோடு ஒன்று இணைந்து போட்டி போட்டுக் கொண்டு வளரவும், இலக்கியத்தில் அழியாத பெயர் பெறவும் இம் முயற்சி ஒரு தூண்டுகோலாகும்.

அதோடு, கதை வளர்ச்சியைக் குறித்துப் புகழ் பெற்ற ஆசிரியர்களின் கருத்துக்களையும் சேகரித்து வெளியிட்டிருப்பது இம் மலருக்கு ஒரு தனிச் சிறப்பை அளிக்கிறது. கதை இலக்கியம் நல்ல முறையில் வளர இம்முயற்சி பெரிதும் உதவும்.

கிடைக்கும் இடம்: லஹர் காரியாலயம்; கச்சேரி ரோடு, தபால் பெட்டி நம்பர் 82, அஜ்மீர். ஆண்டுச்சந்தா ரூ.6. விசேஷ மலர் விலை ரூ. 2.50

## என் பதவி கால நினைவுகள்

முழு வாழ்வு வாழும் பெரியார்களிலே தலைசிறந்துநிற்கும் சர் எம். விசுவேசுவரய்யா அவர்கள், தம் பதவிக் காலத்தில், தாம் செய்த அரும் பெரும் சாதனைகளை இந்நூலில் வெகு அடக்கமாகவும் அழகாகவும் கூறியிருக்கிறார். அவர் அறிவுத் திறனும் கைத்திறனும் பட்டு, எந்த எந்த நகரங்கள் எப்படி எப்படி வளம் பெற்றுள்ளன, எந்த எந்த அணைகள் நாட்டின் செல்வத்தை வளர்த்துள்ளன என்பதையெல்லாம் இந்த நூலில் காணலாம். மைசூர் திவானாகப் பதவியேற்று அவர் செய்த பணிகளையும் அந் நகரைச் சௌந்தர்ய நகராக்கிய அவர் மேதையையும் கண்டு ஒவ்வோர் இந்தியனும் பெருமைப் படலாம். நாட்டின் பணியே நற்பணி என்னும் பேருண்மையைத் தம் வாழ்க்கை லட்சியமாக நிலைநாட்டிய ஸ்ரீ விசுவேசுவரய்யாவின் இந்நூலைப் பெரும் பொக்கிஷமாகவே கருதலாம். தமிழாக்கம் நல்ல முறையில் அமைந்துள்ளது.

வெளியிட்டோர்: தி இண்டஸ்டிரியல் லேபர் வெல்பேர் அசோஸியேஷன் லிமிடெட், கோபால் பாக், கோயமுத்தூர்-1. விலை குறிப்பிடப்படவில்லை.

## பெலப்பனீசியப் போர் வரலாறு

வரலாற்று ஆசிரியர்களிலே மிகப் புகழ் பெற்ற ஆசிரியர் தூஸிடைடிஸ் என்பவர். அவர் போரில் நேரிடைத் தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்றே தோன்றுகிறது. அவ்வளவு தத்ரூபமாக அந்நிகழ்ச்சிகளை வர்ணித்துள்ளார். பெலப்பனீசியப் போரைப் பற்றி எழுதும்பொழுது நாடு இருந்த நிலையையும், போர்ப் படைகள் செயலாற்றிய முறையையும், போரினால் நாடு அடைந்த தீங்குகளையும் அவர் வர்ணித்திருக்கும் முறை அபாரமானது. போரில் நீதியும் ஒழுங்கும் நிலைகுலைந்த சோகக் கதையையும் அவர் திறம்படச் சொல்லி யிருக்கிறார். பசித்தவன் பழங் கணக்குப் பார்ப்பது போல் நடந்து போன போர்களினால் ஏற்பட்ட தீங்குகளை நினைவுகூர்ந்தாவது மனித குலம் திருந்தாதா என்ற ஏக்கம் அவரது எழுத்தில் நன்கு தொனிக்கிறது. சாகித்ய அகாடமியினர் இச் சிறந்த நூலைத் தமிழிலும் தர முன் வந்தது பாராட்டத் தக்க முயற்சியாகும். திரு என். நடராசன் தமிழாக்கியுள்ள இந்த நூலின் நடை கரடுமுரடாக இல்லாமல் நன்கு தடையின்றி ஓடும் தெள்ளிய ஓடையென அமைந்திருக்குமானால் இம்முயற்சி இன்னும் வெற்றி யுடையதாக இருந்திருக்கும்.

சாகித்திய அகாடமிக்காக வெளியிட்டோர்: என். ஸி. பி. எச். பிரைவேட் லிமிடெட், 6, நல்லதம்பி செட்டித் தெரு, மவுண்டு ரோடு, சென்னை-2. விலை ரூ. 4.50.

## இந்தியத் தொழிலியக்கம் தோன்றிய வரலாறு

சென்ற நாற்பது ஆண்டுகளுக்கு மேலாகத் தொழிலாளர்களுக்காக உழைத்து வரும் தலைவர்களின் வரிசையில் ஸ்ரீ ஜி. செல்வபதி



செட்டியாருக்கு முக்கிய இடம் உண்டு. எனவே தொழிலாளர் இயக்கத்தில் பல ஆண்டுகள் நேரடியான அனுபவம் பெற்ற அவர் எழுதியுள்ள 'இந்தியத் தொழிலியக்கம் தோன்றிய வரலாறு' என்ற இந்த நூல் சென்னைத் தொழிலாளர்களின் ஆதார பூர்வமான சரித்திரமாகத் திகழ்வது இயல்பேயாகும். சென்னைத் தொழிலாளர்களின் நன்மைக்காக அரும்பாடு பட்ட திரு வி. கல்யாண சுந்தர முதலியார், பெசண்ட் அம்மையார், டாக்டர் அருண்டேல் திரு பி. சிவராவ், திரு ஜி. ராமானுஜுலு நாயுடு, திரு வாடியா முதலிய தலைவர்களின் படங்களும், அவர்கள் புரிந்த தொண்டின் விவரங்களும் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன.

கிடைக்குமிடம்: ஜி. செல்வபதி செட்டியார் 112, டிமலோஸ் ரோடு, பெரம்பூர் பாரக்ஸ், சென்னை-12. விலை: 37 நயா பைசா.

## மகத்தான யாத்திரை

**ப**கல் என்றால் என்னவென்பதை அறியாத மக்கள் உலகில் இருந்திருக்க முடியுமா? இருந்திருக்கிறார்கள். அவர்கள்தாம் பிரிட்டிஷ் தொழிலாளர்கள்: பிரிட்டிஷ் தொழிலாளர்கள் உரிமைகளுக்காகவும், பிரிட்டிஷ் பத்திரிகைகள் சுதந்திரத்துக்காகவும், பிரிட்டிஷ் பொது மக்கள் தங்கள் விடுதலைக்காகவும் பல நூற்றாண்டுகள் வரையில் போராட வேண்டியிருந்தது! பிரிட்டிஷ் தொழிலாளர்கள் விடியற்காலம் வேலைக்குச் சென்று விடுவார்கள். இரவு நேரம் கழித்தே வீட்டுக்குத் திரும்புவார்கள். எனவே வாரத்துக்கு ஒரு நாள் மாத்திரமே அவர்கள் பகலையும் சூரியனையும் காண முடிந்தது. ஆடவர்கள் பெண்கள் குழந்தைகள் உள்பட யாவரும் தொழிற்சாலைகளிலே வேலை, அரை உணவு, தூக்கம் இவற்றைத் தவிர வாழ்க்கையில் வேறு எதையும் அறியாமலே காலம் கழித்திருக்கிறார்கள்.

''மில்கள் சைத்தான் தன்மை கொண்டவை என்று வில்லியம் பிளேக் வர்ணித்தார். வாரத்தில் ஆறு நாட்கள் அதிகாலை ஐந்து மணியிலிருந்து இரவு எட்டு மணிவரையில் ஐந்து வயதுச் சிறுவர்களும் சிறுமிகளும் வேலை செய்வது வழக்கமாக இருந்தது. வேலை அதிகமாக இருந்தால் இன்னும் கூட அதிக நேரம் அவர்கள் உழைக்க வேண்டும். சில ஆலைகளில் விடியற்காலம் 3-30 மணியிலிருந்து இரவு 9-30 மணி வரையில் கூட வேலை வாங்கப்பட்டது. அடிக்கும் உதைக்கும் பயந்து அந்தச் சிறுவர்கள் உறக்கத்தை விரட்டிவிட்டுத் தினந்தோறும் 15 மணி நேரத்துக்கு மேல் தீக்கனல் போல் வெப்பமும் புழுக்கமும் நிறைந்த ஆலைகளில் யந்திரங்களைப் போல் ஓயாது வேலை செய்தார்கள். சிறுவர்கள் தூங்கி விழாமல் இருப்பதற்காகக் கசையடி கொடுத்தார்கள். சிறிது 'மனிதத் தன்மை'யுள்ள ஆலைகளில் சிறுவர்கள் தூங்கித் தள்ளாடாமல் இருப்பதற்காக 'இரும்புத்தடிகள் உபயோகிக்கக்கூடாது. பிரம்புகளைத்தான் உபயோகிக்க வேண்டும்' என்று உத்தரவிட்டிருந்தார்கள்!'' இதுபோல் இருதயத்தைப் பிளக்கும், மனத்தை நைந்து உருக வைக்கும் விவரங்கள் மகத்தான யாத்திரை என்ற இந்த பிரிட்டிஷ் தொழிற்சங்க இயக்க வரலாற்று நூலில் அடங்கியிருக்கின்றன. பிரிட்டிஷ் தொழிலாளர் இயக்கம் குப்பையிலிருந்து தொடங்கி இன்று கோபுரமாகியிருக்கிறது என்பதை பிரான்சிஸ் வில்லியம்ஸ் எழுதியுள்ள இந்த அரிய நூல் படிப்படியாக விவரித்திருக்கிறது. இதன் ஆசிரியர் ஆராய்ச்சி மிக்க இந்த நூலின் மூலம் உலகத் தொழிலாளர் இயக்கத்துக்கே பேருதவி புரிந்துள்ளார் எனலாம். தொழிலாளர் இயக்கத்தின் ஒரு சாஸ்திரமாகத் திகழும் இந்த நூலைத் தமிழில் மொழி பெயர்த்துத் தந்துள்ள ஸ்ரீ ஆர். எம். கண்ணபிரான், ஸ்ரீ சி. கோவிந்தன் இவர்களின் நன்முயற்சி பெரிதும் பாராட்டத் தக்கது.

கிடைக்குமிடம்: சமுதாயம் பிரசுராலயம், கோயமுத்தூர்-9. விலை: ரூ. 3.

## பொதுத்துறை ஆட்சி இயல்

''**இ**ந்த ஆண்டில் தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக அமைக்கும் புது முயற்சி எழுந்தோங்கியுள்ளது. பி. ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலே கற்கின்ற காட்சியைக் காணலாம். இடர்ப்பாடுகள் பல இருந்தாலும், இப் பெரு முயற்சியில் நாம் வெற்றிபெறுவது திண்ணம்.'' சென்னை கல்வி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் எழுதியுள்ள இந்த அணிந்துரையுடன் ''பொதுத் துறை ஆட்சி இயல்'' என்ற நூல் ஆரம்பமாகிறது. பல்வேறு தொழில்கள், விஞ்ஞானம், பொருளாதாரம் முதலிய பல துறைகளிலும் தமிழ் மொழியில் தகுந்த நூல்கள் வெளி வரவேண்டியது அவசியம் என்பதை யாரும் மறுக்க முடியாது. இவ் விஷயமாகச் சென்னை அரசாங்கம் மேற்கொண்டுள்ள முயற்சி, பாராட்டத் தக்கது என்பதிலும் ஐயமில்லை. எனினும், இம் முயற்சியில் வெற்றி காணப் பல ஆண்டுகள் பாடுபட வேண்டியிருக்கும். இந்த நூலாசிரியரான ஸ்ரீ பெ. நடராசன் பல ஆங்கிலச் சொற்களுக்குக் கையாண்டுள்ள தமிழ்ச் சொற்கள் எல்லோரும் அல்லது பெரும்பாலோரும் ஒப்புக் கொள்ளக் கூடியவை என்று கூறிவிட முடியாது. உதாரணமாக, கீழ்க்கண்ட சொற்களைக் கவனியுங்கள்: Internationa Societ o c entific Management விஞ்ஞான நிர்வாக அகிலத்துவ சமூகம், Managemen of Personna நிர்வாக நேர்முகத் திறன், Easy talk o Conspiracy சதித் திட்டத் இன்சரிசமமான பேச்சு, Evacuee Property Acts நீக்கப்பட்ட சொத்துச் சட்டம், Formal Correspondence சட்டத்துக்கு இசைந்த செய்தி அறிவிப்பு, Revolving Funds சுழற்சி நிதிகள்.

தமிழாக்கம் சம்பந்தமாகக் கருத்து வேற்றுமைக்கு இடம் தரும் இவைபோன்ற பல சொற்களைத் தவிர, மற்றப்படி இவ்வரிய நூல் பெரு முயற்சியுடன் எழுதப்பட்டுள்ளது எனலாம். பொதுத் துறை ஆட்சி இயல் சம்பந்தமான வேறு நுணுக்கமான விஷயங்களையும் தெளிவாக விளக்கி எழுதப்பட்டுள்ள இந்த நூல், இந்த முதல் முயற்சி பெரிதும் போற்றத் தக்கதாகும்.

—ஜெயமணி

கிடைக்குமிடம்: ஸ்டார் பிரசுரம், 66, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை: ரூ. 5.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

**டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.**

உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அநேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆனாலும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவந்தப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூரண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது




# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

ஜெ/ப/ம.ம

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




ஆதாரவே உருவான மகராசி...அன்பைப் பொழியும் முகராசி ...அருமையான பொருள்களைத் தருவதே அவள் கைராசி! கறி கூட்டு முதல் கறிவடாம் வரையில் எதனிலும் இனிமை ...கருத்துள்ள தாய்க் குலத்திற்குக் கைகொடுக்கும் டால்டா வனஸ்பதியின் பேருதவி! தரத்திலுயர்ந்த தாவர எண்ணெய்களாலான, தூய டால்டா ...வளரும் வயதினருக்கு வேண்டிய வைட்டமின்கள் அடங்கிய வனஸ்பதி...அறுசுவைச் சமையலுக்கு உறுதுணையான டால்டா...நம்மவர்க்கே உரிமை யன்றோ ..




டால்டா வனஸ்பதி: அறுசுவைச் சமையலுக்கு உறுதுணை

DL. 70A-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.